

கி.வா.ஜ. 100 நூற்றாண்டு வெளியீடு

# பெரிய புராண விளக்கம்

பகுதி 10

கி. வா. ஜ.

1/2



# கி.வா.ஜகந்நாதன்

தமிழ்த் தாத்தாவின் தலை மாணக்க ராகத் திகழ்ந்து அல்லயன்ஸ் தாத்த ாவின் குடும்பத்தில் ஒருவராகத் திகழ்ந்து; என்றென்றும் பழமைக் கும், புதுமைக்கும் பாலமாகத் திகழ்ந்து, பல தலைமுறைகளுக் கும் மேலாகப் பயன் தரக்கூடிய தமிழ்ப் பொக்கிஷத்தை வழங்கிச் சென்றவர்.

இவரது எழுத்தில் இருக்கும் ஆழம், கனம் - இரண்டும் இவரது புலமை யின் ஆற்றலையும், பரந்த சிந்தனை யின் வீச்சையும் காட்டும்.

இவரது பேச்சிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு வாக்கியத்திலும் 'சிலேடை' புலப்படும்.

(தமிழ்) தாய்க்கு இனிய மகனாகி, ஆசானுக்குச் சிறந்த மாணாக்கராகி, 'கலைமகளு'க்கே ஆசிரியராகத் திகழ்ந்த அபூர்வ மனிதர்.

*- பதிப்பகத்தார்*

1/2

# பெரிய புராண விளக்கம்

பகுதி-10

(திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம்)

(பாகம் - 1)

கி. வா. ஜகந்நாதன்



கலா நிலையம்
ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.

1/2

# ஆசி கேட்கும் அன்பு தாசன்

வயதாகிவிட்டால் என்ன! பழைய நினைவுகளும் மறந்தா போகும்! முதுமை என்பது உடலில் ஏற்படுமே ஒழிய உள்ளத்தில் அல்ல. பெரும்பாலான மக்கள் வயது ஏற ஏற, தன் இளமைக் கால பருவத்தை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து, அந்தக் காலம் மறுபடியும் வராதா என ஏங்குவர். பணக்காரர்கள், தனக்குச் செல்வம் வந்து சேரும் முன் இருந்த காலத்தை எண்ணி எண்ணி ஏங்கி, நாம் அன்றைய நிலையில் எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தோம், அந்த மகிழ்ச்சி இன்றைக்குக் கிடைக்காதா என்று ஏங்குபவர்கள்தான் அதிகம். ஆனால், முதியவருக்கு இளமையும் வராது; செல்வம் படைத்தவருக்கு தன் பழைய நிலைக்குப் போகவும் முடியாது. இதுதான் இயல்பு. நாம் ஏதோ ஒரு பெரிய தத்துவத்தை இங்கே உதிர்த்துவிட்டோம் என்று யாரும் தயவு செய்து எண்ணி ஏமாற வேண்டாம். இந்த இயல்புதான் வாழ்க்கை; இந்த வாழ்க்கைதான் இலக்கியம்.

கோவலன், கண்ணகி, மாதவி இவர்களின் வாழ்க்கை இலக்கியம்தான் சிலப்பதிகாரம்; ராமன், இலட்சுமணன், சீதை இவர்களது வாழ்க்கை இலக்கியம்தான் கம்பராமாயணம்; பொதுவாக மனிதர்களுடைய வீட்டினுள்ளும், வெளியேயும் நடக்கும் நிகழ்ச்சிகளை விளக்குவதுதான் அகநானூறு, புறநானூறு. 'ஒரு பெண் நடந்து வந்தாள்', 'ஒரு ஆண்மகன் நடந்து வந்தான்' என்பது போன்ற தொடர்களை எழுதுவது நிகழ்ச்சி. ஆனால், இதையே, 'அந்த மான் விழியாள் அன்னம் போல அழகுபட நடந்து வந்தாள்' என்றும், 'அந்தக் கட்டிளங்காளையைப் போன்ற ஆண்மகன் மதம்பிடித்த யானையைப் போல, வீறு கொண்டு நடந்து வந்தான்' என்று உபமானம் உபமேயங்களுடன், இயற்கை யின் அழகையும் சேர்த்துச் சொல்லும் போது, அது இலக்கியமாகிறது.

இயல்பான வாழ்க்கை நிகழ்ச்சியை, இலக்கியமாக மாற்றுவது ஒரு தனிக் கலை! இதற்கு ஆற்றலுடன் கூடிய சிந்தனை அவசியம். நம்மிடையே வாழ்ந்த பல மேதாவி களுக்கு இத்தகைய ஆற்றலும் அறிவும் மிகுந்திருந்தது. ஔவையார், கம்பர், இளங்கோவடிகள், ஒட்டக்கூத்தர் என்று செல்லும் இந்த முடிவிலா பட்டியலின் விவரம் நமக்குத் தேவையில்லை. ஆனால், இவர்கள் இது போலச் செய்த அரிய இலக்கியங்களைப் புரிந்து கொண்டு, அதற்குத் தெளிவான, ஆழமான, இலக்கியத் தரம் குறையாமல், அழகு தமிழில் விளக்கம் சொன்னவர்களும், சொல்பவர்களும் பலர் உண்டு. இவர்கள் இன்றைய சூழலில், மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் மொழி நடையில், காலத்திற்கேற்ற சொற்களைப் பயன்படுத்தி, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைந்தனர். இப்படிப்பட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் 'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.

தொல்காப்பியம் என்றாலே, புரிந்து கொள்வது மிகவும் கடினம் என்ற நிலையை மாற்றி, 'பயப்படாதீர்கள்' என்ற தொடரை ''கலைமக'ளில் எழுதினார். கவிதை புனைவது கவிஞர்களின் வேலை என்ற கலக்கத்தை கவி பாடலாம் என்ற நூலின் மூலம் போக்கினார். கம்ப ராமாயணத்தில் இருக்கும் தமிழின் அழகையும், நடையின் நளினத்தையும் அழியா அழகு என்ற நூலின் மூலம் அழகுபட விளக்கியுள்ளார். திருமுருகாற்றுப்படை விளக்கத்தின் மூலம் மோட்சத்திற்கு 'வழிகாட்டி'யுள்ளர். கந்தர் அநுபூதி என்னும் கடலில் மூழ்கி, அதிலுள்ள முத்துக்களை எடுத்துக் கோத்து ஞான மாலையைத் தந்த ஞானப்பிரகாசனார் அவர்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் நடையில் கடினம் இருக்காது; ஆனால், கன்னித் தமிழ் மிளிரும்படி ஒரு கலைஞன் தியாகம் இருக்கும். காவியத்தை ஓவியமாக்கி, சித்திர மேகலையுடன் இலங்கைக் காட்சிகளைக் காட்டி, தமிழுக்கு ஒரு புதுமெருகு ஊட்டி, தமிழை ஒரு அதிசயப் பெண்ணாக்கி, விளையும் பயிர் முதல் பெரிய புராணம் வரை பேசியிருக்கிறார், வாழும் தமிழாக எழுதியிருக்கிறார்.

இவரது முருகன் பெருமையையும், கந்தவேள் கதையமுதத்தையும் படிக்கும் தமிழ் அன்பர்களின் ஒரு சாண் வயிறு கண்டிப்பாக நிரம்பி விடும் தன்மை கொண்டது. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கூறும் போது, அது அறுந்த தந்தியாக இல்லாமல், பவழ மல்லியாக மணக்கும், நவக்கிரகம் போல நிரம்பி வழியும் ஆற்றல் படைத்தது. கிழவியின் தந்திரத்தை சகல கலா வல்லியாக மாற்றிய நாம் அறிந்த கி.வா.ஜ, சின்ன ராஜா அல்ல; ஒரு

ஆத்ம ஜோதி. இவருடைய நாடோடிப் பாடல்களும், தமிழ்ப் பழமொழிகளும், வாழ்க்கைச் சுழலை கண்டறியாதன கண்டேன் என்று விளக்கி, நமக்கு அமுத மொழியினால் தமிழ் உதயத்தைக் காட்டிய அகஸ்தியர்.

அல்லயன்ஸ் நிறுவனர் குப்புஸ்வாமி ஐயர், கி.வா.ஜ. அவர்களைத் தன் குடும்பத்தில் ஒருவராகக் கருதிப் பழகிவந்தார். கி.வா.ஜ. அவர்களும், இவரைத் தன் தந்தையாகக் கருதி வந்தார். அந்தக் காலக் கட்டங்களில் ஒருவருக்கொருவர் கலந்தாலோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார்களாம். கி.வா.ஜ. வின் முதல் நூலான வழிகாட்டி குப்புஸ்வாமி ஐயரால் வெளியிடப்பட்டது. அதே போல் அல்லயன்ஸ் அச்சகம் ஆரம்பித்த போது, கி.வா.ஜ.வின் உதயம் என்ற நூல்தான் முதன் முதலாக அச்சிடப்பட்டது. இந்த நூல் இதற்கென்றே பிரத்தியேகமாக எழுதப்பட்டதாம்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் ஆற்றலைக் கண்டு வியந்தவர் அல்லயன்ஸ் ஐயர். அல்லயன்ஸ் ஐயர், கி.வா.ஜ., கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. குமாரசாமி, கு.ப.ரா., த.நா. சேனாபதி, தி.ஜ.ர என்ற குழுமத்தின் சேர்க்கைதான் ‘அல்லயன்ஸ்’. கஷ்டப்பட்டு, நஷ்டப்பட்டு இருப்பினும் இஷ்டப்பட்டு பதிப்புப் பணியில் ஈடுபட்ட இவர்களெல்லாம் தமிழ் மொழியை வளர்த்தார்கள் என்று சொல்வதைவிட, தமிழ் மொழியின் அழகையும், அந்த அழகினுள் பொதிந்துள்ள இலக்கிய நயத்தையும் தொடர்ந்து தமிழ் மக்களுக்கு வழங்கி வந்தனர் என்று சொன்னால் பொருந்தும். தேச சேவையிலும், மொழி வளர்ச்சியிலும் ஈடுபட்ட இவர்கள், இலக்கிய அழகையும் படம் பிடித்துக் காட்டி சாதனையாளர்கள்.

கி.வா.ஜ.வுடன் அல்லயன்ஸ் ஐயர் பாராட்டிய நெருக்கம், நம்பிக்கை எல்லாம் மற்ற எழுத்தாளர்களுக்கு சிறிது சஞ்சலத்தை ஏற்படுத்தாமல் இல்லை. இதை அவர்கள் ஐயரிடம் நேராகவே கேட்டும் விட்டனர். அதற்கு ஐயர் அமைதியாக, 'கி.வா.ஜ. எழுத்திலும், வாக்கிலும் சரஸ்வதி தேவி குடி கொண்டிருக்கிறாள். அவருடைய பெருமை யெல்லாம் இப்போது உங்களுக்குத் தெரியாது. ஆனால் தெரியும் போது நான் இருக்க மாட்டேன். அப்போது நீங்கள் எல்லாம் இதை உணர்வீர்கள்' என்று கூறிய வாக்கு, அப்படியே பலித்தது. 1940 களில் கி.வா.ஜ. அடிக்கடி வெளியூர்களுக்குச் சென்று இலக்கிய, ஆன்மிக சொற்பொழிவு ஆற்றி வந்தார். மக்களிடையே இவரது சொற்பொழிவு பெரிய வரவேற்பைப் பெற்றது. அந்தச் சமயங்களிலெல்லாம், அல்லயன்ஸ் ஐயர் கி.வா.ஜ.வைத் தமது காரில் ரயிலடிவரை விடச் சொல்வாராம். அதே போல, ஊரிலிருந்து திரும்பும் போது, அவரை அழைத்துவரத் தமது காரை அனுப்புவாராம். கி.வா.ஜ.வின் மீது தாம் கொண்ட அன்பையும், நம்பிக்கையையும் பல சமயங்களில் அல்லயன்ஸ் ஐயர் இது போன்ற செயல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் பேச்சிலும், எழுத்திலும், மொழியின் அழகு மட்டுமல்ல, சிலேடையும் உதிரும். சாதாரணமாக இந்தக் கலை எல்லோருக்கும் வந்து விடாது. தற்சமயம் இது, கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் இயல்பாய் அமைந்திருக்கின்றது. அல்லயன்ஸ் ஐயருக்கு நெருக்கமாக இருந்த பல எழுத்தாளர்கள் 'கலைமகள்' காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தனர். தினமும் அவர்கள் வேலை நேரம் முடிந்த பின்பு 'அல்லயன்ஸ்'ஸில் கூடுவது

வழக்கம். ஒரு சமயம், அல்லயன்ஸ் ஐயரின் துணைவியார், இவர்களுக்கு 'உப்புமா' செய்து கொடுத்தார். அதைக் கையில் வாங்கிக் கொண்ட கி.வா.ஜ., ''உப்புமா என்றால் என்ன தெரியுமா?'' என்று கேள்வி கேட்டுவிட்டு, விளக்கமும் கொடுத்தாராம். உப்புமாவை சாப்பிட்டதும் தாகம் எடுக்குமாம். உடனே தண்ணீர் குடிப்போம். வயிற்றிலுள்ள உப்புமாவும், தண்ணீரும் சேர்ந்து வயிற்றை 'உப்ப'ச் செய்துவிடும். அதனால் 'உப்புமா' என்று பெயர் வந்தது' என்று சொன்னாராம். இப்படிப் பல தகவல்களை எனது தந்தையார் அவ்வப்போது சொன்னது உண்டு. அவற்றிலிருந்து சிலவற்றை நான் இந்தச் சமயத்தில் பகிர்ந்து கொள்கிறேன்.

கி.வா.ஜ. அவர்கள் திருவல்லிக்கேணியில் குடியிருந்த போது, அவரது குழந்தைக்கு உடல் நலம் சரியில்லாத நேரங்களில், கி.வா.ஜ.வின் துணைவியாரும், தமக்கையாரும் - நேராக மைலாப்பூரிலுள்ள அல்லயன்ஸ் ஐயர் வீட்டிற்கு வந்து விடுவார்களாம். குழந்தைக்கு மருத்துவ வசதிகளை ஏற்படுத்தித் தந்து, தனது வீட்டிலேயே பகல் பொழுது தங்கி ஒய்வெடுக்கச் சொல்லி, மாலையில் சூரிய வெப்பம் தணிந்த பிறகு ரிக்ஷாவில் அனுப்பிவைப்பாராம் அல்லயன்ஸ் ஐயர். இந்தச் செய்தியை மதுகரம் அம்மையார் சொல்லும் போதெல்லாம், அவரது வாயிலிருந்து வந்த வார்த்தைகளை விட, கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்தான் அதிகம். அன்பினால் விளைந்த இந்தப் பண்பை கி.வா.ஜ. அவர்களே ஒரு முறை கடிதம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். 'ஸ்ரீ குப்புஸ்வாமி ஐயர் அவர்களுக்கு... நீங்கள் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகளே இல்லை... நான்

அனுமான் அல்ல, என் மார்பைத் திறந்து காட்ட. இருந்தாலும் மனத்திலிருந்து சொல்கிறேன் நன்றி' என்று எழுதியுள்ளார்.

அல்லயன்ஸ் ஐயர் கடைசிவரை மிகவும் எளிமையாகவே வாழ்ந்து வந்தார். எங்கு சென்றாலும் 'டிராமி'ல்தான் செல்வார். அப்படி செல்லும் போதுகூட ஏதாவது 'புரூப்' படித்துக் கொண்டுதான் செல்வார். அப்போது ஏதாவது சந்தேகம் வந்துவிட்டால், 'காபியிங் பென்சி'லால் உள்ளங்கையில் குறித்து வைத்து, நேராக கி.வா.ஜ. அவர்கள் வீட்டிற்குச் சென்று 'துப்பு, துப்பு' அதாவது துப்பு கிடைத்துவிட்டது என்று கூறுவாராம். கி.வா.ஜ. அவர்களும் சிரித்துக் கொண்டே, இரண்டு கைகளையும் நீட்டி, 'துப்புங்கள், ஏந்திக் கொள்கிறேன்' என்று சிலேடையாகச் சொல்வாராம்.

''தமிழ்நாட்டின் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒன்றிரண்டு பேரைத் தவிர, மற்ற அத்தனைபேர் புத்தகங் களையும் ஐயர் போட்டிருக்கிறார். இதற்கென்ன காரணம்? பிரசுரத் தொழிலில் தமிழ் நாட்டில் உள்ள மற்றவர்களைவிட இவர் என்ன பெரிய நிபுணரா? பணம் பெருத்தவரா? இலக்கியச் சுவை நிறைந்தவரா? எப்படி அவரிடம் எல்லா எழுத்தாளர்களும் சிக்கினார்கள்?'' என்று வேறு சில பிரபல பிரசுரகர்த்தர்களே ஆச்சரியப்படுகிறார்கள். இதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு... ''அவர் எந்த எழுத்தாளரையும் - அவர் சிறந்தவரோ இல்லையோ - மிக மிகக் கண்ணியாகவும் மதிப்போடும் வரவேற்று உபசரிக்கும் அருங்குணம் ஐயரிடம் இயல்பாய் அமைந்திருந்தது... ஒவ்வோர் எழுத்தாளருக்கும் தாம் ஒரு வள்ளலாக இருக்க வேண்டும் என்பதுதான் ஐயரின் உள்ளூற ஆசை'' என்று தி.ஜ.ர. அவர்கள் எழுதியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் கடைசி காலக் கட்டத்தில், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போதெல்லாம் அவர், என் பாட்டனாரைப் பற்றி மிகவும் உயர்வாகப் பேசுவார். அவர் வீட்டிற்கு விருந்தினர் எவரேனும் வந்தால், இன்னாருடைய பேரன் என்று பெருமையுடன் அறிமுகம் செய்து வைப்பார். அந்தச் சமயங்களில் அவருடைய முகத்தில் மகிழ்ச்சி பொங்கும். ஒரு நாள் 'புரூப்' எல்லாம் படித்து முடித்த பிறகு, அவர் என்னிடம், ''பேரன் என்றால் என்ன என்று சொல்?'' என்று கேட்டார். பெருங்கடல், காலி லோட்டாவைப் பார்த்து, 'உன்னிடம் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது?' என்று கேட்பது போல இருந்தது. அவரிடம் நான் கொண்ட நெருக்கத்தினால், அசடு வழிய சில பதில்களைக் கூறினேன். பிறகு, அவரே சொன்னார்: 'பெயரைச் சொல்பவன் பேரன். குப்புஸ்வாமி ஐயரின் பெயரைச் சொல்பவன் ஸ்ரீநிவாசன்' - என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டி அனுப்பி விட்டார். அதன் பிறகு சிறிது நாள்களிலேயே அவர் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

என் பாட்டனார் இறைவனடி சேர்ந்த போது, கி.வா.ஜ. அவர்கள் இரண்டு வெண்பாக்களை இயற்றினார். அவை:

அண்டும் விரோதியாண்டவணி ஈரேழில்
கொண்ட முருகன் திருத்தாள் கூடினன் - மாண்டுதமிழ்
நூலைக் குவித்து நுவல் குப்புஸ்வாமி பேர்
கேலு மந்தன ருளனாம் கோ.
அன்பில் உயர்ந்தோன் நன் காற்றுபகாரத்துயர்ந்தோன்
தன்புடையே நன்மை தனை ஓரான் - இன்சொல்லான்
மாநடராஜப் பேரான் வாய்த்த குப்பசாமியைய ரென்ற
பெயர் கொண்ட அவர்.

இப்படி என் பாட்டனாரைப் பாராட்டிய கி.வா.ஜ., தன் கடைசி காலத்தில் என்னை என் பாட்டனாருடன் ஒப்பிட்டுப் பாராட்டிக் கூறிய போது, நன்றி சொல்ல அப்போது எனக்குத் தோன்றவில்லை; ஆனால், இப்போது சொல்ல நினைக்கும் போது அவர் உயிருடன் இல்லை. அவருடைய நூற்றாண்டில் அவர் எழுதிய நூல்களை வெளியிடுவதன் மூலம் அந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நன்றியின் மூலம் அந்த இருவரின் ஆத்மாக்களும் மகிழ்ந்து, நம் மீது ஆசி அருளட்டும்.

- அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்.

## பதிப்புரை

பெரிய புராணத்தின் பத்தாவது பகுதியாக இதில் இருப்பது, திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரின் முதல் பாகமாகும். இதில் பெற்றோர் மனையறம், திருவவதாரம், குழந்தைப் பருவம், பொய்கைக் கரை அடைதல், சிவஞானம் உணர்தல் முதலியவற்றிலிருந்து, பெரிய புராணத்தின் இடைப் பகுதியான முத்துச் சிவிகை பெறுதல் வரை ஆசிரியர் விளக்கி யுள்ளார். இந்தப் பகுதியிலுள்ள சில பிழைகளைத் திருத்தி அமைத்துத் தந்த வாகீச கலாநிதி கி.வா.ஜ.வின். மாணவரான பேராசிரியர் மயிலம் வே. சிவசுப்ரமணியம் அவர்களுக்கு எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம்

பெரிய புராணத்தில் 6-ஆவதாக உள்ள வம்பறாவரி வண்டுச் சருக்கத்தில் முதலில் உள்ளது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம். அதில் வரும் முதற் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'வைதிக சமய வழி தழைப்பை அடைந்து ஓங்கி நிற்கவும், மிக்க சிறப்பைப் பெற்ற சைவ சமயத்துறை விளக்கத்தைப் பெறவும் உயிர்களினுடைய பரம்பரை விளங்கவும் தம்முடைய தூயதாகிய திருவாய் மலர்ந்து அமுதருளிய குளிர்ச்சியைப் பெற்ற பயிர்களின் வளம் நிரம்பிய வயல்களைக் கொண்ட புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் புரிந்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவடிகளாகிய செந்தாமரை மலர்களை அடியேம் அடியேமுடைய தலையின் மேல் வைத்துக் கொண்டு கும்பிட்டுவிட்டு அந்த நாயனாரை வணங்கி விட்டு அந்த நாயனார் புரிந்தருளிய திருத்தொண்டுகளை வாழ்த்தி விட்டு இனிமேல் பாடத் தொடங்குவோம்.' பாடல் வருமாறு:

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்."

இது சேக்கிழார் கூற்று. வேதநெறி - வைதிக சமயவழி. தழைத்து - தழைப்பை அடைந்து. ஓங்க - ஓங்கி நிற்கவும். மிகு - மிக்க சிறப்பைப் பெற்ற. சைவத்துறை - சைவ சமயத்துறை. விளங்க - விளக்கத்தைப் பெறவும். ப்: சந்தி. பூதம்பரம்பரை - உயிர்களினுடைய பரம்பரை. பூத: ஒருமை பன்மை மயக்கம். பொலிய - விளங்கவும். ப்: சந்தி. புனித - தம்முடைய தூயதாகிய. வாய் - திருவாயை. மலர்ந்து - திறந்து. அமுத - அமுதருளிய. சீத - குளிர்ச்சியைப் பெற்ற. வள - பயிர்களின் வளம் நிரம்பிய. வயல் - வயல்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். புகலி - புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் புரிந்தருளிய. த்: சந்தி. திருஞான சம்பந்தர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. பாத - திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். மலர் - செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். தலைக்கொண்டு - அடியேம் அடியேமுடைய தலையின் மேல் வைத்துக் கொண்டு கும்பிட்டுவிட்டு அந்த நாயனாரை வணங்கி. திருத்தொண்டு - அந்த நாயனார் புரிந்தருளிய திருத்தொண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். பரவுவாம் - வாழ்த்திவிட்டு இனிமேல் பாடத் தொடங்குவோம்.

பின்பு உள்ள 2-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'பகைவர்கள் ஏறாத கன்னித் தன்மையைப் பெற்ற திருமதிலினுடைய பக்கத்தில் மேகங்கள் நெருங்கித் தவழும் கழுமலமாகிய சீகாழி என்னும் பழைய ஊர் தம்முடைய தலையின் மேல் தங்கியிருக்கும் பிறைச் சந்திரனைப் புனைந்துள்ள சிலம்புகளை அணிந்து கொண்டு விளங்கும் செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளைப் பெற்றவராகிய பிரமபுரீசருக்கு உரிய நிலை பெற்று விளங்கிய சைவசமயத் துறையில் இருந்த

சைவர்களினுடைய பரம்பரையில் தோன்றிய குடும்பங்களைப் பெற்ற சோழ மன்னர்களுக்கு உரிய பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு செல்வ வளத்தையும், வயல்களின் வளத்தையும் வழங்கும் சோழநாடு தோற்றப் பொலிவை அடையுமாறு நிலாவியது.' பாடல் வருமாறு:

"சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்தம்
மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளம் தருநாடு பொலிவெய்த நிலவியதால்
கன்னிமதில் மருங்குமுகில் நெருங்குகழு மலமூதூர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. கன்னி - பகைவர்கள் ஏறாத கன்னித்தன்மையைப் பெற்ற. மதில் - திருமதிலினுடைய. மருங்கு - பக்கத்தில். முகில் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கு - நெருங்கித் தவழும். கழுமல - கழுமலமாகிய சீகாழி என்னும். மூதூர் - பழைய சிவத்தலம். சென்னி - தம்முடைய தலையின் மேல். வளர் - தங்கியிருக்கும். மதி - பிறைச்சந்திரனை. அணிந்த - புனைந்துள்ள சிலம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். அணி - அணிந்து கொண்டு விளங்கும். சேவடியார் தம் - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளைப் பெற்றவராகிய பிரமபுரீசருக்கு உரிய. அடி: ஒருமை பன்மை மயக்கம். பிரமபுரி - சீகாழி. தம்: அசைநிலை. மன்னிய - நிலைபெற்று விளங்கிய. சைவத் துறையின் - சைவ சமயத்துறையில். வழிவந்த - இருந்த சைவர் களினுடைய பரம்பரையில் தோன்றிய. குடி - குடும்பங் களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வளவர் - சோழ மன்னர்கள் ஆட்சி புரியும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு.

வளம் - செல்வ வளத்தையும் வயல்களின் வளத்தையும்; ஒருமை பன்மை மயக்கம். தரு - வழங்கும். நாடு - சோழநாடு. பொலிவு - தோற்றப் பொலிவை. எய்த - அடையுமாறு. நிலவியது - நிலைநின்று விளங்கியது. ஆல்: அசைநிலை.

பிறகு உள்ள 3-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சிவத்தலமாகிய சீகாழி வேதியர்களுடைய வேதபாடசாலைகளில் வேதங்களை அத்தியயனம் செய்யும் பிரமசாரிகள் பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக இருக்கும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாகவே அத்தியயனம் செய்து ஓதும் இனிய நாதம் வளர்ந்து நிற்கும் கமுக மரங்கள் வளர்ந்திருக்கும் செழிப்பைப் பெற்று விளங்கும் பூம்பொழில் வெளியைச் சுற்றியிருக்க தனக்கு வேறு எந்த நகரமும் ஒப்பு இல்லாத நகரமாகிய அந்தச் சீகாழி சிறந்து ஓங்கி விளங்குவதால் கலியுகத்தின் இறுதி நாளில் அல்லாமலே எந்தக் காலத்திலும் சமுத்திரத்தில் அமிழாமல் அதன் மேல் மிதப்பது என்று கூறும் பெருமையைப் பொருந்தியிருப்பது.' பாடல் வருமாறு:

"அப்பதிதான் அந்தணர்தம் கிடைகள்அரு மறைமுறையே
செப்பும்ஒலி வளர்பூகச் செழும்சோலை புறம்சூழ
ஒப்பில்நகர் ஓங்குதலால் உகக்கடைநாள் அன்றியே
எப்பொழுதும் கடல்மேலே மிதப்பதென இசைந்துளதால்."

அப்பதிதான் - அந்தச் சிவத்தலமாகிய சீகாழி. தான்: அசை நிலை. அந்தணர் தம் - வேதியர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. கிடைகள் - வேத பாடசாலைகளில். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு

அருமையாக இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். முறையே - முறையாகவே. செப்பும் - அத்தியயனம் செய்யும் பிரமசாரிகள் அந்த வேதங்களை ஓதும். ஒலி - இனிய நாதம். வளர்பூக - கமுக மரங்கள் வளர்ந்து நிற்கும். பூக: ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செழும் - செழிப்பைப் பெற்று விளங்கும். சோலை - பூம்பொழில். புறம் - சீகாழியின் வெளியில் உள்ள இடத்தை. சூழ - சுற்றியிருக்க. ஒப்பு - தனக்கு வேறு எந்த நகரமும் சமானம். இல் - இல்லாத; இடைக்குறை. நகர் - நகரமாகிய அந்தச் சீகாழி. ஓங்குதலால் - ஓங்கி விளங்குவதால். உகக்கடைநாள் - இந்தக் கலியுகத்தின் இறுதிநாளில். அன்றியே - அல்லாமலே. எப்பொழுதும் - எந்தக் காலத்திலும். கடல் - சமுத்திரத்தில் அமிழாமல். மேல் - அதன் மேல். ஏ: அசை நிலை. மிதப்பது என - மிதப்பது என்று கூறும் பெருமையை. என: இடைக்குறை. இசைந்துளது - பொருந்தியிருப்பது. உளது: இடைக்குறை. ஆல்: ஈற்றசை நிலை.

பின்பு வரும் 4-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திருமால், பிரமதேவன் முதலாக உள்ள தேவர்கள் தங்களுக்குள் அடங்குமாறு கலியுகத்தின் கடைசிக் காலத்தில் எழுகின்ற சமுத்திரத்தின் நீர் வெள்ளங்கள் விரிந்த ஒளியை வீசும் பெரிய மாணிக்கங்களைப் பதித்த திருமதிலுக்குள் உள்ள மேடையின் மேல் வீசிய அலைகளினுடைய எழுதியவற்றைப் போன்ற கோடுகள் அந்தத் திருமதிலினுடைய அடியிலும் வெளியிலும் சுற்றியிருப்பவை பொங்கி எழுகின்ற அலைகள் கலியுகத்தின் இறுதிக் காலத்தில் வரிகளைப் பெற்ற வாசுகி என்னும் பாம்பாகிய கயிற்றைச் சுற்றி மந்தர மலையைச் சுற்றிக் கட்டிய கயிற்றைப் போல விளங்கும்.' பாடல் வருமாறு:

"அரிஅயனே முதல்அமரர் அடங்கஎழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா மணிப்பதணம் மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதல் புறம்சூழ்வ பொங்கோதம் கடைநாளில்
வரிஅரவ மந்தரம்சூழ் வடம்போல வயங்குமால்."

அரி - திருமால். அயன் - பிரமதேவன். ஏ: அசை நிலை. முதல் - முதலாக உள்ள. அமரர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அடங்க - தங்களுக்குள் முழுகி அடங்குமாறு. எழும் - கலியுகத்தின் கடைசிக் காலத்தில் பொங்கி எழும். வெள்ளங்கள் - சமுத்திரத்தின் நீர் வெள்ளங்கள். விரிசுடர் - விரிந்த ஒளியை வீசும். மா - பெரிய. மணி - மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பதணம் மீது - திருமதிலுக்குள் உள்ள மேடையின் மேல். எறிந்த - வீசிய. திரை - அலைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். வரைகள் - எழுதியவற்றைப் போன்ற கோடுகள். புரிசை - அந்தத் திருமதிலினுடைய. முதல் - அடியிலும். புறம் - வெளியிலும். சூழ்வ - சுற்றியிருப்பவை. பொங்கு - பொங்கி எழும். ஓதம் - அலைகள்; ஒருமை பன்மை மயக்கம். கடை நாளில் - இந்தக் கலியுகத்தின் இறுதிக் காலத்தில். வரி - கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அரவ - வாசுகி என்னும் பாம்பு. மந்தரம் - மந்தர மலையை. சூழ் - சுற்றிக் கட்டிய. வடம் போல - கயிற்றைப் போல. வயங்கும் - விளங்கும். ஆல்: ஈற்றசை நிலை.

பின்பு உள்ள 5-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வளப்பம் பொருந்தியிருக்கும் அந்தச் சீகாழியின் வெளிப்பக்கத்தில் உள்ள வயல்களினுடைய பக்கத்தில் நறுமணம் கமழும் பசுமையாகிய இலைகள் நெருங்கியுள்ள இதழ்கள் விளங்கும் நீரில் மலர்ந்திருக்கும் பக்குவத்தைப் பெற்ற விசாலமாக உள்ள செந்தாமரை மலர்களோடு இடம்

விரிந்து நிலவும் நீர் நிரம்பிய சமுத்திரத்தின் மேல் மலர்ச்சியைப் பெற்று உதயமாவதாகிய ஒரு சூரியன் என்று எண்ணி இளமைப் பருவத்தைக் கொண்ட பல சூரியர்கள் மலர்ச்சியைப் பெற்று உதயமானாற் போல விளங்குபவை பல தடாகங்கள் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடைமிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தடமலரால்
களம்பயில்நீர்க் கடல்மலர்வ தொருபரிதி எனக்கருதி
இளம்பரிதி பலமலர்ந்தாற் போல்உள இலஞ்சிபல."

வளம் - வளப்பம். பயிலும் - பொருந்தியிருக்கும். புறம் பணைப்பால் - அந்தச் சீகாழிக்கு வெளிப் பக்கத்தில் உள்ள வயல்களினுடைய பக்கத்தில். பணை: )ஒருமை பன்மை மயக்கம். வாச - நறுமணம் கமழும். ப்: சந்தி. பாசடை - பசுமையாகிய இலைகள்; ஒருமை பன்மை மயக்கம். மிடைந்த - நெருங்கியுள்ள. தளம் - இதழ்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொலியும் - விளங்கும். புனல் - நீரில். செந்தாமரைச் செவ்வித் தடமலரால் - மலர்ந்திருக்கும் பக்குவத்தைப் பெற்ற விசாலமாக உள்ள செந்தாமரை மலர்களோடு; உருபு மயக்கம். மலர்: ஒருமை பன்மை மயக்கம். களம் பயில் - இடம் விரிந்து நிலவும். நீர் - புனல் நிரம்பிய. க்: சந்தி. கடல் - சமுத்திரத்தின் மேல். மலர்வது - மலர்ச்சியைப் பெற்று உதயமாவதாகிய. ஒருபரிதி - ஒரு சூரியன். என - என்று; இடைக்குறை. க் : சந்தி. கருதி - எண்ணிக் கொண்டு. இளம்பரிதி பல - பல இளஞ் சூரியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மலர்ந்தாற் போல் - மலர்ச்சியைப் பெற்று உதயமானாற் போல விளங்குபவை. இலஞ்சி பல - பல தடாகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். உள - இருக்கின்றன; இடைக்குறை.

அடுத்து வரும் 6-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தங்களுடைய திருவுள்ளங்களில் முறையாக அத்தியயனம் செய்து கற்றுக் கொள்ளும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ச்சி பெற்ற அந்தணர்கள் புரியும் ஹோமங்களில் எழும் புகையினால் இராத்திரி வேளையும், சிவபக்தர்கள் கிளர்ச்சியை அடைந்து தங்களுடைய திருமேனிகளின் மேல் பூசிக் கொண்ட விபூதியினுடைய பிரகாசத்தால் பொருந்திய நடுப்பகல் வேளையும் மலர்ச்சியை அடைந்து அளந்து தெரிந்து கொள்ள முடியாத பல ஊழிக்காலங்களில் செய்வதால் இந்த அகலமாகிய நிலவுலகத்தில் திகழ்ந்த அந்தப் பழைய ஊராகிய சீகாழிக்கும் இவற்றைத் தவிர வேறாக உள்ள இரவு வேளையும், பகல் நேரமும் வேண்டாத மிகுதியானவை.' பாடல் வருமாறு:

"உளங்கொள்மறை வேதியர்தம் ஓமதூ மத்திரவும்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் செழுமியநண் பகலுமலர்ந்
தளந்தறியாப் பல்லூழி ஆற்றுதலால் அகலிடத்து
விளங்கியஅம் மூதூர்க்கு வேறிரவும் பகலும்மிகை."

உளம் - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். கொள் - முறையாக அத்தியயனம் செய்து கற்றுக் கொள்ளும். மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ச்சி பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வேதியர்தம் - அந்தணர்கள் புரியும்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. ஓம - ஹோமங்களில் எழும்; ஒருமை பன்மை மயக்கம். தூமத்து - புகையினால். இரவும் - இராத்திரி வேளையும். கிளர்ந்த - கிளர்ச்சியை அடைந்து தங்களுடைய திருமேனிகளின் மேல் பூசிக் கொண்ட. நீற்று - விபூதியினுடைய. ஒளியில் -

பிரகாசத்தால்; உருபு மயக்கம். செழுமிய - பொருந்திய. நண்பகலும் - நடுப்பகல் வேளையும். மலர்ந்து - மலர்ச்சியை அடைந்து. அளந்து அறியா - அளந்து பார்த்துத் தெரிந்து கொள்ள முடியாத. ப்: சந்தி. பல்லூழி - பல ஊழிக் காலங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ஆற்றுதலால் - செய்வதால். அகலிடத்து - இந்த அகலமாகிய நிலவுலகத்தில். விளங்கிய - புகழோடு திகழ்ந்த. அம்மூதூர்க்கு - அந்தப் பழைய ஊராகிய சீகாழிக்கு. வேறு - இவற்றைத் தவிர வேறாக உள்ள. இரவும் - இரவு வேளையும். பகலும் - பகல் நேரமும். மிகை - வேண்டாத மிகையானவை.

அடுத்து வரும் 7-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'விரிந்துள்ள சம்பா நெற்பயிர்களும், குறுவை நெற்பயிர்களும், மணக்கத்தை நெற்பயிர்களும், வேறு பல பயிர்களும் விளைந்து நிற்கும் வயல்களில் மலர்ந்திருக்கும் செந்தாமரை மலர்களாகும் பொங்கி எழும் நெருப்பில் வயல்களினுடைய வரப்புக்களில் வளர்ந்து நிற்கும் தேமா மரங்களில் பழுத்திருக்கும் பழங்கள் முதிர்ச்சியைப் பெற்றிருப்பதனால் வழியும் தேனாகிய நறுமணம் வீசும் புத்துருக்கு நெய்யை இடையீடு இல்லாமல் எப்பொழுதும் நீளமான அந்த மாமரங்களில் உள்ள இலைகளினுடைய நுனிகளின் வழியினால் ஒழுகி விழுவதனால் நீண்ட காலமாக அந்தச் சிவத்தலமாகிய சீகாழியில் வளர்ந்து நிற்கும் மாமரங்களும் ஆகுதியைப் பெய்து வேள்வியைப் புரியும் தன்மையைப் பெற்றவை என்று கூறுமாறு அமைந்திருக்கின்றன.' பாடல் வருமாறு:

"பரந்தவிளை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரம்நீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்கும் தகையஎன மணந்துளதால்."

பரந்த - விரிந்துள்ள. விளை - சம்பா நெற்பயிர்களும், குறுவை நெற்பயிர்களும், மணக்கத்தை நெற்பயிர்களும் வேறு பல பயிர்களும் விளைந்து நிற்கும். வயல் - வயல்களில் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். செய்ய பங்கயமாம் - செந்தாமரை மலர்களாகும்; ஒருமை பன்மை மயக்கம். பொங்கு - பொங்கி எழும். எரியில் - நெருப்பில். வரம்பில் - வயல்களினுடைய வரப்புக்களில்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளர்ந்து நிற்கும். தேமாவின் - இனிய பழங்கள் பழுக்கும் தேமா மரங்களின் பழுத்த; ஒருமை பன்மை மயக்கம். கனி - பழங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கிழிந்த - முதிர்ச்சியைப் பெற்றிருப்பதனால் வழிந்த. மது - தேனாகிய. நறு - நறுமணம் கமழும். நெய் - புத்துருக்கு நெய்யை. நிரந்தரம் - இடையீடு இல்லாமல் எப்பொழுதும். நீள் - நீளமான. இலை - அந்த மாமரங்களில் உள்ள இலைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கடையால் - நுனிகளின் வழியினால். கடை: ஒருமை பன்மை மயக்கம். ஒழுகுதலால் - ஒழுகி விழுவதனால். நெடிது - நீண்ட காலமாக. அவ்வூர் - அந்தச் சிவத்தலமாகிய சீகாழியில் வளர்ந்து நிற்கும். மரங்களும் - மாமரங்களும். ஆகுதி - ஆகுதியைப் பெய்து. வேட்கும் - வேள்வியைப் புரியும். வேள்வி - யாகம். தகைய - தன்மையைப் பெற்றவை. என - என்று கூறுமாறு; இடைக்குறை. மணந்துளது - அமைந்திருக்கின்றன; ஒருமை பன்மை மயக்கம். உளது: இடைக்குறை. ஆல்: ஈற்றசை நிலை.

பிறகு வரும் 8-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழி மாநகரம் மேலைச் சமுத்திரத்தில் நெருப்பைப் போன்ற கிரணங்களை வீசும் சூரியன் விழுந்து அத்தமனம் ஆனபிறகு வந்த விரிந்துள்ள இரவு நேரத்தில்

வெண்மை நிறத்தைப் பெற்ற சந்திரன் ஒவ்வொரு பூம்பொழிலிலும் புகுந்து வெளிப்படும் சமயத்தில் செறிந்திருக்கும் பலவகை மலர்களிடம் அடைந்து தேனில் படிந்து மகரந்தப் பொடிகளை அளைந்து கொண்டு பழகி செவ்வந்தி மாலை நேரம் வானத்தில் எழும் சிவந்த பிரகாசத்தை வீசும் சந்திரனைப் போல விளங்கும்.' பாடல் வருமாறு:

"வேலையழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியம்
சோலைதொறும் நுழைந்துபுறப் படும்பொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுத்தோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலைஎழும் செவ்வொளிய மதியம்போல் உதியுமால்."

வேலை - அந்தச் சீகாழி மாநகரம் மேலைச் சமுத்திரத்தில். அழல் - நெருப்பைப் போன்ற; உவம ஆகுபெயர். கதிர் - கிரணங்களை வீசும் சூரியன். படிந்த - விழுந்து அத்தமனம் ஆன பிறகு. வியன் - வந்து விரிந்துள்ள. கங்குல் - இரவு நேரத்தில். வெண் - வெண்மையான நிலாவை வீசும். மதியம் - சந்திரன். சோலை தொறும் - ஒவ்வொரு பூம்பொழிலிலும். நுழைந்து - புகுந்து. புறப்படும் - வெளியில் வரும். பொழுது - சமயத்தில். துதைந்த - அந்தப் பொழில்களில் செறிந்துள்ள. மலர்ப்பால் - பலவகை மலர்களிடம்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: மகிழ மலர், நந்தியாவட்டை மலர், வேங்கை மலர், சண்பக மலர், வாகை மலர், பூவரச மலர், நாவல் மலர் முதலியவை. அணைந்து - அடைந்து. மது - தேனில். தோய்ந்து - படிந்து. தாது - மகரந்தப் பொடிகளை; ஒருமை பன்மை மயக்கம். அளைந்து - அளைந்துகொண்டு. பயின்று - பழகி. அந்திமாலை - செவ்வந்தி மாலை நேரம். எழும் - வானத்தில் எழும். செவ்வொளிய - சிவந்த பிரகாசத்தை வீசிய. மதியம் போல் - சந்திரனைப் போல. உதியும் - விளங்கும். ஆல் : ஈற்றசை நிலை.

பிறகு வரும் 9-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'விரும்புவதற்குரிய அந்தத் திருத்தலத்தில் வாழும் வேதியர்களைப் போன்று, சிறந்து மணம் வீசும் தாமரை மலர்கள் கூட தம் மென்மையான இதழ்களுடன் முப்புரி நூலாகிய பூணூலைத் தன் மேல் கொண்டால் என்ன விளங்கி, தூய்மை பொருந்திய மகரந்தப் பொடியை அணிந்து தேன்துளிகள் ததும்பித் துலங்கிட, இனிமை பொருந்த வண்டுகள் இசை பாடும் போது அத்துடன் பொருள் பொதிந்து பொருந்திய சாமவேத கீதம் முழங்குவது போல் காணும்.' பாடல் வருமாறு:

"காமர்திருப் பதியதன்கண் வேதியர்போல் கடிகமழும்
தாமரையும் புல்லிதழும் தயங்கியநூ லும்தாங்கித்
தூமருநுண் துகள்அணிந்து துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையால் செழுஞ்சாமம் பாடுமால்."

காமர் - விரும்புதற்குரிய; அழகிய. திருப்பதியதன் கண் - சீகாழியில் உள்ள. வேதியர்போல் - நாலு வேதமும் அறிந்த அந்தணர்களைப் போல. கடி - மிக்க மணம். கமழும் - வீசுகின்ற. தாமரையும் - தாமரை மலரும்; பொய்கைகளில் மலர்கின்ற செங்கமல மலர்கள் கூட. புல் இதழ் - மென்மையான இதழ்களை உடையனவாய். தூமரு -தூய்மை பொருந்திய. நுண்துகள் அணிந்து - நுண்ணிய மகரந்தப் பொடிகளைக் கொண்டு. தயங்கிய நூல் தாங்கி - பூணூலை மேலே பூண்டாலென வளிங்கிட. துளிவரு - சிறு துளிகளாக வரும். கண்நீர் - தேனாகிய நீர். ததும்பி - ததும்பிட. த்: சந்தி. தேமரு - இனிமை பொருந்தி. சுரும்பு - வண்டு. இசையால் - ரீங்காரமாகிய சங்கீதத்தால். செழும் சாமம் - பொருள் வளம் பொதிந்த சாமகீதம். பாடும் - பாடும். ஆல்: ஈற்றசை நிலை.

பின்பு வரும் 10-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் உயரமாக நிற்கும் மாடங்கள் தாங்கள் அணியும் நீளமான தங்கக் குழைகள் அசையுமாறு மலர் வேலை செய்யப் பெற்ற மேலாடையைப் பின் பக்கத்தில் தாழவிட்டு அக்கினி காரியம் வாய்ப்பாக அமைந்த நெருப்பை மூட்டிய யாகசாலைக் குண்டத்தைச் சுற்றி மெழுகுதல் உறுமாறு வெண்மையான சுண்ணாம்பை ஒழுகி நீளச் செய்யும் முழங்கும் வானத்தில் தவழும் மேகத்தைப் போன்ற கூந்தல்களையும் ஒளியை வீசுதலைச் செய்யும் வடக்குத் திசையிலுள்ள நட்சத்திரமாகிய அருந்ததியைப் போன்ற கற்பைப் பெற்ற இல்லற வாழ்க்கையை நடத்தும் உயர்குலத்திற் பிறந்த பெண்மணி களினுடைய செல்வ வளமும் அழகு வளமும் பெற்று விளங்குபவைகளாக இருக்கும்.' பாடல் வருமாறு:

"புனைவார்பொற் குழைஅசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதைஒழுக்கும்
கனைவான முகிற்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. மாடங்கள் - அந்தச் சீகாழியில் உயரமாக நிற்கும் மாடங்கள். புனை - தாங்கள் அணிந்து கொள்ளும். வார் - நீளமாக உள்ள. பொன் - தங்கத்தாற் செய்யப் பெற்ற. குழை - குழைகள்; ஒருமை பன்மை மயக்கம். அசைய - தங்கள் காதுகளில் அசைந்து அசைந்து ஆட. ப்: சந்தி. பூந்தானை - மலர் வேலை செய்யப் பெற்ற மேலாக்குக் களை; ஒருமை பன்மை மயக்கம். பின் போக்கி - பின் பக்கத்தில் தாழவிட்டு. வினை - அக்கினி காரியம். வாய்ந்த - வாய்ப்பாக அமைந்த. தழல் - நெருப்பை மூட்டிய. வேதி - யாகசாலைக் குண்டத்தைச் சுற்றி. மெழுக்கு உற - கோமயத்தால் மெழுகுதல் உறுமாறு. வெண் -

வெண்மையான. சுதை - சுண்ணாம்பை. ஒழுக்கும் - ஒழுகி நீளுமாறு செய்யும். கனை - முழங்கும். வான - வானத்தில் தவழும். முகில் - மேகத்தைப் போன்ற; உவம ஆகுபெயர். கூந்தல் - கூந்தல்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கதிர் செய் - ஒளியை வீசுதலைச் செய்யும். வடமீன் - வடக்குத் திசையில் உள்ள நட்சத்திரமாகிய அருந்ததியைப் போன்ற; உவம ஆகுபெயர். கற்பின் - கற்பைப் பெற்ற. மனை வாழ்க்கை - இல்லற வாழ்க்கையை நடத்தும். க்: சந்தி. குலமகளிர் - உயர் குலத்தில் பிறந்த பெண்மணி களினுடைய. வளம் - செல்வ வளமும் அழகு வளமும்; ஒருமை பன்மை மயக்கம். பொலிவ - விளங்குபவைகளாக இருக்கும்.

அடுத்து வரும் 11-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழியில் விள்ங்கும் அழகிய வீதிகளில் யாகத்தைச் செய்யும் சடங்காகிய அதை சிறுவர்களும் சிறுமிகளும் விளையாடல்களைச் செய்யும் ஒவ்வோர் இடத்திலும் புழுதி அடையுமாறு வகைப்படுத்தி அமைத்து வைத்து தங்கத்தால் செய்யப் பெற்ற அந்தச் சிறுவர்களும் சிறுமிகளும் தங்களுடைய இடுப்புக்களில் அணிந்திருக்கும் கிண்கிணிகளாகிய சலங்கைகள் ஒலியை எழுப்ப மூன்று சக்கரங்களைப் பெற்ற அழகிய சிறிய தேராகிய நடை வண்டியில் அமர்ந்து செலுத்தி அந்தச் சிறு தேரினால் எழும்பிய புழுதியில் குளிக்கும் வளரும் அந்தணச் சிறுவர்கள் நெருக்கமாக இருப்பவையாக விளங்கும்.' பாடல் வருமாறு:

"வேள்விபுரி சடங்கதனை விளையாட்டுப் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிண் கிணிஒலிப்ப
ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறார் நெருங்கியுள மணிமறுகு."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. மணி மறுகு - அந்தச் சீகாழியில் விளங்கும் அழகிய வீதிகளில்; ஒருமை பன்மை மயக்கம். வேள்வி - யாகத்தை. புரி - அந்தணர்கள் செய்யும். சடங்கு அதனை - சடங்காகிய அந்த யாகத்தை. விளையாட்டு - சிறுவர்களும் சிறுமிகளும் விளையாடல்களைச் செய்யும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பண்ணை தொறும் - ஒவ்வோர் இடத்திலும். பூழிஉற - புழுதி அடையுமாறு. வகுத்து - வகைப்படுத்தி. அமைத்து - அமைத்து. ப்: சந்தி. பொன் - தங்கத்தாற் செய்யப் பெற்ற. புனை - அந்தச் சிறுவர்களும் சிறுமிகளும் தங்களுடைய இடுப்புக்களில் அணிந்திருக்கும். கிண் கிணி - கிண் கிணிகளாகிய சலங்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஒலிப்ப - ஒலியை எழுப்ப. ஆழி - மூன்று சக்கரங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மணி - அழகிய; 'அடிக்கும் மணியைக் கட்டிய' எனலும் ஆம். ச்: சந்தி. சிறு தேர் - சிறிய தேராகிய நடை வண்டியில். ஊர்ந்து - அமர்ந்து அதைச் செலுத்தி. அவ்விரதப் பொடி - அந்தச் சிறு தேரால் எழும்பிய புழுதியில். ஆடும் - குளிக்கும். வாழி: அசைநிலை. வளர் - வளரும். மறைச்சிறார் - அந்தணச் சிறுவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மறை: திணை மயக்கம். நெருங்கி உள - நெருக்கமாக இருப்பவையாக விளங்கும். உள: இடைக்குறை.

அடுத்து வரும் 12-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழியின் பக்கங்கள் எல்லாவற்றிலும் ஒளியை விட்டு விளங்கும் நீளமான அழகிய வீதியில் உயரமாக நிற்கும் வெண்மையாகிய சுண்ணாம்பைப் பூசியிருக்கும் திருமாளிகைகளின் மேல் மேகங்கள் வந்து தொட்டுத் தவழும் உச்சியிலுள்ள ஒவ்வொரு நாசிகையிலும் கட்டிய துவசம் சுற்றியிருக்கும் இரவு நேரத்தில் தோன்றும்

நட்சத்திரங்கள் என்று கூறப்படும் அன்றலர்ந்த மலர்கள் மலர அடைந்த பகல் நேரத்தில் பல நிறங்களோடு உயரமாக உள்ள ஆகாயம் தளிர்த்து விளங்குவது என்று கூறுமாறு நெருக்கமாக இருப்பவையாகத் திகழும்.' பாடல் வருமாறு:

"விடுசுடர்நீள் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகம்
தொடுகுடுமி நாசிதொறும் தொடுத்தகொடி சூழ்கங்குல்
உடுஎனும்நாள் மலர்அலர உறுபகலிற் பலநிறத்தால்
நெடுவிசும்பு தளிர்ப்பதென நெருங்கியுள மருங்கெல்லாம்."

இந்தப் பாடலிலும் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. மருங்கு - அந்தச் சீகாழியினுடைய பக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றிலும். விடுசுடர் - ஒளியை விட்டு விளங்கும். நீள் - நீளமான. மணி - அழகிய. மறுகின் - வீதியில். வெண் - வெண்மையாகிய. சுதை - சுண்ணாம்பைப் பூசியிருக்கும்; வெள்ளை யடித்திருக்கும். மாளிகை - உயரமாக நிற்கும் திருமாளிகைகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். மேகம் - முகில்கள்; ஒருமை பன்மை மயக்கம். தொடு - வந்து தொட்டுத் தவழும். குடுமி - உச்சியில் உள்ள. நாசிதொறும் - ஒவ்வொரு நாசிகையிலும். நாசிகை - மூக்கைப் போன்ற மதில் உறுப்பு. தொடுத்த - கட்டியுள்ள. கொடி - துவசம். சூழ் - சுற்றியிருக்கும். கங்குல் - இரவு நேரத்தில் தோன்றும். உடு - நட்சத்திரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எனும் - என்று கூறப்படும்; இடைக்குறை. நாள் - அன்று அலர்ந்த. மலர் - மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலர - மலர. உறு - அடைந்த. பகலில் - பகல் நேரத்தில். பல நிறத்தால் - பல வர்ணங்களோடு; உருபு மயக்கம். நிறம்: ஒருமை பன்மை மயக்கம். நெடு - உயரமாக உள்ள. விசும்பு - ஆகாயம். தளிர்ப்பது என - தளிர்த்து விளங்குவது என்று கூறுமாறு. என: இடைக்குறை. நெருங்கி உள - நெருக்கமாக இருப்பவையாகத் திகழும். உள: இடைக்குறை.

அடுத்து உள்ள 13-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் உள்ள வயல்களில் இருக்கும் மடைகள் உள்ள எல்லா இடங்களிலும் மாணிக்கங்களின் குவியல் ஒளியை வீசிக் கொண்டு விளங்கும்; வயல்களில் உள்ள எந்த இடங்களிலும் கயல் மீன்கள் வெள்ளத்தைப் போல மிகுதியாகத் துள்ளிக் குதிக்கும்; அந்தச் சீகாழியின் பக்கங்களில் உள்ள எல்லா இடங்களிலும் பலவகை மலர்கள் மலையைப் போலக் குவிந்திருக்கும்; அந்தச் சிகாழியின் வெளியிடங்கள் எங்கும் யாகங்களின் தோற்றப் பொலிவு திகழும்; வேத பாடசாலைகள் உள்ள எல்லா இடங்களிலும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய சாத்திரங்கள் சூழ்ந்திருக்கும் இடங்கள் திகழும்; கிளர்ந்து எழும் மலர்கள் உள்ள எல்லா இடங்களிலும் ரீங்காரம் செய்யும் வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கும்; எல்லா இடங்களிலும் முனிவர்களின் கூட்டத்தைக் காணலாம்; திருமதிலின் மேல் எந்த இடத்திலும் தவழும் மேகங்கள் இருக்கும்.' பாடல் வருமாறு:

"மடைஎங்கும் மணிக்குப்பை; வயல்எங்கும் கயல்வெள்ளம்;
புடைஎங்கும் மலர்ப்பிறங்கல்; புறமெங்கும் மகப்பொலிவு;
கிடைஎங்கும் கலைச்சூழல்; கிளர்வெங்கும் முரல்அளிகள்;
இடைஎங்கும் முனிவர்குழாம்; எயிலெங்கும் பயில்எழிலி."

மடை - அந்தச் சீகாழியில் உள்ள வயல்களில் இருக்கும் மடைகள் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். மடை - வயலுக்கு நீர்பாயும் சிறிய கால்வாய். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மணி - மாணிக்கங்களின்; ஒருமை பன்மை மயக்கம். 'நவரத்தினங்களின்' எனலும் ஆம். க்: சந்தி. குப்பை - குவியல் ஒளியை வீசிக் கொண்டு விளங்கும். வயல் -

வயல்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். கயல் - கயல்மீன்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெள்ளம் - வெள்ளத்தைப் போல மிகுதியாகத் துள்ளிக் குதிக்கும்; உவம ஆகுபெயர். புடை - அந்தச் சீகாழியின் பக்கங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மலர்ப் பிறங்கல் - பலவகை மலர்கள் மலையைப் போலக் குவிந்திருக்கும். மலர்: ஒருமை பன்மை மயக்கம். பிறங்கல்: உவம ஆகுபெயர். புறம் - அந்தச் சீகாழிக்கு வெளியிடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடத்திலும். மகப் பொலிவு - யாகங்களின் தோற்றப் பொலிவு காணப்படும். மக: ஒருமை பன்மை மயக்கம். கிடை - வேதபாடசாலைகள் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். கலை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய சாத்திரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சூழல் - சூழ்ந்திருக்கும் இடங்கள் திகழும்; ஒருமை பன்மை மயக்கம். கிளர்வு - கிளர்ந்து எழும் மலர்கள் உள்ள; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். முரல் - ரீங்காரம் செய்யும். அளிகள் - வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கும். இடைஎங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். முனிவர் - முனிவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். குழாம் - கூடியுள்ள கூட்டத்தைக் காணலாம். எயில் - திருமதில் மேல். எங்கும் - எந்த இடத்திலும். பயில் எழிலி - மேகங்கள் தவழ்ந்து கொண்டிருக்கும். எழிலி: ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 14-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழி பிரமபுரம், வேணுபுரம், புகலி, பெருமையைப் பெற்று விளங்கும் வெங்குரு, நீர்வளத்தைப் பெற்ற தனக்கு ஒப்பாக வேறு எந்த நகரமும் இல்லாத திருத்தோணிபுரம், பூந்தராய், சிரபுரம் நகரங்களை நினைக்கும் போது முன்னால் நினைவுக்கு வரும் புறவம், சண்பை நகர், வளர்ந்து வரும் காழி, கொச்சை வயம், புகழப் பெறும் அழகிய கழுமலம் என்று ஆகும் பன்னிரண்டு அழகிய பெயர்களை உடையது.' பாடல் வருமாறு:

"பிரமபுரம், வேணுபுரம், புகலிபெரு வெங்குரு,நீர்ப்
பொருவில்திருத் தோணிபுரம், பூந்தராய், சிரபுரம்முனி
வருபுறவம், சண்பைநகர், வளர்காழி கொச்சைவயம்,
பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்."

பிரம்புரம், வேணுபுரம், புகலி - அந்தச் சீகாழி பிரமபுரம், வேணுபுரம், புகலி. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். வெங்குரு - வெங்குரு. நீர் - நீர்வளத்தைப் பெற்ற. ப்: சந்தி. பொரு - தனக்கு ஒப்பாக. இல் - வேறு எந்த நகரமும் இல்லாத; கடைக்குறை. திரு - அழகிய. த்: சந்தி. தோணிபுரம், பூந்தராய், சிரபுரம் முனிவரு - தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், நகரங்களை நினைக்கும் போது முன்னால் நினைவுக்கு வரும். புறவம், சண்பை நகர், வளர் - புறவம், சண்பை நகர், வளர்ந்து வரும். காழி, கொச்சைவயம் பரவு - காழி, கொச்சைவயம் புகழப்பெறும். திரு - அழகிய. க்: சந்தி. கழுமலம் ஆம் - கழுமலம் என்று ஆகும். பன்னிரண்டு திரு - பன்னிரண்டு அழகிய. ப்: சந்தி. பெயர்த்து - பெயர்களை உடையது. பெயர்: ஒருமை பன்மை மயக்கம். ஆல்: ஈற்றசை நிலை.

பிறகு வரும் 15-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழி என்னும் சிவத்தலத்தில் வேதியர் களுடைய குடும்பங்களுக்கு முதன்மைப் பதவியை

வகிப்பவர்; ஒரு குற்றமும் இல்லாத இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிக் கற்றுக் கொண்ட நல்ல குணங்களைப் பெற்ற வேதியர்களில் கவுண்டின்ய கோத்திரம் விளக்கத்தை அடையுமாறு யாவரும் புகழ்ந்து பாராட்டும் சைவசமய வழியில் திருவவதாரம் செய்தவர்; சிவபாத இருதயர் என இந்த உலகத்தில் வாழும் மக்கள் நல்வாழ்வு பெறும் வண்ணம் தவத்தைப் புரிந்த இயல்பைப் பெற்றவர் அந்தச் சீகாழியில் இருப்பவர் ஆயினார்.' பாடல் வருமாறு:

"அப்பதியின் அந்தணர்தம் குடிமுதல்வர்; ஆசில்மறை
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்பும்நெறி வழிவந்தார்; சிவபாத இருதயர்என்
றிப்புவிவா ழத்தவம்செய் இயல்பினார் உளரானார்."

அப்பதியின் - அந்தச் சீகாழி என்னும் சிவத்தலத்தில். அந்தணர் தம் - வேதியர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. குடி - குடும்பங்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முதல்வர் - முதன்மைப் பதவியை வகிப்பவர். ஆசு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கைப் படுத்த - முறையாக அத்தியயனம் செய்து கற்றுக் கொண்டு நிறைவேற்றிய. சீலத்து - நல்ல குணங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கவுணியர் கோத்திரம் - கவுண்டின்ய கோத்திரம். விளங்க - விளக்கத்தை அடையுமாறு. ச்: சந்தி. செப்பும் - யாவரும் புகழ்ந்து பாராட்டும். நெறிவழி - சைவசமய வழியில். வந்தார் - திருவவதாரம் செய்தருளியவர். சிவபாத இருதயர் என்று -

சிவபாத இருதயர் எனக் கூறும் திருநாமத்தைப் பெற்றவர். இப்புவி - இந்த உலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். வாழ - நல்ல வாழ்வைப் பெறும் வண்ணம். த்: சந்தி. தவம் - தவத்தை. செய் - புரிந்த. இயல்பினார் - இயல்பைப் பெற்றவராகிய அந்தணர். உளர் ஆனார் - இருப்பவர் ஆயினார். உளர்: இடைக்குறை.

பிறகு வரும் 16-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயரினுடைய அழகிய தர்மபத்தினியார் வாய்ப்பாக அமைந்த அந்தணர்களின் பரம்பரையில் பிறந்து வரும் இயல்பைப் பெற்றவர். எந்த உலகங்களிலும் வாழ்பவர்களும் பெறுவதற்கு அருமையாக உள்ள பெருமையைப் பெற்றவர், தோற்றப் பொலிவைப் பெற்ற பகவதியார் என்று பாராட்டப் பெறும் திருநாமத்தைக் கொண்டவர், தம்மிடம் அமைந்துள்ள கற்பில் மேம்பாட்டை அடைந்த சிறப்போடு தம்முடைய கணவராகிய சிவபாத இருதயருடைய எண்ணத்தின்படி வாழும் இயல்பு பொருந்தி வளங்கினார்.' பாடல் வருமாறு:

"மற்றவர்தம் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினார்; எவ்வுலகும் பெறற்கரிய பெருமையினார்;
பொற்புடைய பகவதியார் எனப்போற்றும் பெயருடையார்;
கற்புமேம் படுசிறப்பால் கணவனார் கருத்தமைந்தார்."

மற்று: அசைநிலை. அவர்தம் - அந்தச் சிவபாத இருதயரினுடைய; தம்: அசைநிலை. திரு - அழகிய. மனையார் - தர்மபத்தினியார். வாய்ந்த - வாய்ப்பாக அமைந்த. மறை - வேதியர்களினுடைய; திணை மயக்கம். மரபின் - பரம்பரையில். வரு - பிறந்து வரும். பெற்றியினார் - இயல்பைப் பெற்றவர். எவ்வுலகும் - எந்த உலகங்களில் வாழ்பவர்களும்; இடஆகு பெயர். உலகு: ஒருமை பன்மை

மயக்கம். பெறற்கு அரிய - பெறுவதற்கு அருமையாக உள்ள. பெருமையினார் - பெருமையைப் பெற்றவர். பொற்பு - தோற்றப் பொலிவை. உடைய - பெற்ற. பகவதியார் என - பகவதியார் என்று. என: இடைக்குறை. ப்: சந்தி. போற்றும் - வாழ்த்திப் பாராட்டப் பெறும். பெயர் - திருநாமத்தை. உடையார் - பெற்றவர். கற்பு - கற்பில். மேம்படு - மேம்பாட்டை அடைந்துள்ள. சிறப்பால் - சிறப்போடு; உருபு மயக்கம். கணவனார் - தம்முடைய கணவராகிய சிவபாத இருதயருடைய. கருத்து - எண்ணத்தின்படி வாழும் இயல்பு. அமைந்தார் - பொருந்தி விளங்கினார்.

அடுத்து வரும் 17-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயர் தம்முடைய தந்தை யாருடைய பரம்பரை, அன்னையாருடைய பரம்பரை ஆகிய இரண்டு பரம்பரைகளிலும் பிறந்த மக்கள் சைவசமய நெறியினுடைய வழியில் பிறந்த உறவை உடையவர்; பாம்புகளைப் புனைந்திருக்கும் சடா பாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய பிரமபுரீசருடைய திருவடிகளை அல்லாமல் வேறு எதையும் தெரிந்து கொள்ளாமல் புகழப் பெறும் விபூதி யினிடம் அன்பைப் பரிபாலிக்கும் இயல்பைப் பெற்ற வராகிய தாம் பொருந்தியுள்ள வேதியர்களுக்கு உரிய இல்லற வாழ்க்கையில் யாவரும் ஆச்சரியத்தை அடையு மாறு வாழ்ந்து வரும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"மரபிரண்டும் சைவநெறி வழிவந்த கேண்மையினார்
அரவணிந்த சடைமுடியார் அடியலால் அறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்கும் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவும்நாள்."

இந்தப் பாடல் குளகம். மரபு இரண்டும் - அந்தச் சிவபாத இருதயர் தம்முடைய தந்தையாருடைய பரம்பரை, அன்னையாருடைய பரம்பரை ஆகிய இரண்டு பரம்பரைகளிலும் பிறந்த மக்கள்; ஆகு பெயர். மரபு: ஒருமை பன்மை மயக்கம். சைவநெறி - சைவசமய நெறியினுடைய. வழி - வழியில். வந்த - பிறந்த. கேண்மை யினார் - உறவை உடையவர். அரவு - பாம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். அணிந்த - புனைந்துள்ள. சடை - சடாபாரத்தை. முடியார் - தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய பிரமபுரீசருடைய. அடி - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். அலால் - அல்லாமல்; இடைக் குறை. அறியாது - வேறு எதையும் தெரிந்து கொள்ளாமல். பரவு - புகழப் பெறும். திருநீற்று - விபூதியினிடம். அன்புபாலிக்கும் - அன்பைப் பரிபாலித்து வரும். பரிபாலித்தல் - பாதுகாத்தல். தன்மையராய் - இயல்பைப் பெற்றவராகி. விரவு - பொருந்தியுள்ள. மறை - வேதியர்களுக்கு உரிய; திணை மயக்கம். மனைவாழ்க்கை - இல்லற வாழ்க்கையில். வியப்பு - யாவரும் ஆச்சரியத்தை. எய்த - அடையுமாறு. மேவும் - வாழ்ந்து வரும். நாள் - காலத்தில்.

அடுத்து உள்ள 18-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'இந்த மண்ணுலகத்தின்மேல் சமணர்களாகிய இழிந்த செயல்களையும் இழிந்த குணங்களையும் பெற்றவர்கள், பௌத்தர்கள் ஆகியவர்கள் கூறும் பொய்வார்த்தைகள் மிகுதியாகப் பரவி எல்லா நூல்களுக்கும் முதலில் தோன்றிய நூலாகிய பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள வேத மார்க்கத்தில் மக்கள் வாழ்ந்து வருவது குறைந்து போய் ஹரனுடைய அடியவர்களினிடம் விபூதி, உருத்திராக்கம் முதலிய சைவசமய சாதனங்களின் விளக்கம்

பாதுகாத்தலைப் பெறாமல் ஒழிந்து போவதைப் பார்த்து குற்றம் இல்லாத சீர்த்தியைப் பெற்ற சிவபாத இருதயர் துன்பசாகரத்தில் ஆழ்ந்தார்.' பாடல் வருமாறு:

"மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே
ஆதிஅரு மறைவழக்கம் அருகிஅரன் அடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறா தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விருதயர்தாம் இடருழந்தார்."

மேதினிமேல் - இந்த மண்ணுலகத்தின் மேல். சமண் - சமணர்களாகிய; ஒருமை பன்மை மயக்கம்; திணை மயக்கம். கையர் - இழிந்த செயல்களையும் இழிந்த குணங்களையும் பெற்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சாக்கியர்தம் - பௌத்தர்கள் ஆகியவர்கள் கூறும். சாக்கியர்: ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. பொய் - பொய் வார்த்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். ம்: சந்தி. மிகுத்து - மிகுதியாகப் பரவி. ஏ: அசைநிலை. ஆதி - எல்லா நூல்களுக்கு முதலில் தோன்றிய நூலாகிய. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - வேதமார்க்கத்தில்; ஆகு பெயர். வழக்கம் - மக்கள் வாழ்ந்து வருவது. அருகி - குறைந்து போய். அரன் - ஹரனுடைய. ஹரன் - சங்காரத்தைச் செய்தருளுபவன். அடியார்பால் - அடியவர்களிடம்; ஒருமை பன்மை மயக்கம். பூதி - விபூதி. சாதன - உருத்திராக்கம் முதலிய சைவ சமய சாதனங்களின். சாதனம் - சின்னம். விளக்கம் போற்றல் பெறாது - விளக்கம் பாதுகாத்தலைப் பெறாமல். ஒழிய - ஒழிந்து போக. க்: சந்தி. கண்டு - அதைப் பார்த்து. ஏதம் - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. ச்: சந்தி. சிவபாத இருதயர்தாம் - சிவபாத இருதயர். தாம்: அசைநிலை. இடர் - துக்கமாகிய. உழந்தார் - சாகரத்தில் ஆழ்ந்தார்.

பின்பு உள்ள 19-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயர் தாம் நடத்தி வரும் இல்லற வாழ்க்கையில் ஆனந்தத்தை அடையும் ஒரு குழந்தையை ஈன்றெடுக்கும் பொருட்டு உள்ள விருப்பத்தை உடையவராகி அத்தகைய நிலையில் தலை சிறந்து நின்று திருநடனத்தைப் புரிந்தருளிய நடராஜப் பெருமானா ருடைய சிவந்த திருவடிகளாகிய செந்தாமரை மலர்களைத் தியானிக்க முன்னால் சைவசமயம் அல்லாத வேறு சமயங்களைப் போக்கி விட்டுப் பொடிப் பொடியாகச் செய்யும் மாணிக்கங்களைப் பதித்த அணிகலன்களை அணிந்து கொண்ட ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுக் கும் பொருட்டுப் பிரமபுரீசரை வாழ்த்தும் தவத்தைச் செய்தார்.' பாடல் வருமாறு:

"மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்
நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம்புரிந்தார்."

மனையறத்தில் - அந்தச் சிவபாத இருதயர் தாம் நடத்தி வரும் இல்லற வாழ்க்கையில். இன்பம் உறு - ஆனந்தத்தை அடையும். மக - ஒரு குழந்தையை. ப்: சந்தி. பெறுவான் - ஈன்றெடுக்கும் பொருட்டுத் தம்மிடம் அமைந்த. விரும்புவார் - விருப்பத்தை உடையவராகி; முற்றெச்சம். அனைய - அத்தகைய. நிலை - நிலையில். தலைநின்று - தலைசிறந்து நின்று. ஏ: அசைநிலை. ஆடிய - திருநடனத்தைப் புரிந்தருளிய. சேவடி - நடராஜப் பெருமானாருடைய சிவந்த திருவடிகளாகிய. அடி: ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கமலம் - செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். நினைவு உற - தியானம் அமைய. முன் - முன்னால். பரசமயம் -

சைவசமயம் அல்லாத வேறு சமயங்களாகிய சமண சமயத்தையும் பௌத்த சமயத்தையும்; ஒருமை பன்மை மயக்கம். நிராகரித்து - போக்கி விட்டு. நீறு ஆக்கும் - பொடிப் பொடியாகச் செய்தருளும். மணி - மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பூண் - அணிகலங்களை; ஒருமை பன்மை மயக்கம். புனை - அணிந்து கொண்ட. காதலனை - ஓர் ஆண் குழந்தையை. ப்: சந்தி. பெற - ஈன்றெடுக்கும் பொருட்டு. ப்: சந்தி. போற்றும் - பிரமபுரீசரை வாழ்த்திச் செய்யும். தவம் - தவத்தை. புரிந்தார் - செய்தார்.

பிறகு வரும் 20-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மிகுந்த பக்திப் பெருக்குக் காரணமாக எழுந்த பேரன்பினுடன், பெருமை மிக்க பார்வதியம்மையுடன், புகலி எனும் சீகாழியில் எழுந்தருளித் திருத்தோணியாம் படகில் அமர்ந்து காட்சியளிக்கும் சிவபெருமானின் செம்மையான திருவடியின் கீழ்ப்பணிந்து வழிபட்டவரான சிவபாத இருதயருடன் கூடிய அவருடைய அன்புக்குரிய மனையாளின் பெருவிருப்பமும் நிறைவேறிட அம்மனையாளின் அழகிய வயிற்றில் (அக் குழந்தைப் பேறு) விருப்பம் உருப் பெற்றாற் போல் சம்பந்தர் தோன்றிடவும் இவ்வுலகம் அதனால் பெரும் பேறு கொண்டதாக விளங்கிடச் செய்தார்.' பாடல் வருமாறு:

"பெருத்தெழும்அன் பால்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிந் திடப்பரவும் காதலியார் மணி வயிற்றில்
உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய உளதாக."

பெருத்தெழும் - மிக்கதாய் எழுந்த. அன்பால் - பக்தியால். பெரிய நாச்சியாருடன் - பார்வதி தேவியுடன்.

புகலி - சீகாழியில். த்: சந்தி. திருத்தோணி வீற்றிருந்தார் - தோணியில் அமர்ந்த சிவபெருமானுடைய. சேவடிக் கீழ் - செம்மையான திருவடிக்கீழ். வழிபட்டு - வணங்கி வழிபாடு செய்து வந்த. பரவும் - போற்றும். காதலியார் - சிவபாத இருதயருடன் கூடிய அன்பு மனையாளின். மணிவயிற்றில் - அழகிய வயிற்றில். கருத்து முடிந்திட - குழந்தைப் பேறு வேண்டும் என்ற விருப்பம் நிறைவேற வேண்டி. உருத்தெரிய வரும் - அவ்விருப்பம் ஒரு திருவுருவாய் அமைந்து தெளிவாகத் தெரிந்திட வருகின்றபடி. பெரும் பேறு - பெரிய அந்தப் பிள்ளைப் பேறு காரணமாக. உலகு - இந்தப் பரந்த உலகம். உய்ய உளதாக - நற்கதி அடைய வேண்டும் என்ற நிலை உண்டாகும்படி. முந்தைய செய்யுளுடன் பிந்தைய செய்யுட்கள் தொடர்ந்து பின்பு ஒரு செய்யுளில் வினைமுற்றாக முடியும் குளக வகையைச் சேர்ந்தது இது.

பிறகு வரும் 21-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பக்தர்களை ஆட்களாக உடையவளாகிய பெரிய நாயகியோடு சீகாழியில் உள்ள பரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் ஒரு கட்டு மலையின் மேல் இருக்கும் தோணியில் வீற்றிருந்த தலைவனாகிய தோணியப்பன் வழங்கிய திருவருளை வாழ்த்தி வணங்கி விட்டுத் தம்முடைய திருவுள்ளத்தில் மூண்டு எழும் மகிழ்ச்சியோடு தங்களுடைய முதல் சாத்திரங்களாகிய வேதங்கள் என்னும் சாத்திரங்கள் விதித்த முறைப்படி உள்ள மங்கல காரியங்களை நட்சத்திரங்களைப் பெற்ற பத்து மாதங்களிலும் நன்மைகள் சிறந்து விளங்கத் தம்முடைய உறவினர்களோடு அந்தச் சிவபாத இருதயர் உரிய மங்கல காரியங்களைச் செய்து பேரானந்தத்தோடு கிளர்ச்சியைப் பெற்று வாழும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"ஆளுடையா ளுடன்தோணி அமர்ந்தபிரான் அருள்போற்றி
மூளும்மகிழ்ச் சியில்தங்கள் முதல்மறைநூல் முறைச்சடங்கு
நாளுடைய ஈரைந்து திங்களினும் நலம்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பேரின்பம் கிளர்வுறுநாள்."

இந்தப் பாடலும் குளகம். ஆள் - பக்தர்களைத் தன்னுடைய அடிமைகளாக; ஒருமை பன்மை மயக்கம். உடையாளுடன் - பெற்றவளாகிய பெரிய நாயகியோடு. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் ஒரு கட்டு மலையின் மேல் இருக்கும் தோணியில். அமர்ந்த - வீற்றிருந்த. பிரான் - தலைவனாகிய தோணியப்பன். அருள் - வழங்கிய திருவருளை. போற்றி - வாழ்த்தி அந்தத் தோணியப்பரை வணங்கி விட்டு. மூளும் - தம்முடைய திருவுள்ளத்தில் மூண்டு எழும். மகிழ்ச்சியில் - மகிழ்ச்சியோடு; உருபு மயக்கம். தங்கள் - தங்களுடைய; என்றது 'அந்தணர்களுடைய' என்றபடி முதல் - முதற் சாத்திரங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். மறை - வேதங்கள் என்னும்; ஒருமை பன்மை மயக்கம். நூல் - சாத்திரங்கள் விதித்த; ஒருமை பன்மை மயக்கம். முறை - முறைப்படி உள்ள. ச்: சந்தி. சடங்கு - மங்கல காரியங்களை; ஒருமை பன்மை மயக்கம். என்றது சீமந்தத்தை நடத்தல், விருந்து அளித்தல் முதலியவை. நாள் - நட்சத்திரங்களை; ஒருமை பன்மை மயக்கம். உடைய - பெற்ற. ஈரைந்து - பத்து. திங்களினும் - மாதங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். சிறப்ப - சிறந்து விளங்க. க்: சந்தி. கேளிருடன் - தம்முடைய உறவினர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். செயல் - புரிய மங்கல காரியங்களை; ஒருமை பன்மை மயக்கம். புரிந்து - செய்து நிறைவேற்றி. பேரின்பம் - பேரானந்தத்தோடு. கிளர்வு உறு - கிளர்ச்சியைப் பெற்று. நாள் - வாழும் காலத்தில்.

பின்பு வரும் 22-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'சூரியன் முதலாக உள்ள கிரகங்கள் எல்லாம் அழகைப் பெற்ற உச்சஸ்தானங்களில் பெருகியுள்ள வலிமையோடு நிற்க விரும்பத்தக்க நல்ல முகூர்த்தம் எழுமாறு அழகு கிளர்ச்சி பெற்று எழும் திருவாதிரை நட்சத்திரத்தில் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளில் உள்ள ஊர்களில் வாழும் மக்கள் விளக்கத்தைப் பெறவும் சைவ சமயம் அல்லாத வேறு சமயங்களாகிய சமணசமயத்தையும் பௌத்த சமயத்தையும் சார்ந்த சமணர்கள், பௌத்தர்கள் என்பவர்கள் கொண்ட கருவம் போக சைவ சமயம் முதலாக உள்ள வைதிக சமயங்களும் தழைப்பை அடைந்து ஓங்கி நிற்க.' பாடல் வருமாறு:

"அருக்கன்முதற் கோள்அனைத்தும் அழகியஉச் சங்களிலே
பெருக்கவலி யுடன்நிற்கப் பேணியநல் லோரைஎழத்
திருக்கிளரும் ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க."

இந்தப் பாடலும் குளகம். அருக்கன் - சூரியன். முதல் - முதலாக உள்ள. கோள் - கிரகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அனைத்தும் - எல்லாம். அந்தக் கிரகங்களாவன: சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், பிருகஸ்பதி, சுக்கிரன், சனி பகவான், ராகு, கேது என்பவை. அழகிய - அழகைப் பெற்ற. உச்சங்களில் - உச்சஸ்தானங்களில். ஏ: அசைநிலை. பெருக்க - பெருகியுள்ள. வலியுடன் நிற்க - வலிமையோடு நின்று கொண்டிருக்க. ப்: சந்தி. பேணிய - விரும்பத்தக்க. நல் - நல்ல. ஓரை - முகூர்த்தம். எழ - எழுமாறு. த்: சந்தி. திரு - அழகு. க்: சந்தி. கிளரும் - கிளர்ச்சியைப் பெற்று எழும். ஆதிரைநாள் - திருவாதிரை நட்சத்திரத்தில். திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு,

தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளில் உள்ள ஊர்களில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். திசை: ஒருமை பன்மை மயக்கம். விளங்க - விளக்கத்தைப் பெறவும். ப்: சந்தி. பரசமய - சைவ சமயம் அல்லாத வேறு சமயங்களாகிய சமண சமயத்தையும் பௌத்த சமயத்தையும் சார்ந்த சமணர்கள், பௌத்தர்கள் என்பவர்கள் கொண்டிருந்த. சமய: ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தருக்கு - கர்வம். ஒழிய - அடியோடு போய்விட. ச்:சந்தி. சைவம் - சைவசமயம். முதல் - முதலாக உள்ள. வைதிகமும் - வைதிக சமயங்களும். அவையாவன: சைவம், காண பத்தியம், சௌமாரம், சாக்தம், வைணவம், சௌரம் என்னும் ஆறு சமயங்கள். வைதிகமும்: ஒருமை பன்மை மயக்கம். தழைத்து - தழைப்பை அடைந்து. ஓங்க - ஓங்கி நிற்க.

அடுத்து உள்ள 23-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் வாழும் பிரமபுரீசருடைய திருத்தொண்டர்களினுடைய திருவுள்ளங்களில் மகிழ்ச்சி சிறந்து ஓங்கவும், பரிசுத்தமான விபூதியைத் திருமேனி முழுவதும் பூசிக் கொள்ளும் சைவ சமய வழி கிழக்கு, மேற்கு, வடக்கு,தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளிலும் உள்ள சிவத்தலங்களில் வாழும் மக்களிடம் ஒப்பற்ற முறையில் நிகழ்ந்து வரவும், ஏழு உலகங்களிலும் வாழ்பவர்கள் தங்கள் திருவுள்ளங்களில் குளிர்ச்சியைப் பெற்று விளங்கவும், தேவர்களுடைய கூட்டம் வியப்பை அடையவும், வேதியர்கள் வேள்விகளில் பெய்யும் ஆகுதிகள் பெருகி வரவும், வளப்பம் பொருந்திய செந்தமிழ் நாட்டில் வாழும் மக்கள் புரிந்த தவம் நிறையவும், பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தைப் புரியும்

தவசிகள் புரியும் தவமாகிய செயல் வாய்ப்பாக அமையவும்.' பாடல் வருமாறு:

"தொண்டர்மனம் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி
எண்டிசையும் தனிநடப்ப ஏழுலகும் குளிர்தூங்க
அண்டர்குலம் அதிசயிப்ப அந்தணர்ஆ குதிபெருக
வண்டமிழ்செய் தவம்நிரம்ப மாதவத்தோர் செயற்வாய்ப்ப."

இந்தப் பாடலும் குளகம். தொண்டர் - அந்தச் சீகாழியில் வாழும் பிரமபுரீசருடைய திருத் தொண்டர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். மனம் - திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். களி - மகிழ்ச்சி. சிறப்ப - சிறந்த ஓங்கவும். த்: சந்தி. தூய - பரிசுத்தமாக உள்ள. திருநீற்று - விபூதியைத் திருமேனி முழுவதும் பூசிக் கொள்ளும். நெறி - சைவசமயம் வழி. எண் திசையும் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென் மேற்கு என்னும் எட்டுத் திசைகளிலும் உள்ள சிவத்தலங்களில் வாழும் மக்களிடம்; இடஆகுபெயர். திசை: ஒருமை பன்மை மயக்கம். தனி - ஒப்பற்ற முறையில். நடப்ப - நிகழ்ந்து வரவும். ஏழு உலகும் - ஏழு உலகங்களில் வாழ்பவர்களும்; இட ஆகுபெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். குளிர் - தங்களுடைய திருவுள்ளங்களில் குளிர்ச்சியைப் பெற்று. தூங்க - விளங்கவும். அண்டர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலம் - கூட்டம்; 'சாதியினர்' எனலும் ஆம்; திணை மயக்கம். அதிசயிப்ப - வியப்பை அடையவும். அந்தணர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆகுதி - தாங்கள் புரியும் வேள்விகளில் தேவர்களுக்காகப் பெய்யும் நெய் முதலிய ஆகுதிகள்; ஒருமை பன்மை மயக்கம். பெருக - பெருகி வரவும். வண் - சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் நாட்டில்

வாழும் மக்கள்; இடஆகுபெயர். தமிழ்: ஆகு பெயர். செய் - முற் பிறப்பில் புரிந்த. தவம் - தவத்தின் பயன்; ஆகுபெயர். நிரம்ப - நிறையவும். மா - பெருமையைப் பெற்று விளங்கும். தவத்தோர் - தவத்தைச் செய்யும் தவசிகள்; ஒருமை பன்மை மயக்கம். செயல் - செய்யும் செயலாகிய தவம். வாய்ப்ப - வாய்ப்பாக அமையவும். 'தன்னுடைய பயனை வழங்கவும்' எனலும் ஆம்.

பின்பு உள்ள 24-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வட மேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத்திசை களில் உள்ள சிவத்தலங்கள் எல்லாவற்றிலும் உள்ள பெருமைகள் எல்லாவற்றையும் தெற்குத் திசையில் விளங்கும் சிவத்தலங்களே வெற்றியைப் பெற்று மேலும் மேலும் ஏறி வரவும், மேலே உள்ள தேவலோகத்தையும், வேறாக உள்ள உலகங்களையும் இந்தப் பூவுலகமே ஒப்பற்ற முறையில் வெற்றியை அடையவும், தளர்ச்சி இல்லாத சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழிப்பைப் பெற்று விளங்கும் செந்தமிழ் நாட்டில் வழங்கும் வழக்கங்களே, வேறு நாடுகளில் வழங்கும் வழக்குக்களாகிய துறையை வென்று வெற்றி பெறவும், சங்கீதம் முழுவதையும் பாடும் சங்கீத விற்பன்னர்களும், உண்மையான சிவஞானத்தைப் பெற்றவர்களும் தங்களுக்கு வாழ்வதற்கு உரிய இடங்களாக மேற்கொள்ளும் நிலை சீகாழியில் பெருகவும்.' பாடல் வருமாறு:

"திசைஅனைத்தின் பெருமைஎலாம் தென்றிசையே வென்றேற
மிசைஉலகும் பிறஉலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழும் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடம்கொள்ளும் நிலைபெருக."

இந்தப் பாடலும் குளகம். திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளில் உள்ள சிவத்தலங்கள்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். அனைத்தின் - எல்லாவற்றிலும் உள்ள. பெருமை - பெருமைகள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - யாவும்; இடைக்குறை. தென் திசையே - தெற்குத் திசையில் விளங்கும் சிவத்தலங்களே; ஆகுபெயர். வென்று - வெற்றியைப் பெற்று. ஏற - மேலும் மேலும் அந்த வெற்றி ஏறி வரவும். மிசை - மேலே உள்ள. உலகும் - தேவலோகத்தையும். பிற - வேறாக உள்ள. உலகும் - உலகங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மேதினியே - இந்தப் பூவுலகமே. தனி - ஒப்பற்ற முறையில். வெல்ல - வெற்றியை அடையவும். அசைவு - தளர்ச்சி. இல் - இல்லாத; கடைக்குறை. செழும் - சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழிப்பைப் பெற்று விளங்கும். தமிழ் - செந்தமிழ் நாட்டில் வழங்கும்; ஆகுபெயர். வழக்கே - வழக்கங்களே; ஒருமை பன்மை மயக்கம். அயல் - வேறு நாடுகளில் வழங்கும்; ஆகுபெயர். வழக்கின் - வழக்குக்களாகிய. துறை - துறையை. வெல்ல - வென்று வெற்றியைப் பெறவும். இசை முழுதும் - சங்கீதம் முழுவதையும் பாடும் சங்கீத விற்பன்னர்களும்; திணை மயக்கம். மெய் அறிவும் - உண்மையாகிய சிவஞானத்தைப் பெற்ற ஞானிகளும்; திணை மயக்கம். இடம் - தாங்கள் வாழ்வதற்கு உரிய இடங்களாக; ஒருமை பன்மை மயக்கம். கொள்ளும் - மேற்கொள்ளும். நிலை - நிலைமை. பெருக - அந்தச் சீகாழியில் பெருகவும்.

பிறகு வரும் 25-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'இடைவிடாத முயற்சியைப் பெற்ற படைத்தல் என்னும் தொழிலினுடைய பான்மை தலைமையைப்

பெற்று விளங்கவும், பல தினங்களைப் பெற்ற நிகழ் காலமும் வருங்காலமும் குற்றங்களிலிருந்து சீகாழியில் வாழும் மக்கள் நீங்கி இருக்கவும், ஒளியைப் பெற்ற அழகிய தெருக்களில் பக்தர்கள் வளர்ச்சியைப் பெற்று வாழும் சீகாழி என்னும் சிவத்தலத்தில் வாழும் மக்கள் நல்ல வாழ்வைப் பெற்று வாழவும், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அடிமையாகப் பெற்ற சீகாழியில் உள்ள ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையில் விளங்கும் அழகிய தோணியில் வீற்றிருந்த தலைவனாகிய தோணியப்பன் வழங்கிய திருவருள் பெருகி எழவும்.' பாடல் வருமாறு:

"தாளுடைய படைப்பென்னும் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்காலம் எதிர்காலம் நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
ஆளுடைய திருத்தோணி அமர்ந்தபிரான் அருள்பெருக."

இந்தப் பாடலும் குளகம். தாள் - இடைவிடாது முயற்சியை. உடைய - பெற்ற. படைப்பு - பண்டங்களை உண்டாக்குதல். என்னும் - என்று கூறப்படும். தொழில் - தொழிலினுடைய. தன்மை - பன்மை. தலைமை - தலைமையான நிலையை. பெற - பெற்று விளங்கவும். நாள் - பல தினங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். உடைய - பெற்ற. நிகழ்காலம் - நிகழ்காலத்திலும். எதிர் காலம் - வரும் காலத்திலும். நவை - குற்றங்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். நீங்க - சீகாழியில் வாழும் மக்கள் நீங்கி இருக்கவும். வாள் - ஒளியை. உடைய - பெற்ற. மணி - அழகிய. வீதி - தெருக்களில்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - பக்தர்கள் வளர்ச்சியைப் பெற்று வாழும். பக்தர்கள்: தோன்றா எழுவாய். காழிப்பதி - சீகாழி என்னும் சிவத்தலத்தில். வாழ - வாழும் மக்கள் வாழ்வைப் பெற்று வாழவும். மக்கள்: தோன்றா எழுவாய். ஆள் - திருஞான

சம்பந்த மூர்த்தி நாயனாரை அடிமையாக. உடைய - பெற்ற. திரு - அழகிய. த்: சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் விளங்கும் தோணியில். அமர்ந்த - வீற்றிருந்த. பிரான் - தலைவனாகிய தோணியப்பன். அருள் - வழங்கிய திருவருள். பெருக - பெருகி எழவும்.

அடுத்து வரும் 26-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வீணாக உள்ள செயல்களைப் பெருகச் செய்யும் புன்மையாகிய அறிவைப் பெற்ற சமண சமயம் முதலாக இருக்கும் வேறு சமயமாகிய பௌத்த சமயத்தைச் சார்ந்த சமணர்களும் பௌத்தர்களும் பாவங்களைப் பெருக்கி வரும் குற்றம் உள்ள சமய வழிகள் பாழாகிப் போக நல்ல ஊழிக் காலம் ஒவ்வொன்றிலும் தவசிகள் தவத்தைப் பெருகச் செய்யும் சண்பையாகிய சீகாழியில் கேடு இல்லாத சரங்களும் அசரங்களும் ஆகிய யாவும் சைவ சமயத்தைப் பெருகி வளருமாறு புரியும் ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளினார்.' பாடல் வருமாறு:

"அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் ஊழிதொறும்
தவம்பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதா ரம்செய்தார்."

அவம் - ஒரு பயனும் இல்லாமல் வீணாக உள்ள செயல்களை; ஒருமை பன்மை மயக்கம். பெருக்கும் - பெருகச் செய்யும். புல் - புன்மையான. அறிவின் - அறிவைப் பெற்ற; 'சிற்றறிவைப் பெற்ற' என்றபடி. அமண் - சமண சமயம். முதலாம் - முதலாக இருக்கும். பரசமய - சைவசமயம் அல்லாத வேறு சமயமாகிய. ப்: சந்தி. பவம் - பாவங்களை; ஒருமை பன்மை மயக்கம். பெருக்கும் -

பெருக்கி வரும். புரை - குற்றத்தைப் பெற்ற. நெறிகள் - சமய வழிகள். பாழ்பட - பாழாகிப் போக. நல் - நல்ல. ஊழிதொறும் - ஒவ்வோர் ஊழிக் காலத்திலும். ஊழிக்காலம் - சர்வபிரளய காலம். தவம் - தவசிகள் தவத்தை. பெருக்கும் - பெருகச் செய்யும். சண்பையில் - சண்பையாகிய சீகாழியில். ஏ: அசைநிலை. தா - கெடுதல். இல் - இல்லாத; கடைக்குறை. சர - இயங்கும் உயிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அசரங்கள் - இயங்காமல் நிற்கும் உயிர்கள். சரங்கள் - மனிதர்கள், விலங்குகள், பறவைகள், ஊர்வன, புழுக்கள், பூச்சிகள், நீர் வாழ் பிராணிகள் முதலியவை. அசரங்கள் - இயங்காமல் நின்று கொண்டிருக்கும் பலவகையான மரங்களும், செடிகளும், கொடிகளும். எலாம் - யாவும்; இடைக்குறை. சிவம் - சைவ சமயத்தை. பெருக்கும் - பெருகி வளருமாறு புரிந்தருளும். பிள்ளையார் - ஆண்குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். திருஅவதாரம் செய்தார் - திரு அவதாரம் செய்தருளினார்.

அடுத்து உள்ள 27-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நயானார் திருவவதாரம் செய்தருளிய அந்தக் காலத்தில் தோற்றப் பொலிவைப் பெற்ற அழகிய கழுமலமாகிய சீகாழியில் வாழும் மக்களுக்குள் எந்தப் பெயரை உடையவரும் வேறு ஊர்களுக்குப் போய் அடையும் இடையூறு இல்லாமல் சீகாழியில் வாழ்ந்து கொண்டு தங்களுடைய திருமேனி களில் உண்டாகிய புளகாங்கிதமாகிய மயிர்க்கூச்சை அடைந்து தங்களை அறியாமலேயே ஒப்பு இல்லாத ஆனந்தம் மிகுதியாக எழுவதாகிய ஒரு மகிழ்ச்சி உண்டாகுமாறு பின்வருமாறு வார்த்தைகளைக் கூறுவார் கள்.' பாடல் வருமாறு:

"அப்பொழுது பொற்புறு திருக்கழு மலத்தோர்
எப்பெயரி னோரும் அயல்எய்தும் இடைஇன்றி
மெய்ப்படு மயிர்ப்புளகம் மேவிஅறி யாமே
ஒப்பில்களி கூர்வதொர் உவப்புற உரைப்பார்."

அப்பொழுது - அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய அந்தக் காலத்தில். பொற்பு - தோற்றப் பொலிவை. உறு - பெற்று. திரு - அழகிய; 'செல்வர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். க்: சந்தி. கழுமலத்தோர் - கழுமலமாகிய சீகாழியில் வாழும் மக்களுக்குள்; ஒருமை பன்மை மயக்கம். எப்பெயரினோரும் - எந்தப் பெயரை உடைய வரும். அயல் - வேறு ஊர்களுக்கு; ஆகுபெயர். எய்தும் - போய் அடையும். இடை - இடையூறு; துன்பம். இன்றி - இல்லாமல். மெய் - சீகாழியில் வாழ்ந்து கொண்டு தங்களுடைய திருமேனிகளில்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. படு - உண்டாகிய. மயிர்ப்புளகம் - புளகாங்கிதமாகிய மயிர்க்கூச்சை; மயிர்கள் சிலிர்த்தல். மேவி - அடைந்து. அறியாமே - தவறுகளை அறியாமலேயே. ஒப்பு - நிகர். இல் - இல்லாத; கடைக்குறை. களி - ஆனந்தம். கூர்வது ஓர் - மிகுதியாக எழுவதாகிய ஒரு. உவப்பு - மகிழ்ச்சி. உற - உண்டாகும்படி. உரைப்பார் - பின்வருமாறு வார்த்தைகளைக் கூறுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 28-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழியில் வாழும் மக்கள், "சிவபெருமான் வழங்கிய திருவருள் என்று கூறுமாறு பெருகி எழும் அடியேங்களுடைய உள்ளங்கள் மகிழ்ச்சியை அடையும் பான்மை இந்தச் சீகாழியில் அடியேமுக்கு வருமாறு நடந்த நல்ல காரியம் என்ன?" என்று கூறுவார்கள்; "அந்தணர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தைப் பெற்ற

குடும்பத்தில் ஒப்பற்ற ஓர் ஆண் குழந்தை திருவவதாரம் செய்தருளியிருக்கிறான்; அவன் இந்தச் சீகாழியில் திருவவதாரம் செய்தருளும் சகுனம் இது'' என்று கூறி அந்த மக்கள் வியப்பை அடைந்தார்கள்.' பாடல் வருமாறு:

" 'சிவனருள் எனப்பெருகு சித்தமகிழ் தன்மை
இவணிது நமக்குவர எய்தியதென்?' என்பார்;
'கவுணியர் குலத்தில்ஒரு காதலன் உதித்தான்
அவன்வரும் நிமித்தம்இது' என்றதி சயித்தார்."

அந்தச் சீகாழியில் வாழும் மக்கள், சிவன் - சிவபெருமான். அருள் - வழங்கிய திருவருள். என - என்று கூறுமாறு; இடைக்குறை. ப்: சந்தி. பெருகு - பெருகி எழும். சித்தம் - அடியேங்களுடைய உள்ளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மகிழ் - மகிழ்ச்சியை அடையும். தன்மை - பான்மை. இவண் - இந்தச் சீகாழியில். இது - இந்த நல்ல காரியம். நமக்கு - அடியேமுக்கு. வர - வருமாறு. எய்தியது - நடந்த நல்ல காரியம். என் - என்ன. என்பார் - என்று கூறுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். கவுணியர் - அந்தணர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்தவர் களுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலத்தில் - குடும்பத்தில். ஒரு - ஒப்பற்ற. காதலன் - ஓர் ஆண் குழந்தையாக விளங்குபவன். என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. உதித்தான் - திருவவதாரம் செய்தருளி யிருக்கிறான். அவன் - அந்த ஆண் குழந்தையாகிய அவன். வரும் - இந்தச் சீகாழியில் திருவவதாரம் செய்தருளும். நிமித்தம் இது - சகுனம் இது. என்று - எனக் கூறி. அதிசயித்தார் - அந்த மக்கள் வியப்பை அடைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து உள்ள 29-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் உள்ள மலர்கள் அரும்புகள் மலர்ந்து நறுமணம் கமழும் பலவகையான மரங்கள் வளர்ந்து நிற்கும் பூஞ்சோலை உள்ள எல்லா இடங்களிலும் தேனோடு பொருந்திய மகரந்தப் பொடிகளோடு செறிந்த கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென்மேற்கு ஆகிய திசைகள் எல்லாவற்றிலும் பரிசுத்தம் பொருந்திய ஒளி வெள்ளம் விரிய அதனால் புழுதியை அடங்கச் செய்து பெருமையைப் பெற்ற மலயமாகிய பொதியில் மலையி லிருந்து வந்து வீசும் தென்றற் காற்றும் இந்த இடத்துக்கு வந்து அசையும்.' பாடல் வருமாறு:

"பூமுகை அவிழ்ந்துமணம் மேவுபொழில் எங்கும்
தேமருவு தாதொடு துதைந்ததிசை எல்லாம்
தூமருவு சோதிவிரி யத்துகள் அடக்கி
மாமலய மாருதமும் வந்தசையும் அன்றே."

பூ - அந்தச் சீகாழியில் உள்ள மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். முகை - அரும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். அவிழ்ந்து - மலர்ந்து. மணம் - நறுமணம். மேவு - கமழும். பொழில் - பலவகை மரங்கள் வளர்ந்து நிற்கும் பூஞ்சோலை உள்ள. அந்த மரங்களாவன: மா மரம், வாகை மரம், வேங்கை மரம், மகிழ மரம், பூவரச மரம், வேப்ப மரம், நெல்லி மரம், நாவல் மரம், வில்வ மரம், நொச்சி மரம், நுணா மரம், நெட்டிலிங்க மரம், அசோக மரம், விளா மரம் முதலியவை. எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். தே - தேனோடு. மருவு - பொருந்திய. தாதொடு - மகரந்தப் பொடிகளோடு; ஒருமை பன்மை மயக்கம். துதைந்த - செறிந்த. திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு ஆகிய திசைகள்; ஒருமை பன்மை மயக்கம்.

எல்லா - எல்லாவற்றிலும். தூ - பரிசுத்தம். மருவு - பொருந்திய. சோதி - ஒளி வெள்ளம். விரிய - விரிய அதனால். த்: சந்தி. துகள் - புழுதியை. அடக்கி - அடங்கச் செய்து. மா - பெருமையைப் பெற்ற. மலய - மலயமாகிய பொதியில் மலையிலிருந்து. மாருதமும் - மந்த மாருதமாகிய தென்றற் காற்றும். வந்து - இந்த இடத்துக்கு வந்து. அசையும் - அசைந்து வீசும். அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

பிறகு வரும் 30-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'மேலே உள்ள தேவலோகத்தில் வாழும் தேவர் களும் விருப்பத்தோடு மறைத்தல் இல்லாத பூம்பொழிலில் வளர்ந்து நிற்கும் பலவகையான மரங்களில் மலர்ந்திருக் கும் மலர்களைப் போல பெருமையைப் பெற்ற கற்பக மரத்திலிருந்து கொய்து கொண்டு வந்த மலர்களை மழையைப் போலப் பொழிந்து இந்தப் பூமண்டலத்தின் மேல் வந்து வளர்கின்ற சீகாழி மாநகரத்தில் விரும்பித் தங்களுடைய வாழ்க்கையை நடத்தும் நல்ல குணங்களைப் பெற்ற வேதியர்களோடு சேர்ந்து அந்தச் சிவபாத இருதயர் ஹோமம் ஆகிய மங்கல காரியத்தைப் புரிந்தார்.' பாடல் வருமாறு:

"மேலைஇமை யோர்களும் விருப்பொடு கரப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவும்
சீலமறை யோர்களுடன் ஓமவினை செய்தார்."

மேலை - மேலே உள்ள தேவலோகத்தில் வாழும். இமையோர்களும் - தேவர்களும். விருப்பொடு - விருப்பத்தோடு. கரப்பு - மறைத்தல். இல் - இல்லாத; கடைக்குறை. சோலை - பூம்பொழிலில் வளர்ந்து நிற்கும் பலவகையான மரங்களில் மலர்ந்திருக்கும். மலர் போல -

மலர்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். மலர் மாமழை - பெருமையைப் பெற்ற கற்பக மரத்திலிருந்து கொய்து கொண்டு வந்த மலர்களை மழையைப் போல. மழை: உமவ ஆகுபெயர். சொரிந்து - பொழிந்து. ஏ: அசைநிலை. ஞாலமிசை - இந்தப் பூ மண்டலத்தின் மேல். வந்து வளர் - வந்து வளரும். காழி நகர் - சீகாழி என்னும் பெரிய சிவத்தலத்தில். மேவும் - விரும்பித் தங்களுடைய வாழ்க்கையை நடத்தும். சீல - நல்ல குணங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மறையோர்களுடன் - வேதியர்களோடு. ஓமவினை - சேர்ந்து ஹோமமாகிய மங்கல காரியத்தை. 'புத்திர காமேஷ்டி யாகத்தை' எனலும் ஆம். செய்தார் - சிவபாத இருதயர் புரிந்தார்.

*பின்பு வரும் 31-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:*

*'அந்தச் சீகாழி நகரத்தில் சிவபூத கணங்களினுடைய தலைவராகிய பிரமபுரீசர் இந்த உலகத்தில் வாழும் மக்கள் நல்ல வாழ்வைப் பெறுமாறு தம்முடைய திருவருளை வழங்கிய தலைவனாகிய பிரமபுரீசன் வழங்கிய திருவருளினுடைய பெருமையைப் பார்த்து நல்ல காரியங் களைப் புரிந்து தங்களுடைய வாழ்க்கையை நடத்துபவர் களாகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் கானம் செய்யும் வேதியர்கள் வேறு ஒன்றைக் கூறினாலும் சிறிதேனும் குறையாத வேதங்களில் உள்ள மந்திரங் களாகிய வார்த்தைகளால் இனிய நாதம் எல்லா இடங்களிலும் விளக்கமாக அமைந்து எழுந்து கேட்கும்.' பாடல் வருமாறு:*

"பூதகண நாதர்புவி வாழஅருள் செய்த
நாதன்அரு ளின்பெருமை கண்டுநலம் உய்ப்பார்
ஓதுமறை யோர்பிறி துரைத்திடினும் ஓவா
வேதமொழி யால்ஒலி விளங்கிஎழும் எங்கும்."

பூதகண - அந்தச் சீகாழி நகரத்தில் சிவபூதகணங் களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதர் - தலைவராகிய பிரமபுரீசர். பிரமபுரி - சீகாழி. புவி - இந்த உலகத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். வாழ - நல்ல வாழ்வைப் பெறுமாறு. அருள் - தம்முடைய திருவருளை. செய்த - வழங்கிய. நாதன் - தலைவனாகிய பிரமபுரீசன். அருளின் - வழங்கிய திருவருளினுடைய. பெருமை - பெருமையை. கண்டு - பார்த்து. நலம் - நல்ல காரியங்களைப் புரிந்து; ஒருமை பன்மை மயக்கம். உய்ப்பார் - தங்களுடைய வாழ்க்கையை நடத்துபவர் களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ஓது - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வதம் என்னும் நான்கு வேதங்களையும் கானம் செய்யும். மறையோர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பிறிது - வேறு ஒன்றை. உரைத்திடினும் - கூறினாலும். ஓவா - சிறிதேனும் குறையாத. வேத - வேதங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். மொழியால் - மந்திரங்களாகிய வார்த்தைகளால்; ஒருமை பன்மை மயக்கம். ஒலி - இனிய நாதம். எங்கும் - சீகாழியில் உள்ள எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். விளங்கி எழும் - விளக்கமாக அமைந்து எழுந்து கேட்கும்.

பிறகு உள்ள 32-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழி நகரத்தில் பல வகையான மரங்களும் பழங்களை வழங்குபவையாக விளங்கும்; பூங்கொடி களும் மிகுதியாக வளர்ந்து படர்ந்திருக்கும்; விளங்கும் குளம், குட்டை, மடு, ஏரி, கடல், கிணறு முதலிய நீர் நிலைகளில் நிரம்பியிருக்கும் நீரும் தெளிவோடும் குளிர்ச்சியோடும் அமைந்திருக்கும்; விளங்கும் சூரியனும் சந்திரனும் தங்களுடைய வெயிலையும் நிலாவையும் வீசும்

ஆகாயத்தில் உள்ள அழுக்கு மழை பொழிவதால் போய் விடும்; என்றும் மாறுபடாத இனிமையாகிய ஒலியை பருந்து, கருடன், கழுகு, காக்கை, தூக்கணாங்குருவி, மைனாக்குருவி, கிளி, சிட்டுக் குருவி, மீன் கொத்திப் பறவை, செம்போத்து, மரங்கொத்திக் குருவி, அன்னப் பறவை, வாத்து முதலிய பறவைகள் கூவும் சத்தங்கள் நல்லவையாகிய கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகள் எல்லாவற்றிலும் காதில் விழும்.' பாடல் வருமாறு:

''பயன்தருவ ப: பலதருவும் வல்லிகளும் மல்கித்
தயங்குபுன லும்தெளிவு தண்மையுடன் நண்ணும்;
வயங்கொளிவி சும்புமலி னம்கழியும் மாறா
நயம்புரிவ புள்ளொலிகள் நல்லதிசை எல்லாம்.''

*பயன்* - அந்தச் சீகாழி நகரத்தில் பல வகையான மரங்களும் பழங்களை; ஒருமை பன்மை மயக்கம். *தருவ* - வழங்குபவையாக விளங்கும்; வினையாலணையும் பெயர். *பல தருவும்* - பல வகையான மரங்களும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மரங்களாவன: மாமரம், பலாமரம், பலவகையான வாழை மரங்கள், தென்னமரம், பனைமரம், வில்வமரம், விளாமரம், நாவல்மரம், வேப்பமரம், இலுப்பை மரம், நெல்லிமரம் முதலியவை. *வல்லிகளும்* - பூங்கொடிகளும். அவையாவன: மல்லிகைக் கொடி, முல்லைக் கொடி, செந்தாமரைக் கொடி, வெண்டாமரைக் கொடி, குமுதக் கொடி, அல்லிக் கொடி, ஆம்பற் கொடி முதலியவை. *மல்கி* - மிகுதியாக வளர்ந்து படர்ந்திருக்கும். *த்*: சந்தி. *தயங்கு* - விளங்கும். *புனலும்* - குளம், குட்டை, மடு, ஏரி, கடல், கிணறு, கால்வாய், ஆறு முதலிய நீர் நிலைகளில் நிரம்பியிருக்கும் நீரும். *தெளிவு* - தெளிவோடும். *தண்மையுடன்* - குளிர்ச்சியோடும். *நண்ணும்*

- அமைந்திருக்கும். வயங்கு - விளங்கும். ஒளி - சூரியனும் சந்திரனும் தங்களுடைய வெயிலையும் நிலாவையும் வீசும். விசும்பு - ஆகாயத்தில் உள்ள. மலினம் - அழுக்கு. கழியும் - மழை பொழிவதால் போய் விடும். மாறா - மாறுபடாத. நயம் - இனிமையைப் பெற்ற ஒலியை. புள் - செம்போத்து, பருந்து, கருடன், கழுகு, காக்கை, தூக்கணாங்குருவி, மைனாக்குருவி, கிளி, சிட்டுக்குருவி, குருவி, அன்னப்பறவை, வாத்து, வண்டு முதலிய பறவைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஒலிகள் - கூவும் சத்தங்களை. புரிவ - எழுப்புவனவாக விளங்கும். நல்ல - நல்லவையாகிய. திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென் மேற்கு என்னும் எட்டுத் திசைகள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றிலும் அந்தப் பறவைகள் கூவும் ஒலிகள் கேட்கும்.

பின் வரும் 33-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அழகிய இடங்களைப் பெற்ற சண்பையாகிய சீகாழி என்னும் அகலமான பழைய ஊரில் நடைபெறும் தேர்விழா, திருவாதிரை விழா, சித்திரா பௌர்ணமி விழா, விசாகப் பெருவிழா, ஆனி மகத் திருவிழா, ஆடிப் பெருக்கு விழா, ஆவண மூலத்திரு விழா, நவராத்திரி விழா, தீபாவளி விழா, தைப்பூசத் திருவிழா, பொங்கல் விழா, மாசிமக விழா, பங்குனி உத்தர விழா முதலிய திருவிழாக்களில் பெருகி முழங்கும் சங்க வாத்தியங்களும் படகம் என்னும் இசைக் கருவிகளும், தாரைகளும் முதலாக உள்ள வாத்தியங்கள் எல்லா இடங்களிலும் தங்களை வாசிப்பவர்கள் இல்லாமலும் முழங்கும் மங்களகரமான முழக்கமாகிய இனிய நாதமும் தெருக்களில் உள்ள எல்லா இடங்களிலும் மிகுதியாகக் கேட்கும்.' பாடல் வருமாறு:

"அங்கண்விழா விற்பெருகு சண்பைஅகல் மூதூர்ச்
சங்கபட கம்கருவி தாரைமுத லான
எங்கணும் இயற்றுபவர் இன்றியும் இயம்பும்
மங்கல முழக்கொலி மலிந்தமறு கெல்லாம்."

அம் - அழகிய. கண் - இடங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சண்பை - சண்பையாகிய சீகாழி என்னும். அகல் - அகலமாகிய. மூதூர் - பழைய ஊரில் நடைபெறும். ச்: சந்தி. விழாவில் - தேர்விழா, சித்திரா பௌர்ணமி விழா, விசாகப் பெருவிழா, ஆனி மகத்திரு விழா, ஆடிப்பூரத் திருவிழா, ஆடிப்பெருக்கு விழா, ஆவணி மூலப்பிட்டுத் திருவிழா, நவராத்திரி விழா, தீபாவளி விழா, திருவாதிரை விழா, தைப்பொங்கல் விழா, தைப்பூசத் திரு விழா, மாசிமகத் திருவிழா, பங்குனி உத்தர விழா முதலிய திருவிழாக்களில்; ஒருமை பன்மை மயக்கம். பெருகு - பெருகி முழக்கும். சங்க - சங்க வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். படகம் கருவி - படகம் என்னும் இசைக் கருவிகள்; ஒருமை பன்மை மயக்கம். தாரை - தாரைகள்; ஒருமை பன்மை மயக்கம். முதலான - முதலாக உள்ள வாத்தியங்கள். அவையாவன: நாககசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், முகவீணை, சல்லரி, வீணை, யாழ், தப்பட்டை, முரசு, பேரிகை, ஊதுகொம்பு முதலியவை. எங்கணும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். கணும்: இடைக்குறை. இயற்றுபவர் - வாசிப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இன்றியும் - இல்லாமலும். இயம்பும் - தாங்களே முழங்கும். மறுகு - சீகாழியில் உள்ள தெருக்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றிலும். மங்கல - மங்கல வாத்தியங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். முழக்குஒலி - முழக்கமாகிய இனிய நாதமும். மலிந்த - மிகுதியாகக் கேட்கும்.

பின்பு உள்ள 34-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெரியவையாக விளங்கும் உலகங்களில் இத்தகைய பான்மை அடைய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பெற்றெடுத்து வழங்கும் உயர் குலமாகிய வேதியர்களினுடைய சாதிக்குத் தலைவராகிய சிவபாத இருதயர் தம்முடைய திருமாளிகையினுடைய முற்றத்தில் பெருமையையும் மகிழ்ச்சியையும் அதிசயத்தோடு தம்முடைய தலைவனாகிய பிரமபுரீசன் வழங்கிய திருவருளினால் பெறுவதற்கு அருமையாக விளங்கும் அழகிய ஓர் ஆண் குழந்தையை ஈன்று எடுக்கும் பொருட்டு அடைந்த அலங்காரங்களையும் புத்திரகாமேஷ்டி யாகத்தையும் அந்த வேதியர் புரிவாராயினார்.' பாடல் வருமாறு:

"இரும்புவனம் இத்தகைமை எய்தஅவர் தம்மைத்
தரும்குல மறைத்தலைவர் தம்பவன முன்றில்
பெரும்களி வியப்பொடு பிரான்அரு ளினாலே
அரும்திரு மகப்பெற அணைந்தஅணி செய்வார்."

இரும் - பெரியவையாக விளங்கும். புவனம் - உலகங்களில்; ஒருமை பன்மை மயக்கம். இத்தகைமை - இத்தகைய பான்மை. எய்த - அடைய. அவர் தம்மை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தம்: அசைநிலை. த்: சந்தி. தரும் - பெற்றெடுத்து வழங்கும். குல - உயர்குலமாகிய. மறை - வேதியர்களினுடைய; திணை மயக்கம். த்: சந்தி. தலைவர் - தலைவராகிய சிவபாத இருதயர். தம் -தம்முடைய. பவனம் - தம்முடைய திருமாளிகைக்கு. முன்றில் - முன்னால் உள்ள முற்றத்தில். முன்றில் - இல் முன்; முன்பின்னாகத் தொக்க தொகை. பெரும் - பெருமையையும். களி - மகிழ்ச்சியையும். வியப்பொடு - ஆச்சரியத்தோடு. பிரான் - தம்முடைய

தலைவனாகிய பிரமபுரீசன். பிரமபுரி - சீகாழி. அருளினால் - வழங்கிய திருவருளினால். ஏ: அசைநிலை. அரும் - பெறுவதற்கு அருமையாக விளங்கும். திரு - அழகிய. மக - ஓர் ஆண்குழந்தையை. ப்: சந்தி. பெற - ஈன்றெடுக்கும் பொருட்டு. அணைந்த - அடைந்து. அணி - அலங்காரங் களையும் புத்திரகாமேஷ்டி யாகத்தையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்வார் - அந்தச் சிவபாத இருதயர் புரிவாரா யினார்.

அடுத்து உள்ள 35-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயர் விருப்பத்தைச் செய்யும் தம்முடைய திருவுள்ளம் மகிழ்ச்சியை அடையக் களிப் போடு சிறந்து விளங்குவார்; தம்முடைய திருமேனியின் மேலும் தலையின் மேலும் தடவிக் கொள்ளும் எண்ணெய் நீராட்டு விழாவோடு ஆனந்த சாகரத்தில் முழுகுவார்; எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு எண்ணெய்ப் பிசுக்குப் போகுமாறு அரைப்பையும் சீகைக்காயையும் தேய்த்துக் கொண்டு முழுகுவதாகிய செயல் நடைபெறும் மங்கல காரியத்தில் உண்டாகும் ஒலி பொங்கி எழ சாதகத்தை எழுதுதலாகிய சடங்கையும் வேறு பல சடங்குகளையும் முறையாகப் புரிவார்.' பாடல் வருமாறு:

"காதல்புரி சிந்தைமகி ழக்களி சிறப்பார்;
மீதணியும் நெய்யணி விழாவொடு திளைப்பார்;
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதகம் முறைப்பல சடங்குவினை செய்வார்."

காதல் - அந்தச் சிவபாத இருதயர் விருப்பத்தை. புரி - செய்யும். சிந்தை - தம்முடைய திருவுள்ளம். மகிழ - மகிழ்ச்சியை அடைய. க்: சந்தி. களி - களிப்போடு. சிறப்பார் - சிறந்து விளங்குவார். மீது - தம்முடைய தலையின் மேலும்

திருமேனி முழுவதும். அணியும் - தடவிக் கொள்ளும். நெய்யணி விழாவொடு - எண்ணெய் நீராட்டு விழாவோடு. திளைப்பார் - ஆனந்த சாகரத்தில் முழுகுவார். சூதம் - எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு எண்ணெய்ப் பிசுக்குப் போகுமாறு அரைப்பையும் கரைத்த சீகைக்காயையும் தேய்த்துக் கொண்டு முழுகுவதாகிய. நிகழ் - செயல் நடைபெறும். மங்கல வினை - மங்கலக் காரியத்தில். த்: சந்தி. துழனி - உண்டாகும் ஒலி. பொங்க - பொங்கி எழ. ச்: சந்தி. சாதகம் - சாதகத்தை எழுதுதல் ஆகிய. சடங்கு - மங்கல காரியத்தையும். முறை - முறைப்படி. ப்: சந்தி. பல சடங்கு - வேறு பல மங்கல காரியங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: புண்யாஹவாசனம் செய்தல், ரக்ஷை இடுதல் முதலியவை. வினை - செயல்களை; ஒருமை பன்மை மயக்கம். செய்வார் - அந்தச் சிவபாத இருதயர் புரிவார்.

பின் வரும் 36-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பெருமையைப் பெற்ற மேலான சாதியாகிய அந்தணர் சாதியில் பிறந்த மடப்பத்தைப் பெற்ற பெண் மணிகள் தமக்குள்ளே தாங்கள் அடையும் ஆனந்தத்தோடு தங்களுடைய சாயல்கள் மயில்களினுடைய சாயல்கள் என்று கூறுமாறு பரிசுத்தமாகிய அழகிய திருவிளக்குக் களோடு தங்களுடைய காதுகளில் ஒளியை வீசும் மகரக் குழைகள் மின்னலைப் போல ஒளியை வீச அழகு மருவிய செல்வம் நிறைந்த தங்களுடைய திருமாளிகைகளை அழகும் தோற்றப் பொலிவும் உடையவையாகும் வண்ணம் புரிவார்கள்.' பாடல் வருமாறு:

"மாமறை விழுக்குல மடந்தையர்கள் தம்மில்
தாமுறு மகிழ்ச்சியொடு சாயல்மயில் என்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகள் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார்."

மா - பெருமையைப் பெற்ற. மறை விழுக்குல - மேலான சாதியாகிய அந்தணர் சாதியிற் பிறந்த. மறை : திணை மயக்கம். மடந்தையர்கள் - மடப்பத்தைப் பெற்ற பெண்மணிகள். தம்மில் - தங்களுக்குள்ளே. தாம் உறு - தாங்கள் அடையும். மகிழ்ச்சியொடு - ஆனந்தத்தோடு. சாயல் - தங்களுடைய சாயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். மயில் - மயில்களினுடைய சாயல்கள்; ஆகு பெயர். மயில்: ஒருமை பன்மை மயக்கம். என்ன - என்று கூறுமாறு. த்: சந்தி. தூ - பரிசுத்தமாகிய. மணி - அழகிய. விளக்கொடு - திருவிளக்குக்களோடு; ஒருமை பன்மை மயக்கம். சுடர் - ஒளியை வீசும். க்: சந்தி. குழைகள் - மகரக்குழைகள். மின்ன - தங்களுடைய காதுகளில் மின்னலைப் போல் ஒளியை வீச. க்: சந்தி. காமர் - அழகு மருவிய. திரு - செல்வம் நிறைந்த. மாளிகை - தங்களுடைய திருமாளிகைகளை; ஒருமை பன்மை மயக்கம். கவின் - அழகும். பொலிவு - தோற்றப் பொலிவும். செய்வார் - உடையவை ஆகும் வண்ணம் புரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 37-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழி நகரத்தில் வாழும் பெண்மணிகள் வாசனைப் பொடியோடு குளிர்ச்சியைப் பெற்ற மலர்களில் பொருந்திய மகரந்தப் பொடிகளை எல்லா இடங்களிலும் வீசிவிட்டு தங்களுடைய திருவுள்ளங்களில் நிறைந்திருக் கும் விருப்பத்தோடு உவகையை வெளிப்படுத்தும் வார்த்தைகளைப் பேசுவார்கள்; வெண்மை நிறத்தைக் கொண்ட நெல் முளைகள், பாசிப் பயிற்று முளைகள் முதலிய முளைகள் நிரம்பிய பாலிகைகளை ஒவ்வொரு திண்ணையிலும் வைப்பார்கள்; புண்ணியத்தை வழங்கும் நறுமணம் கமழும் நீரை நிரம்பக் கொண்ட தங்கக் குடங்களை வரிசை வரிசையாக வைப்பார்கள்.' பாடல் வருமாறு:

"சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
உண்ணிறைவி ருப்பினுடன் ஓசைஉரை செய்வார்:
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்;
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குடம் நிரைப்பார்."

*சுண்ணமொடு* - அந்தச் சீகாழி நகரத்தில் வாழும் பெண்மணிகள் வாசனைப் பொடியோடு. *தண்* - குளிர்ச்சியைப் பெற்ற. *மலர்* - மலர்களில்; ஒருமை பன்மை மயக்கம். *துதைந்த* - பொருந்தியுள்ள. *துகள்* - மகரந்தப் பொடிகளை; ஒருமை பன்மை மயக்கம். *வீசி* - எல்லா இடங்களிலும் தூவி விட்டு. *உள்* - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். *நிறை* - நிரம்பியிருக்கும். *விருப்பினுடன்* - விருப்பத்தோடு. *ஓசை* - உவகையைப் புலப்படுத்தும். *உரை* - வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். *செய்வார்* - பேசுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். *வெண்* - வெண்மையான. *முளைய* - நெல் முளைகள், பாசிப் பயிற்று முளைகள் முதலிய முளைகள் நிரம்பிய. *பாலிகைகள்* - பாலிகை களை. *வேதி தொறும்* - தங்களுடைய திருமாளிகைகளில் உள்ள ஒவ்வொரு திண்ணையிலும். *வைப்பார்* - வைப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். *புண்ணிய* - புண்ணியத்தை வழங்கும். *நறும்* - நறுமணம் கமழும். *புனல்* - நீரை. *கொள்* - நிரம்பக் கொண்ட. *பொற்குடம்* - தங்கத்தால் செய்த பூரண கும்பங்களை; ஒருமை பன்மை மயக்கம். *நிரைப்பார்* - வரிசை வரிசையாக வைப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

*பின்பு உள்ள 38-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'அந்தச் சீகாழியில் வாழும் மக்கள் அந்தணர்களுக்குச்* சிவப்பாக விளங்கும் தங்கக் காசுகள் முதலாக உள்ள பல பண்டங்களை நீரோடு கட்டித் தானமாகிய நல்ல

காரியத்தைப் புரிவார்கள்; நம்பராகிய பரமபுரீசருக்கு அடியவர்கள் திருவமுது புரிந்தருளும் பொருட்டு நல்ல ஆறு சுவைகளைப் பெற்ற உணவை வழங்குவார்கள்; நறுமணம் கமழும் நறுநாற்றத்தைப் பெற்ற மாலைகளை வண்டுகளோடு கட்டுவார்கள்; வேப்பிலை முதலாக உள்ள காப்பு நெடுங்காலம் இருக்கும் செயலைப் புரிவார்கள்.' பாடல் வருமாறு:

"செம்பொன்முத லானபல தானவினை செய்வார்;
நம்பர்அடி யார்அமுது செய்யநலம் உய்ப்பார்;
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்;
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார்."

செம் - அந்தச் சீகாழியில் வாழும் மக்கள் அந்தணர்களுக்குச் சிவப்பாக விளங்கும். பொன் - தங்கக் காசுகள்; ஆகுபெயர். முதலான - முதலாக உள்ள. பல தான - பல பண்டங்களை நீரோடு கட்டித் தானமாகிய. வினை - நல்ல செயலை. செய்வார் - புரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். நம்பர் - தம்முடைய அடியவர்களுக்குப் பல வகையான நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய பிரமபுரீசருக்கு. அடியார் - அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அமுது செய்ய - திருவமுது புரிந்தருளும் பொருட்டு. நலம் - நல்ல ஆறு சுவைகளைப் பெற்ற உணவை. உய்ப்பார் - வழங்குவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வம்பு - நறுமணம். அலர் - கமழும். நறும் - நறுநாற்றத்தைப் பெற்ற. தொடையல் - கட்டிய மாலைகளை; ஒருமை பன்மை மயக்கம். வண்டொடு - அவற்றின் மேல் மொய்க்கும் வண்டுகளோடு; ஒருமை பன்மை மயக்கம். தொடுப்பார் - தொடுப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். நிம்பம் - வேப்பிலை. முதலான - முதலாக உள்ள. கடி - காப்புப் பொருள்களை. வெண் சிறு

கடுகுகளையும் சேர்க்க. நீடு - நெடுங்காலம் இருக்கும். வினை - செயலை. செய்வார் - புரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 39-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் வாழும் அந்தணர்கள் வெண் சிறு கடுகுகளோடு பலவற்றை நெருப்பில் இட்டதனால் உண்டாகிய புகையினாலும், நெய்யையும் நறுமணம் கமழும் அகிற்கட்டைகளையும் தீயில் இட்டுப் புகைத்ததனால் எழுந்த நிரம்பியுள்ள புகையினாலும், அந்தணர்கள் வெப்பமாக உள்ள ஔபாசனத் தீயில் பெய்யும் புத்துருக்கு நெய், சமித்துக்கள் முதலிய ஆகுதிகளால் உண்டாகிய மேலான புகையினாலும், தெய்வத் தன்மையினுடைய நறுமணம் கமழுமாறு தங்களுக்குக் கைவரும் தாங்கள் புரியும் தொழில்களைப் பயன் விளையுமாறு புரிவார்கள்.' பாடல் வருமாறு:

"ஐயவி யுடன்பல அமைத்தபுகை யாலும்
நெய்யகில் நறும்குறை நிறைத்தபுகை யாலும்
வெய்யதழல் ஆகுதிவி ழுப்புகையி னாலும்,
தெய்வமணம் நாறவரு செய்தொழில் விளைப்பார்."

ஐயவியுடன் - அந்தச் சீகாழியில் வாழும் அந்தணர்கள் வெண் சிறு கடுகுகளோடு; ஒருமை பன்மை மயக்கம். பல - வேறு பல பொருள்களை. அவையாவன: சாம்பிராணி, மட்டிப் பால், குங்குலியம் முதலியவை. அமைத்த - நெருப்பில் பொருந்துமாறு இட்டதனால் எழுந்த. புகையாலும் - புகையினாலும். நெய் - பசு மாட்டின் நெய்யையும். அகில் - அகிற் கட்டை களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நறும் - நறுமணம் கமழும். குறை - வெட்டிய துண்டுகளையும்; ஒருமை பன்மை மயக்கம்.

நிறைத்த - தீயில் இட்டதனால் எழுந்து நிரம்பிய. புகையாலும் - புகையினாலும். வெய்ய - வெப்ப மாக உள்ள. தழல் - அந்தணர்கள் புரியும் ஔபாசனத் தீயில் பெய்த. ஆகுதி - பசு மாட்டின் நெய், அரசங்குச்சிகளாகிய சமித்துக்கள் முதலிய ஆகுதிகளால் எழுந்த. விழு - மேலான. ப்: சந்தி. புகையினாலும் - புகையாலும். தெய்வ - தெய்வத் தன்மையைப் பெற்ற. மணம் - நறுமணம். நாற - கமழுமாறு. வரு - தங்களுக்குக் கைவரும். செய் - தாங்கள் புரியும். தொழில் - ஈதல், ஏற்றல், வேட்டல், வேட்பித்தல், மணம் புரிதல், மணம் புரிவித்தல் என்ற ஆறு தொழில்களை; ஒருமை பன்மை மயக்கம். விளைப்பார் - அந்த அந்தணர்கள் பயனை விளையுமாறு புரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 40-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழியில் வாழும் அந்தணர்கள் அத்தகைய வாகிய தாங்கள் புரியும் பல தொழில்களை அன்றைத் தினம் முதலாக தேவலோகத்தில் வாழும் தேவர்களி னுடைய தலைவனாகிய பிரமபுரீசன் வழங்கிய திருவருளி னுடைய பெருமையை எடுத்துச் சொல்லும் நல்ல பண்பு அடைய பரிசுத்தமாக உள்ள அழகிய பெருமையைப் பெற்ற இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய நான்கு வேதங்களாகிய தொடர்ச்சியாக அமைந்த செய்யுள் நடையைப் பெற்ற சாத்திரங்களில் அமைந்த விதிப்படி பத்துத் தினங்களில் பயன் விளையுமாறு அந்த அந்தணர்கள் புரிந்தார்கள்.' பாடல் வருமாறு:

"ஆயபல செய்தொழில்கள் அன்றுமுதல் விண்ணோர்
நாயகன் அருட்பெருமை கூறும்நலம் எய்தத்
தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி ஐயிரு தினத்திலும் விளைத்தார்."

ஆய - அந்தச் சீகாழியில் வாழும் அந்தணர்கள் அத்தகையவாகிய. செய் - தாங்கள் புரியும். தொழில்கள் - மேலே கூறிய அறு வகைத் தொழில்களை; ஒருமை பன்மை மயக்கம். அன்று - அன்றைத்தினம். முதல் - முதலாக. விண்ணோர் - தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகன் - தலைவனாகிய பிரமபுரீசன். அருள் - வழங்கிய திருவருளினுடைய. பெருமை - பெருமையை. கூறும் - எடுத்துச் சொல்லும். நலம் - நல்ல பண்பு. எய்த - தங்களை அடைய. த்: சந்தி. தூய - பரிசுத்தமாக உள்ள. திரு - அழகிய. மா - பெருமையைப் பெற்ற. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். தொடர்ந்த - தொடர்ச்சியாக அமைந்த. நடை - செய்யுளின் நடையைப் பெற்ற. நூலின் - சாத்திரங்களில்; ஒருமை பன்மை மயக்கம். மேய - அமைந்துள்ள. விதி - விதிப்படி. ஐயிருதினத்தினும் - ஆண் குழந்தையாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய நாளிலிருந்து பத்துத் தினங்களிலும். தினத்தினும்: ஒருமை பன்மை மயக்கம். விளைத்தார் - பயன் விளையுமாறு அந்த அந்தணர்கள் புரிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 41-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'சீகாழியில் வாழும் வேதியராகிய சிவபாத இருதயர் தமக்கு ஆண் குழந்தையாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குத் திருநாமத்தை வைக்கும் சடங்கினுடைய வனப்பை புண்ணியாஹவாசன நாளில் பெறுமாறு நிலைத்து நிற்கச் செய்து பாதுகாப்பைச் செய்யும் உதய சூரியனைப் போலத் தோற்றப் பொலிவோடு விளங்கும் தலைவனாகிய திருஞான சம்பந்த மூர்த்தியை செந்தாமரை மலரின் மேல்

அமர்ந்திருக்கும் ஒப்பற்ற முதற் குழந்தையாகிய பிரமதேவன் என்று கூறுமாறு அந்த ஆண் குழந்தையைப் பரிசுத்தமாக உள்ள மணிகளை வரிசையாகக் கட்டி அலங்காரம் புரிந்த தொட்டிலில் வீற்றிருக்குமாறு அந்தச் சிவபாத இருதயர் புரிந்தார்.' பாடல் வருமாறு:

"நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமஉதயப் பரிதியில் திகழ்பி ரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி என்னத்
தூமணி நிரைத்தணிசெய் தொட்டில் அமர்வித்தார்."

நாம கரணத்து - சீகாழியில் வாழும் வேதியராகிய சிவபாத இருதயர் தமக்கு ஆண் குழந்தையாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குத் திருநாமத்தை வைக்கும் மங்கலச் சடங்கினுடைய. அழகு - வனப்பை. நாள் - புண்ணியாஹவாசனம் செய்யும் தினத்தில். பெற - பெறுமாறு. நிறுத்தி -நிலைத்து நிற்கச் செய்து; திருஞான சம்பந்த மூர்த்தி என்னும் திருநாமத்தை நிலைத்து நிற்கச் செய்து. ச்: சந்தி. சேம - பாதுகாப்பைச் செய்யும். உதயப் பரிதியில் - உதய சூரியனைப் போல். திகழ் - தோற்றப் பொலிவோடு விளங்கும். பிரானை - தலைவனாகிய திருஞான சம்பந்த மூர்த்தியை. த்: சந்தி. தாமரை மிசை - செந்தாமரை மலரின் மேல் வீற்றிருக்கும். த்: சந்தி. தனி - ஒப்பற்ற. முதல் - முதல் தொழிலாகிய படைப்பைப் புரிகின்ற. குழவி - திருமாலினுடைய ஆண் குழந்தையா கிய பிரமதேவன். என்ன - என்று கூறுமாறு. த்: சந்தி. தூ - பரிசுத்தமாக உள்ள. மணி - மாணிக்கங்களை; ஒருமை பன்மை மயக்கம். 'அடிக்கும் சிறிய மணிகளை' எனலும் ஆம். நிரைத்து - வரிசையாக மேலே கட்டித் தொங்க விட்டு. அணி செய் - மலர்மாலைகளால் அலங்காரம் செய்த. தொட்டில் - ஒரு தொட்டிலில். அமர்வித்தார் - அந்த ஆண்

குழந்தையை அந்தச் சிவபாத இருதயர் வீற்றிருக்குமாறு புரிந்தார்.

பின்பு வரும் 42-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பெருமையைப் பெற்ற இமய மலை அரசன் ஈன்றெடுத்த பூங்கொடியைப் போன்றவளாகிய பெரிய நாயகி அம்மை விரும்பும் தன்னுடைய கொங்கைகளி லிருந்து கறந்த பாலைப் பொருள் அறிவதற்கு அருமையாக உள்ள வேதங்களினால் கூறப் பெற்ற சிவஞானத்தை அந்தப் பாலோடு குழைத்து வழங்க அந்தப் பாலைத் திருவமுது செய்தருளுவாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை ஈன்று அளித்த வேதியப் பெண்மணியாராகிய பகவதியார் பரமேசுவரராகிய பிரமபுரீசருடைய திருவடிகளை வாழ்த்தி வணங்கும் பக்தியையே தம்முடைய அழகிய கொங்கைகளிலிருந்து கறந்து அந்த ஆண் குழந்தைக்குத் திருவமுது புரிந்தருளுமாறு செய்தார்.' பாடல் வருமாறு:

"பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
அருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமறைவி யார்பரமர் தாள்பரவும் அன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார்."

பெரு - பெருமையைப் பெற்ற. மலை - இமயமலை அரசன்; திணை மயக்கம். பயந்த - ஈன்றெடுத்த. கொடி - பூங்கொடியைப் போன்றவளாகிய பெரிய நாயகி அம்மை; உவம ஆகுபெயர். பேணும் - விரும்பும். முலையின் பால் - தன்னுடைய கொங்கைகளிலிருந்து ஒரு பொற் கிண்ணத்தில் கறந்த பாலை. முலை: ஒருமை பன்மை மயக்கம். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களில் கூறப் பெற்ற; ஒருமை

பன்மை மயக்கம். குழைத்து - சிவஞானத்தை அந்தப் பாலோடு குழைத்து வழங்க. அமுது செய்தருளுவாரை - திருவமுது செய்தருளுபவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் என்னும் ஆண் குழந்தையை. த்: சந்தி. தரு - ஈன்றளித்த. மறைவியார் - வேதியப் பெண்மணியாராகிய பகவதியார். பரமர் - பரமேசுவரராகிய பிரமபுரீசருடைய. தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பரவும் - வாழ்த்தி வணங்கும். அன்பே - பக்தியையே. திரு - தம்முடைய அழகிய. முலை - கொங்கைகளிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். சுரந்து - ஒரு பொற் கிண்ணத்தில் கறந்து. அமுது செய்தருளுவித்தார் - அந்தச் சிவபாத இருதயர் அந்த ஆண் குழந்தைக்கு அந்தப் பாலைத் திருவமுது புரிந்தருளுமாறு செய்தார்.

பின்பு உள்ள 43-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயரும் பகவதியாரும் கங்கையாறு உலாவும் சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய ஐயராகும் பிரமபுரீசர் வழங்கிய திருவருளினால் இந்தப் பூவுலகத்துக்குக் கிடைத்த பாக்கியம் என்று கூறுமாறு சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும் பெருமையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு வேறாக உள்ள பல காப்புப் பொருள்கள் மிகை என எண்ணி அவற்றை அணிவதற்கு விரும்பாதவர்களாகிய விபூதியை அந்த ஆண் குழந்தையினுடைய அழகிய நுதலில் நிற்கச் செய்து அழகு நிறைந்து விளங்குமாறு புரிந்தார்கள்.' பாடல் வருமாறு:

"ஆறுலவு செய்யசடை ஐயர்அரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார்."

ஆறு - அந்தச் சிவபாத இருதயரும் பகவதியாரும் கங்கையாறு. உலவு - உலாவும். செய்ய - சிவந்த. சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற. ஐயர் - ஐயராகிய பிரமபுரீசர். அருளால் - வழங்கிய திருவருளால். ஏ: அசைநிலை. பேறு உலகினுக்கு - இந்தப் பூவுலகத்திற்குக் கிடைத்த பாக்கியம். என - என்று கூறுமாறு; இடைக்குறை. வரும் - சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும். பெரியவர்க்கு - பெருமையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. வேறு - வேறாக உள்ள. பலகாப்பு -பல காப்புப் பொருள்கள்; ஒருமை பன்மை மயக்கம் அவையாவன: வேப்பிலை முதலியவை. மிகை - அதிகமானது. என்று - என எண்ணி. அவை - அந்தக் காப்புப் பொருள்களை. விரும்பார் - தங்களுடைய ஆண் குழந்தைக்கு அணிவதை விரும்பாதவர்களாகி; முற்றெச்சம்; ஒருமை பன்மை மயக்கம். நீறு - விபூதியை. திரு - அழகிய. நெற்றியில் - அந்த ஆண் குழந்தையினுடைய நுதலில். நிறுத்தி - நிற்கச் செய்து. நிறைவித்தார் - நிறைந்து விளங்குமாறு புரிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 44-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயர் செம்மையான பொருள்களை எடுத்து உரைக்கும் அழகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் இனிய சொற் சுவையையும் பொருட் சுவையையும் பெற்று விளங்கும் செந்தமிழ் மொழியில் சிறப்பை அடைந்து திகழும் வண்ணம் சீகாழியில் திருவவதாரம் செய்தருளிவரும் தலைவனாகிய திருஞான சம்பந்தன் என்னும் ஆண் குழந்தையைத் தன்னுடைய அன்னையாராகிய பகவதியாரினுடைய அழகிய மடியாகிய இடத்திலும், விளங்கும் மாணிக்கங்களைப் பதித்திருக்கும்

ஆசனத்திலும், பரிசுத்த முள்ள ஒளியை வீசும் மாணிக்கங்களைப் பதித்திருக்கும் தொட்டிலிலும், உறங்கும் மலர்களைப் பரப்பி விரித்திருக்கும் படுக்கையிலும் அமரச் செய்து தாலாட்டும் நன்மைகள் பலவற்றைப் பாராட்டிப் பாடினார்கள்.' பாடல் வருமாறு:

"தாயர்திரு மடித்தலத்தும், தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர்த் தொட்டிலிலும், தூங்குமலர்ச் சயனத்தும்
சேயபொருள் திருமறையும் தீந்தமிழும் சிறக்கவரும்
நாயகனைத் தாலாட்டும் நலம்பலபா ராட்டினார்."

சேய - அந்தச் சிவபாத இருதயர் செம்மையாக உள்ள. பொருள் - பொருள்களை எடுத்து உரைக்கும்; ஒருமை பன்மை மயக்கம். திரு - அழகிய. மறையும் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். தீந்தமிழும் - இனிய சொற்சுவை, பொருட்சுவை என்னும் இரண்டு சுவைகளைப் பெற்று விளங்கும் செந்தமிழ் மொழியும். சிறக்க - சிறப்பை அடைந்து திகழும் வண்ணம். வரும் - சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும். நாயகனை - தலைவனாகிய திருஞான சம்பந்தனை. த்: சந்தி. தாயர் - தன்னுடைய அன்னையாராகிய பகவதியாருடைய. திரு - அழகிய. மடி - மடியாகிய. த்: சந்தி. தலத்தும் - இடத்திலும். தயங்கும் - விளங்கும். மணி - மாணிக்கங் களைப் பதித்து விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தவிசினிலும் - ஆசனத்திலும். தூய - பரிசுத்தமாக உள்ள. சுடர் - ஒளியை வீசும் மாணிக்கங்களைப் பதித்திருக் கும்; ஆகுபெயர். த்: சந்தி. தொட்டிலிலும் - ஆட்டும் தொட்டிலிலும். தூங்கு - உறங்கும். மலர் - மலர்களைப் பரப்பியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சயனத்தும் - மெத்தையாகிய படுக்கையிலும். தாலாட்டும் -

படுக்க வைத்து தாலாட்டுப் பாடல்களைப் பாடும்; 'தாலேலோ தாலேலோ' என்று பாடும். நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். பல - பலவற்றை. பாராட்டினார் - பாராட்டிப் பெண்மணிகள் பாடினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அவ்வாறு பாடப் பெறும் ஒரு தாலாட்டுப் பாடல் பெரியாழ்வார் திரு மொழியில் வருவது. அது வருமாறு:

''மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப் பொன்னாற் செய்தவண்ணச் சிறு தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்;
மாணிக் குறளனே தாலேலோ!
வையம் அளந்தானே தாலேலோ.''

அடுத்து உள்ள 45-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வளர்ந்து வரும் முறைமையாக உள்ள பருவங்களில் வளரும் புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய ஆண் குழந்தையாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் தலையெடுத்துச் சிறந்து நிற்குமாறு தாம் பெற்ற அழகிய தலையை மேலே எடுத்து, ''பெருமையைப் பெற்ற மழுவாயுதத்தைத் தம்முடைய திருக்கரத்தில் ஏந்திய வராகிய பிரமபுரீசருக்குப் புரியும் திருத்தொண்டுகளை அல்லாமல் வேறு திருத் தொண்டுகளைப் புரிவதற்கும் யாம் இணங்க மாட்டோம்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரைப் போலத் தம்முடைய அழகிய வதன மண்டலம் அசைந்து விளங்கச் செங்கீரை ஆடியருளினார்.' பாடல் வருமாறு:

"வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலையெடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெருமழுவார் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்போல்
திருமுகமண் டலமசையச் செங்கீரை ஆடினார்."

வரு - தாம் வளர்ந்து வரும். முறைமை - முறைமையாக உள்ள. ப்: சந்தி. பருவத்தில் - பருவங்களில்; ஒருமை பன்மை மயக்கம். அந்தப் பருவங்களாவன: குழந்தைப் பருவம், சிறுவராக உள்ள பருவம், காளைப் பருவம் என்பவை. வளர் - வளர்ச்சியைப் பெற்று வரும். புகலி - புகலியாகிய சீகாழியில். ப்: சந்தி. பிள்ளையார் - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறைகள் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதுர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும். தலையெடுப்ப - தலையெடுத்துச் சிறந்து நிற்குமாறு. ஆண்ட - தாம் பெற்றுள்ள. திரு - அழகிய. முடி - தலையை. எடுத்து - மேலே எடுத்து. ப்: சந்தி. பெரு - பெருமையைப் பெற்ற. மழுவார் - மழு என்னும் ஆயுதத்தைத் தம்முடைய திருக்கரத்தில் ஏந்தியவராகிய பிரமபுரீசருக்கு. தொண்டு - புரியும் திருத்தொண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். அல்லால் - அல்லாமல். பிறிது - வேறு திருத்தொண்டுகளை. இசையோம் - புரிவதற்கு யாம் இணங்க மாட்டோம். என்பார் போல் - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரைப் போல். திரு - அழகிய. முகமண்டலம் - வட்டமாகிய தம்முடைய வதனம். அசைய - அசைந்து விளங்குமாறு. ச்: சந்தி. செங்கீரை ஆடினார் - செங்கீரை ஆடியருளினார். செங்கீரை - முதல் முதலாகக் குழந்தை பேசும் குதலைச் சொற்கள். ஒரு செங்கீரைப் பருவப் பாடல் பெரியாழ்வார் பாடியருளியது. அது வருமாறு:

"உய்ய உலகு படைத்துண்ட மணிவயிறா
ஊழிதோ றூழிபல ஆவின்இலை யதன்மேல்
பையஉ யோகுதுயில் கொண்டபரம் பரனே
பங்கய நீணயனத் தஞ்சனமே னியனே
செய்யவள் நின்னகலம் சேமம் எனக்கருதிச்
செவ்வு பொலிமகரக் காதுதிகழ்ந் திலக
ஐய, எனக்கொருகால் ஆடுக செங்கீரை!
ஆயர்கள் போரேறே, ஆடுக, ஆடுகவே!"

பின்பு உள்ள 46-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், "இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்களே, யாம் சைவ சமயத்தை அல்லாமல் வேறு சமயங்களை அறியமாட்டோம்; எம்முடைய எதிரில் நாடி வாராமல் அகன்று செல்வீர்களாக" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு தம்முடைய அழகிய கைகளைத் தட்டுவதையும் தூயவனாகிய பிரமபுரீசனிடம் விருப்பம் மருவிய கஞ்சதாளங்களைப் பெறுவதற்காகத் தட்டுவதையும் காட்டுபவற்றைப் போலத் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருக்கரங்களி னால் சப்பாணி கொட்டியருளினார்.' பாடல் வருமாறு:

" 'நாம்அறியோம், பரசமயம் உலகிர்!எதிர் நாடாது
போமகல' என்றங்கை தட்டுவதும் புனிதன்பால்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதும் காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினால் சப்பாணி கொட்டினார்."

நாம் - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் யாம். உலகிர் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்களே. பரசமயம் - சைவசமயம் அல்லாத வேறு சமயங்களை; ஒருமை பன்மை மயக்கம்.

அறியோம் - அறிய மாட்டோம். எதிர் - எம்முடைய எதிரில். நாடாது - நாடி வாராமல். போம் அகல - அகன்று போவீர்களாக. அகல: எச்சத்திரிபு. என்று - எனது திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. அம்கை - தம்முடைய அழகிய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தட்டுவதும் - கொட்டு வதையும். புனிதன் பால் - தூயவனாகிய பிரமபுரீசனிடத் தில். காமரு - விருப்பம் மருவிய. தாளம் - கஞ்ச தாளங்களை; ஒருமை பன்மை மயக்கம். பெறுதற்கு - தாம் பெறுவதற்காக. ஒத்துவதும் - தட்டுவதையும். காட்டுவ போல் - காட்டுபவற்றைப் போல். தாமரை - செந்தாமரை மலர்களைப் போல்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செம் - சிவந்து விளங்கும். கைகளினால் - திருக்கரங்களால். சப்பாணி கொட்டினார் - சப்பாணியைக் கொட்டியருளி னார். சப்பாணி கொட்டுதல் - ஒரு கையோடு மற்றொரு கையைத் தட்டுதல். பாணி - கை. பெரியாழ்வார் திருமொழியில் வரும் ஒரு சப்பாணிப் பருவப் பாசுரம் வருமாறு:

"மாணிக்கக் கிண்கிணி ஆர்ப்ப மருங்கின்மேல்
ஆணிப்பொன் னாற்செய்த ஆய்பொன் னுடைமணி
பேணிப் பவளவாய் முத்திலங்கப் பண்டு
காணி கொண்ட கைகளால் சப்பாணி!
கருங்குழற் குட்டனே சப்பாணி!"

பின்பு வரும் 47-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வேதங்கள் விதித்த விதிகளிலிருந்து பிழைபடும் சைவ சமயம் அல்லாத வேறு சமயங்களாகிய படுகுழியில் விழுந்து தாங்கள் செல்லும் நல்ல கதி தவறப் பெரிய ஆகாயத்தில் நிரம்பியுள்ள நறுமணத்தை நிரப்பப் பெற்ற கங்கையாறு ஓடும் கதியைப் பொருந்தி விளங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய தோணியப்பர்

சிவஞானத்தை வழங்கியருள அதைப் பெறுவதற்கு உரிமையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், சந்திரன் தவழும் உச்சியைப் பெற்ற தம்முடைய திருமாளிகைக்கு முன்னே இருக்கும் முற்றத்தினுடைய பக்கத்தில் தவழ்ந்தருளினார்.' பாடல் வருமாறு:

"விதிதவறு படும்வேற்றுச் சமயங்களி டைவிழுந்து
கதிதவழ இருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை
கதிதவழும் சடைமுடியார் ஞானம்அளித் திடஉரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றில் மருங்குதவழ்ந் தருளினார்."

விதி - வேதங்கள் விதித்த விதிகளிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். தவறுபடும் - பிழைபடும். வேற்றுச் சமயங்களிடை - சைவ சமயம் அல்லாத வேறு சமயங் களாகிய படுகுழியில். விழுந்து கதி - விழுந்து தாங்கள் செல்லும் நல்ல கதி. தவழ - தவற. இரு - பெரிய; 'கருமையாகிய' எனலும் ஆம். விசும்பு - ஆகாயத்தில். நிறைந்த - நிரம்பியுள்ள. கடி - நறுமணத்தை. வார் - நிரம்பப் பெற்ற. கங்கை - கங்கையாறு. கதி - ஓடும் கதியை. தவழும் - பொருந்தி விளங்கும். சடைமுடியார் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய தோணியப்பர். தோணியப்பர் - சிகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் ஒரு கட்டுமலை யின் மேல் உள்ள தோணியில் வீற்றிருக்கும் சிவபெருமானார். ஞானம் - சிவஞானத்தை. அளித்திட - வழங்கியருள. உரியார் - அதைப் பெறுவதற்கு உரிமையைப் பெற்ற வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். மதி - சந்திரன். தவழ் - தவழும் உச்சியைப் பெற்ற. மாளிகை - தம்முடைய திருமாளிகைக்கு முன்னால் இருக்கும். முன்றில் - முற்றத்தினுடைய. மருங்கு - பக்கத்தில். தவழ்ந்தருளினார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாராகிய ஆண் குழந்தையார் தவழ்ந்தருளினார்.

*பின்பு உள்ள 48-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'தம்மைச் சுற்றி வரும் பெருமையைப் பெற்று விளங்கும் தம்முடைய உறவினர்களாகிய மயில்களைப் போன்ற பெண்மணிகளும், வேலைக்காரிகளும், ''சீகாழியில் வாழும் மக்களுடைய சீராட்டைப் பெற்றவரே, கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களினுடைய கற்பகத்தைப் போன்றவரே'' என ச, ரி, க, ம, பத, நி, ச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற சங்கீதமும், பல வகையான அறுபத்து நான்கு கலைகளும், எல்லா உலகங்களிலும் வாழ்பவர்களும் தனித்தனியாக வாழுமாறு சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் என்னும் ஆண் குழந்தையாரை, ''வருக! வருக!'' என்று அழைக்க.' பாடல் வருமாறு:

''சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
'காழியர்தம் சீராட்டே, கவுணியர்தம் கற்பகமே'என்
றேழிசையும் பலகலையும் எவ்வுலகும் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை 'வருகவருக' எனஅழைப்ப.''

இந்தப் பாடல் குளகம். சூழவரும் - தம்மைச் சுற்றி வரும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். சுற்ற - தம்முடைய உறவினர்களாகிய; திணை மயக்கம். த்: சந்தி. தோகையரும் - மயில்களைப் போன்ற பெண்மணிகளும்; உவம ஆகுபெயர். தாதியரும் - வேலைக்காரிகளும். காழியர் தம் - சீகாழியில் வாழும் மக்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. சீராட்டே - சீராட்டைப் பெற்றவரே. கவுணியர் தம் - கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. கற்பகமே - கற்பக மரத்தைப் போன்றவரே; உவம ஆகு பெயர். என்று - என. ஏழிசையும் - ச, ரி, க, ம, பத, நி, ச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற

சங்கீதமும். பல கலையும் - பல வகையான அறுபத்து நான்கு கலைகளும்; ஒருமை பன்மை மயக்கம். அவை இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. எவ்வுலகம் - எல்லா உலகங்களிலும் வாழ்பவர்களும்; இட ஆகு பெயர். உலகும்: ஒருமை பன்மை மயக்கம். தனித்தனி - தனித்தனியாக. ஏ: அசை நிலை. வாழ - நல்ல வாழ்வைப் பெறுமாறு. வரும் - சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும். அவர் தம்மை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் என்னும் ஆண் குழந்தையாரை. தம்: அசை நிலை. 'வருக, வருக' என - வருக, வருக என்று. என: இடைக்குறை. அழைப்ப - அழைக்க. 'வருக, வருக' என்று ஆண் குழந்தையை அழைக்கும் பருவத்தை, வருகைப் பருவம், வாரானைப் பருவம் என்று புலவர்கள் கூறுவார்கள். மார்க்கசகாயதேவர் பாடியருளிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழில் 6-ஆவதாக உள்ள வருகைப் பருவத்தில் வரும் முதற் பாடல் வருமாறு:

"செந்தா மரையிற் சிறுசதங்கை சிலம்பக் குதம்பைக்குழை மின்னச்
செம்பொன் அரைஞான் நெகிழ்ந்தொளிரச் சிகரக் குடுமி இசைந்தசைய
வந்தா தரவின் மணிவாயார் மழலை காட்டி மரகதத்தாய்
மடிமீ தேறி முலையுண்டு வளர்ந்து விரிஞ்சைப் பதிவாழும்
கந்தா வருக, மணம்கமழும் கடம்பா வருக, அசுரேசர்
காலா வருக, பன்னிரண்டு கையா வருக, வழித்துணைவர்
மைந்தா வருக, மயிலேறும் மன்னா வருக, அடியார்கள்
வாழ்வே வருக, தெய்வசிகா மணியே வருக, வருகவே."

பின்பு வரும் 49-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெருமையைப் பெற்று விளங்கும் புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய அழகிய சிரிப்பால் தம்மை அழைத்தவர்களாகிய பெண்மணிகளினுடைய செழிப்பைப் பெற்ற வதனங்களை மலர்ச்சியைப் பெறுமாறு செய்தருளியும், தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகும் மகிழ்ச்சி தலை சிறந்து நிற்க, அந்தப் பெண்மணிகளின் மேல் போகுமாறு நடை வண்டியைத் தள்ளி விட்டும், தம்முடைய திருவுள்ளம் பக்தியினால் உருக்கத்தை அடைந்து கரைவைப் பெற்று அலைந்து விளங்க அந்தப் பெண்மணிகளோடு அவர்களை அணைத்துக் கொண்டு தம்முடைய கைகளால் தழுவிக் கொண்டும், முன்னால் பெருகி எழுந்த ஆனந்தத்தை அந்தப் பெண்மணிகள் அடையுமாறு வழங்கியருளினார்.' பாடல் வருமாறு:

"திருநகையால் அழைத்தவர்தம் செழுமுகங்கள் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனம் கரைந்தலைய உடனணைந்து தழுவியும்முன்
பெருகியஇன் புறஅளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். புகலிப் பிள்ளையார் - புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். திரு - தம்முடைய அழகிய. நகையால் - சிரிப்பினால். அழைத்தவர்தம் - தம்மை வருக, வருக என்று அழைத்தவர்களாகிய பெண்மணிகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. செழு - செழிப்பைப் பெற்ற. முகங்கள் - வதனங்களை. மலர்வித்தும் - மலர்ச்சியை அடையுமாறு செய்தருளியும். வரு - தம்முடைய திருவுள்ளத்தில்

உண்டாகும். மகிழ்வு - மகிழ்ச்சி. தலைசிறப்ப - தலை சிறந்து நிற்க. மற்று: அசைநிலை. அவர்மேல் - அந்தப் பெண்மணிகளின்மேல்; ஒருமை பன்மை மயக்கம். செல - தாம் ஒட்டும் நடை வண்டியைப் போகுமாறு; இடைக்குறை. உகைத்தும் - தள்ளிவிட்டும். உருகிமனம் - தம்முடைய திருவுள்ளம் பக்தியினால் உருக்கத்தை அடைந்து. கரைந்து அலைய - கரைதலைப் பெற்று அலைந்து விளங்க. உடன் - அந்தப் பெண்மணிகளோடு. அணைந்து - அவர்களை அணைத்துக் கொண்டு. தழுவியும் - தம்முடைய இரண்டு கைகளாலும் தழுவிக் கொண்டும். முன் - முன்னால். பெருகிய - பெருகி எழுந்த. இன்பு - ஆனந்தத்தை. உற - அந்தப் பெண்மணிகள் அடையுமாறு. அளித்தார் - வழங்கியருளினார்.

பிறகு வரும் 50-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் வளர்ந்து வரும் குழந்தைப் பருவத்தின் முறைப்படி ஓராண்டு நிறைவதற்கு முன்னால் மலர்களைக் கோடுகளைப் பெற்ற வண்டுகள் கிளறும் கருமையான மென்மையைப் பெற்ற சுருள்களைப் பெற்ற தம்முடைய தலைமயிரினோடு அலையுமாறு நேராக நின்று கொண்டு கிளர்ந்து எழும் கிண்கிணி என்னும் ஒலியை எழுப்பும் கிண்கிணிகள் இனிய நாதத்தை எழும்புமாறு செய்ய கீழான தன்மையைப் பெற்ற வழிகளாகிய சைவ சமயம் அல்லாத வேறு சமயங்களாகிய சமண சமயமும் பௌத்த சமயமும் தளர்ந்து போய் நடந்து ஒழிந்து போகுமாறு தாம் தளர்நடை நடந்தருளினார்.' பாடல் வருமாறு:

"வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்
டுளர்கருமென் சுருட்டுகுஞ்சி யுடன்அலையச் செந்நின்று
கிளர்ஒலிகிண் கிணிஎழுப்பக் கீழ்மைநெறிச் சமயங்கள்
தளர்நடையிட் டறத்தாமும் தளர்நடையிட் டருளினார்."

வளர் - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் வளர்ந்து வரும். பருவ - குழந்தைப் பருவத்தினுடைய. முறை - முறைப்படி. ஆண்டு - ஒரு பிராயம். வருவதன்முன் - நிறைவதற்கு முன்னால். மலர் - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். வரி - கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். உளர் - கிளறும்; கிண்டும். கரு - கரிய. மென் - மென்மையான. சுருள் - சுருள்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். குஞ்சியுடன் - தம்முடைய தலை மயிரோடு. அலைய - அந்த வண்டுகள் அலையுமாறு. ச்: சந்தி. செந்நின்று - நேராக நின்று கொண்டு. கிளர் - கிளர்ந்து எழும். ஒலி - கிண்கிணி என்னும் ஒலியை எழுப்பும். எழுப்ப - கிண் கிணிகள் இனிய நாதத்தை எழுப்புமாறு செய்ய. க்: சந்தி. கீழ்மை நெறி - இழிவான தன்மையைப் பெற்ற வழிகயாகிய. நெறி : ஒருமை பன்மை மயக்கம். ச்:சந்தி. சமயங்கள் - சைவ சமயம் அல்லாத வேறு சமயங்களாகிய சமண சமயமும் பௌத்த சமயமும். தளர்நடை இட்டு - தளர்ந்து போய் நடத்தலை மேற்கொண்டு. அற - ஒழிந்து போகுமாறு. த்: சந்தி. 'தாமும்' என்றது 'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும்' என்பதை. தளர்நடையிட்டருளினார் - தளர் நடை நடந்தருளினார்.

பெரியாழ்வார் திருமொழியில் வரும் தளர்நடைப் பருவத்தைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"தொடர்சங்கிலி சலார்பிலார் என்னத்
　　தூங்கு பொன்மணி ஒலிப்பப்
படுமும் மதப்புனல் சோரவாரணம்
　　பைய நின்றூர் வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப
　　உடைமணி பறைக றங்கத்

தடந்தாள் இணைகொண்டு சார்ங்கபாணி
தளர்நடை நடவானோ.''

பிறகு வரும் 51-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வேலைக்காரிகளினுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு தளர்ந்த நடையினுடைய தளர்ச்சியை அகன்று ஒளியை வீசும் தாம் அணிந்து கொண்டிருந்த சிறிய மணிகளைக் கட்டியிருக்கும் சலங்கைகளைக் கட்டிய வடம் பக்கத்தில் சுற்றியுள்ள தம்முடைய திருவடிகளாகிய செந்தாமரை மலர்கள் தரையில் படியுமாறு தாம் வளர்ந்து வரும் குழந்தைப் பருவத்தின் முறைப்படி ஒரு பிராயத்திற்கு மேல் அடையத் தம்முடைய திருவடிகளால் நடைவண்டியின் உதவி இல்லாமல் நடந்தருளி விளையாட்டைப் புரிவதற்கு ஆரம்பித்தார்.' பாடல் வருமாறு:

''தாதியர்தம் கைப்பற்றித் தளர்நடையின் அசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை ஆண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினார்.''

தாதியர் தம் - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமாளிகையில் குற்றேவல்களைச் செய்யும் வேலைக் காரிகளினுடைய. தம்: அசைநிலை. கை - கைகளை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பற்றி - பிடித்துக் கொண்டு. த்: சந்தி. தளர்நடையின் - தாம் முன்பு நடந்த தளர்ந்த நடையினுடைய. அசைவு - தளர்ச்சியிலிருந்து. ஒழிந்து - நீங்கி. சோதி - ஒளியை வீசும். அணி - தாம் அணிந்து கொண்டிருந்த. மணி - சிறிய மணிகளைக் கட்டியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சதங்கை -சலங்கைகளை; ஒருமை பன்மை மயக்கம்.

தொடுத்த - கட்டிய. வடம் - மாலை; சலங்கைகளின் மாலை. புடை - பக்கத்தில். சூழ்ந்த - சுற்றியுள்ள. பாதம் - தம்முடைய திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். மலர் - செந்தாமரை மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நிலம் - தரையில். பொருந்த - படியுமாறு. ப்: சந்தி. பருவமுறை - குழந்தைப் பருவத்தின் முறைப்படி. ஆண்டு ஒன்றின் மீது - ஒரு பிராயத்திற்கு மேல். அணைய - வந்து சேர. நடந்தருளி - தம்முடைய திருவடிகளால் நடை வண்டியின் உதவியில்லாமல் நடந்தருளி. விளையாட - விளையாட்டைப் புரிவதற்கு. த்: சந்தி. தொடங்கினார் - அந்த நாயனார் ஆரம்பித்தார்.

அடுத்து உள்ள 52-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிறிய மணிகளைக் கட்டிய நடை வண்டியைத் தொடர்ச்சியாக நடந்து உருண்டு ஓடச் செய்து செழுமையைப் பெற்ற மணற்பரப்பில் சிற்றில்களைக் கட்டி விளையாடும் நறுமணம் கமழும் நெற்றிகளைப் பெற்ற பேதைப் பருவம் பெண்களின் பக்கத்தில் நடந்து ஓடிச் சென்று அவர்கள் கட்டியிருக்கும் சிற்றில்களைத் தம்முடைய கால்களால் உதைத்துத் தள்ளி அழித்தும், சிறியவையாக உள்ள வேர்வைத் துளிகள் தம்முடைய திருமேனியின் மேல் முகிழ்க்கக் கொழுமையைப் பெற்ற புழுதியில் அளைந்த தம்முடைய திருமேனியின் கோலம் வீதியில் பெரிய பிரகாசத்தைப் பரவுமாறு செய்ய நடந்து வந்த வளர்ச்சியை அடைந்தருளினார்.' பாடல் வருமாறு:

"சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச்
செழுமணற்சிற் றில்கள்இழை
நறுநுதற்பே தையர்மருங்கு
நடந்தோடி அடர்ந்தழித்தும்

குறுவியர்ப்புத் துளிஅரும்பக்
கொழும்பொடியா டியகோலம்
மறுகிடைப்பே ரொளிபரப்ப
வந்துவளர்ந் தருளினார்.''

சிறு - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் சிறிய. மணி - மணிகளைக் கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தேர் - நடை வண்டியை; முக்காற் சிறுதேரை. தொடர்ந்து - தொடர்ச்சியாக நடந்து. உருட்டி - உருண்டு ஓடச் செய்து. ச்: சந்தி. செழு - செழுமையைப் பெற்ற. மணல் - மணற்பரப்பில். சிற்றில்கள் - சிறிய வீடுகளை. இழை - கட்டி விளையாடும். நறு - நறுமணம் கமழும். நுதல் - நெற்றிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பேதையர் - பேதைப் பருவப் பெண்களினுடைய. மருங்கு - பக்கத்தில். நடந்து ஓடி - நடந்து ஓடிச் சென்று. அடர்ந்து - தம்முடைய கால்களால் உதைத்துத் தள்ளி. அழித்தும் - அந்தச் சிற்றில்களைச் சிதைத்தும். குறு - சிறியவையாக; வினையாலணையும் பெயர். வியர்ப்புத்துளி - வேர்வைத் துளிகள்; ஒருமை பன்மை மயக்கம். அரும்ப - தம்முடைய திருமேனியின் மேல் முகிழ்க்க. க்: சந்தி. கொழும் - கொழுமையைப் பெற்ற. பொடி - புழுதியில். ஆடிய - அளைந்த. கோலம் - தம்முடைய திருமேனியி னுடைய கோலம். மறுகிடை - திருவீதியில். ப்: சந்தி. பேரொளி - பெரிய பிரகாசத்தை. பரப்ப - பரவுமாறு செய்ய. வந்து - நடந்து வந்து. வளர்ந்தருளினார் - வளர்ச்சியை அடைந்தருளினார். ஆண்பாற் பிள்ளைத் தமிழ்களில் சிற்றிற் பருவம் என்று ஒரு பருவம் உண்டு. அதில் ஓர் ஆண் குழந்தை வீதியில் மணலால் சிற்றில்களைக் கட்டி விளையாடும் சிறுமிகளினுடைய அந்தச் சிற்றில்களைத் தன்னுடைய

கால்களால் உதைத்துத் தள்ளிச் சிதைத்து விடுவான். அதைக் கண்ட அந்தச் சிறுமியர்கள், ''அடியேங்களுடைய சிற்றில்களைச் சிதையேல்'' என்று கெஞ்சுவார்கள்.

சிதம்பர சுவாமிகள் பாடியருளிய திருப் போரூர்ச் சந்நிதி முறையில் வரும் பிள்ளைத் தமிழில் உள்ள முதற் பாடல் வருமாறு:

''தேமாய கனியின் அடுப்பமைத்துத்
திகழூன் கழிந்த வலம்புரியிற்
செந்தேன் உவைப்பெய் தரவீன்ற
செழுமா மணிவெங் கனல்மூட்டிப்

பூமா தளையின் விதையரிசி
புகட்டிச் சமைத்துக் கதலிமடற்
பொங்கப் பிழியும் அதன்கனியும்
பொருந்த அளவிக் கறிபட்டுக்

காமா தவிப்பூம் பந்தரிடைக்
கயற்கண் ஆயம் இழைத்தவண்டல்
கருதும் புவன கோடியெல்லாம்
கரந்தும் படைத்தும் காக்குமொரு

சீமான் உனக்கோ லேக்கோசொல்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேரூர் வீதிப் போரூரா
சிறியேம் சிற்றில் சிதையேலே.''

மார்க்க சகாய தேவர் பாடியருளிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழில் வரும் சிற்றிற் பருவத்தில் உள்ள முதற் பாடல் வருமாறு:

''வேதன் முடியிற் படும்கமலம் விண்ணோர் சிரத்தில்
அணிபதுமம்
விசய மயில்மேல் எழும்முளரி விமலர் புயம்சேர்
திருக்கஞ்சம்

சாத மொழிக்கும் அம்புயம்ளம் தலைமேல் இருக்கும் புது
நளினம்
தண்டை சதங்கை கிண்கிணிசேர் கலகம் புவியிற்
படலாமோ?
காதம் புதிய மணம்கமழும் கடம்பா முருகா கதிர்வேலா
கந்தா குமரா பெருங்கருணைக் கண்ணா வண்ணா
கதியருளை
யாதண் களபம் அணிமார்பா அடியேம் சிற்றில் அழியேலே
அரசே விரிஞ்சைப் பதிவாழ்வே அடியேம் சிற்றில்
அழியேலே."

திவ்வியப் பிரபந்தத்தில் நாச்சியார் திருமொழியில் 2-ஆவதாக உள்ள திருப்பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

"நாமம் ஆயிரம் ஏத்தநின்ற நாராயணா நானே உன்னை
மாமிதன் மகனாகப் பெற்றால் எமக்கு வாதை தவிருமே
காமன் போதரு காலமென்று பங்குனிநாள் கடை
பாரித்தோம்
தீமை செய்யும் சிரீதரா எங்கள் சிற்றில்வந்து சிதையேலே."

பின்பு வரும் 53-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மங்கையாகிய பெரிய நாயகியோடு உடனாகி வளர்கின்ற சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டுமலையின் மேல் திகழும் தோணியில் அமர்ந்திருந்த பிறைச் சந்திரன் சேர்ந்துள்ள சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய தோணியப்பர் வழங்கிய திருவருளைப் பெறும் பொருட்டுப் புரிந்த தவத்தினுடைய முளையைப் போல் வளர்ச்சியை அடைந்தருளி பொருள் தெரிவதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண

வேதம் என்று உள்ள நான்கு வேதங்களோடு இந்தப் பூவுலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் அடியேங்களுடைய தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இரண்டு பிராயங்களுக்கு மேல் ஒரு பிராயத்தை அடைந்தவுடன்.' பாடல் வருமாறு:

"மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்சேர் சடையார்தம் திருவருட்குச் செய்தவத்தின்
அங்குரம்போல் வளர்ந்தருளி அருமறையோ டுலகுய்ய
எங்கள்பிரான் ஈராண்டின் மேலோராண் டெய்துதலும்."

இந்தப் பாடல் குளகம். மங்கையோடு - மங்கையாகிய பெரிய நாயகியோடு. உடன் ஆகி - உடன் இருந்து. வளர் - வளரும். தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டு மலையின் மேல் திகழும் தோணியில். வீற்றிருந்த - அமர்ந்து கொண்டிருந்த. திங்கள் - பிறைச் சந்திரன். சேர் - சேர்ந்துள்ள. சடையார். தம் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய தோணியப்பர். தம்: அசைநிலை. திருவருட்கு - வழங்கிய திருவருளைப் பெறும் பொருட்டு. ச்: சந்தி. செய் - புரிந்த. தவத்தின் - தவத்தினுடைய. அங்குரம் போல் - முளையைப் போல். வளர்ந்தருளி - வளர்ச்சியை அடைந்தருளி. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறையோடு - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் வேதங்களோடு. உலகு - இந்த மண்ணுலகில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். எங்கள் - அடியேங் களுடைய. இது சேக்கிழார் தம்மையும் பிற திருத்தொண்டர் களையும் சேர்த்துக் கூறியது. பிரான் - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; ஒருமை பன்மை மயக்கம். ஈராண்டின் மேல் - இரண்டு பிராயங்களுக்கு

மேலே. ஆண்டு: ஒருமை பன்மை மயக்கம். ஓராண்டு - ஒரு பிராயத்தை. எய்துதலும் - அடைந்தவுடன்.

பிறகு வரும் 54-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய நாக்கு ஆட்சி புரிந்த பலவாகிய அறுபத்து நான்கு கலைகளும், பிரமதேவனுடைய நாக்கில் அமர்ந்திருக்கும் மகளாகிய சரசுவதியும் நன்மைகள் சிறப்பாக அடைந்து விளங்க செந்தாமரை மலரை ஆட்சி புரிந்து அதன் மேல் வீற்றிருந்த திருமகளும், பக்தர்கள் புரிந்த புண்ணியச் செயல்களும் தோற்றப் பொலிவை அடைய இடபத்தை ஆட்சி புரிந்த துவசத்தை ஏந்தியவராகிய பிரமபுரீசர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிரபுரமாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய சிறிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு மூன்று பிராயத்தில் இந்த உலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் நடந்த நிகழ்ச்சியை இனிமேல் பாடுகிறேன்.' பாடல் வருமாறு:

"நாவாண்ட பலகலையும் நாமகளும் நலம்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தம் சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன்."

இந்தப் பாடல் சேக்கிழார் கூற்று. நா - தம்முடைய நாக்கு. ஆண்ட - ஆட்சி புரிந்து கற்றுக் கொண்ட. பல - பலவாகிய. கலையும் - அறுபத்து நான்கு கலைகளும்; ஒருமை பன்மை மயக்கம். அவை இன்ன என்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. நாமகளும் - பிரம தேவனுடைய நாக்கில் அமர்ந்திருக்கும் பெண்மணியாகிய சரசுவதியும். நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். சிறப்ப - சிறப்பாக அடைந்து விளங்க.

ப்: சந்தி. பூ - செந்தாமரை மலரை. ஆண்ட - ஆட்சி புரிந்து அதன் மேல் வீற்றிருந்த. திருமகளும் - இலக்குமியும். புண்ணியமும் - பக்தர்கள் புரிந்த புண்ணியச் செயல்களும்; ஒருமை பன்மை மயக்கம். பொலிவு - தோற்றப் பொலிவை. எய்த - அடைய. ச்: சந்தி. சே - இடபத்தை. ஆண்ட கொடியவர்தம் - ஆட்சி புரிந்த துவசத்தை ஏந்தியவராகிய பிரமபுரீசர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். தம்: அசைநிலை. சிரபுரத்து - சிரபுரமாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. ச்: சந்தி. சிறுவருக்கு - சிறிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. மூவாண்டில் - மூன்று பிராயம் நடக்கும் காலத்தில். உலகு - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். நிகழ்ந்ததனை - நடந்த நிகழ்ச்சியை. மொழிகின்றேன் - இனிமேல் அடியேன் பாடுகிறேன்.

அடுத்து வரும் 55-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பழங்காலத்தில் பிரமபுரீசருடைய திருவடிகளை மறவாத தன்மையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பரமேசுவரராகிய அந்தப் பிரமபுரீசர் மிகுதியாக உள்ள தவத்தைப் புரிந்த வேதியர்களினுடைய சாதியினர் செய்த வழிபாட்டினால் வழங்கியருளத் தாம் புரிந்து வந்த திருத்தொண்டுகளினுடைய நிலை வழங்கியதால் சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வருபவராகிய அந்த நாயனார் தொடர்ச்சியாக வந்த பிரிவினுடைய உணர்ச்சி ஒரு தடவை தம்முடைய திருவுள்ளத்தைப் பற்றிக் கொண்டு எழுந்தவுடன் அச்சத்தைக் கொண்டாற் போலத் தம்முடைய எண்ணம் வேறு இடத்தில் உள்ளதாகி அழுவாராயினார்.' பாடல் வருமாறு:

"பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டின் அளித்தருளத்
தொண்டின்நிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்
வொருகால்
கொண்டெழலும் வெருக்கொண்டாற் போல்அழுவார்
குறிப்பயலாய்."

பண்டு - பழங்காலத்தில். திருவடி - பிரம புரீசருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். மறவா - மறக்காத. ப்: சந்தி. பான்மையோர் தமை - தன்மையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. பரமர் - பரமேசுவரராகிய அந்தப் பிரமபுரீசர். மண்டு - மிகுதியாக உள்ள. தவ - தவத்தைப் புரிந்த. மறைக் குலத்தோர் - வேதியர்களினுடைய சாதியில் பிறந்தவராகிய சிவபாத இருதயர். மறை: திணை மயக்கம். வழிபாட்டின் - பிரமபுரீசருக்குப் புரிந்த வழிபாட்டின் பயனாக; ஆகு பெயர். அளித்தருள - ஓர் ஆண் குழந்தையை வழங்கியருள. த்: சந்தி. தொண்டின் - தாம் புரிந்து வந்த திருத்தொண்டுகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிலை - நிலைமை. தர - வழங்க. வருவார் - திருவவதாரம் செய்தருளி வருபவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தொடர்ந்த - தொடர்ச்சியாக வந்த. பிரிவு - பிரிவினுடைய. உணர்வு - உணர்ச்சி. ஒரு கால் - ஒரு தடவை. கொண்டு - தம்முடைய திருவுள்ளத்தைப் பற்றிக் கொண்டு. எழலும் - எழுந்தவுடன். வெருக் கொண்டாற் போல் - அச்சத்தைக் கொண்டாற் போல். குறிப்பு - தாம் குறித்த எண்ணம். அயலாய் - வேறு ஓர் இடத்தில் உள்ளதாகி. அழுவார் - அழுவாராயினார்.

பின்பு வரும் 56-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மேன்மையையும் தகுதியையும் பெற்ற இந்தத் தினங்களில் வேறு ஒரு தினத்தில் இருக்கு வேதம், யஜுர்

வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் விதித்த விதிகளின் படி நியாயமான முறையில் அமைந்த மங்கலச் சடங்குகளை நெறிப்படி நிறைவேற்றுவதற்காக பிரமதீர்த்தத்தில் முழுகும் பொருட்டுத் தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் செல்லும் சமயத்தில் தம்முடைய தலைவனாகிய பிரமபுரீசன் வழங்கிய திருவருள் சேர ஒளியை வீசும் அழகிய தம்முடைய திருமாளிகைக்கு முன்னால் இருக்கும் முற்றத்தில் தம்முடைய தந்தையாரைத் தொடர்ந்து சென்று அழுது கொண்டே அவருக்குப் பின் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருளிப் போனார்.' பாடல் வருமாறு:

"மேதகைய இந்நாளில் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்
தாதையார் போம்பொழுது தம்பெருமான் அருள்கூடச்
சோதிமணி மனைமுன்றில் தொடர்ந்தழுது பின்சென்றார்."

மேதகைய - மேன்மையையும் தகுதியையும் பெற்ற. இந்நாளில் - இந்தத் தினங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வேறு - வேறாக உள்ள. ஒரு நாள் - ஒரு தினத்தில். வேத - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். விதி - விதித்த விதிகளின் படி; ஒருமை பன்மை மயக்கம். நீதி - நியாயமான. முறை - முறையில் அமைந்த. ச்: சந்தி. சடங்கு - மங்கலச் சடங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். நெறி - நெறிப்படி. முடிப்பதற்கு - செய்து நிறைவேற்றுவதற்காக. நீராட - பிரமதீர்த்தத்தில் முழுகும் பொருட்டு. த்: சந்தி. தாதையார் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர். போம் - செல்லும். பொழுது - சமயத்தில். தம் - தம்முடைய. பெருமான் - தலைவனாகிய பிரமபுரீசன். அருள் - வழங்கிய திருவருள்.

கூட - சேரவே. ச்: சந்தி. சோதி - ஒளி வெள்ளத்தை வீசும். மணி - அழகிய. மனை - தம்முடைய திருமாளிகைக்கு முன்னால் இருக்கும். முன்றில் - முற்றத்தில். தொடர்ந்து - தம்முடைய தந்தையாரைத் தொடர்ந்து சென்று. அழுது - அழுது கொண்டே. பின் - தம்முடைய தந்தையாருக்குப் பின்னால். சென்றார் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருளிப் போனார்.

பிறகு வரும் 57-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயருக்குப் பின்னால் எழுந்தருளிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பார்த்துப் பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தைப் புரிந்தவராகிய அந்தச் சிவபாத இருதயர் முன்னால் போவதை விட்டு விட்டு சினம் மூள்பவரைப் போல அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தம்மோடு வாராதவாறு தடுத்தவுடன் மின்னலைப் போல ஒளியைச் செய்கின்ற தங்கத்தால் ஆகிய கிண்கிணிகளை அணிந்து கொண்டிருக்கும் தம்முடைய திருவடிகளைத் தரையில் தட்டிக் கொண்டு அந்த ஆண் குழந்தையார் திரும்பி எழுந்தருளிச் செல்லாமையால், ''உன்னுடைய செயல் இதுவானால் என்னோடு வருவாயாக!'' என்று அந்தச் சிவபாத இருதயர் கூறிவிட்டு அந்த இடத்தில் தம்முடைய ஆண் குழந்தையாராகிய அந்த நாயனாரை அழைத்துக் கொண்டு அவரோடு பிரமதீர்த்தத்திற்கு நீராடும் பொருட்டுச் சென்றார்.' பாடல் வருமாறு:

"பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனைஒழிந்து முனிவார்போல் விலக்குதலும்
மின்செய்பொலங் கிண்கிணிக்கால் கொட்டிஅவர் மீளாமை
'உன்செய்கை இதுவாகில் போ'தென்றங் குடன்சென்றார்."

பின் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயருக்குப் பின்னால். சென்ற - எழுந்தருளிய. பிள்ளையார் தமை - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. நோக்கி - பார்த்து. ப்: சந்தி. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தவத்தோர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாராகிய ஆண் குழந்தையாரைப் பெற்றெடுப்பதற்கு உரிய தவத்தைப் புரிந்த அந்தச் சிவபாத இருதயர். முன் - முன்னால். செல்கை தனை - போவதை. தனை: இடைக்குறை. தன்: அசைநிலை. ஒழிந்து - விட்டு விட்டு. முனிவார் போல் - தம்முடைய புதல்வரைச் சினந்து கொள்பவரைப் போல். விலக்குதலும் - தம்முடைய புதல்வரைத் தம்மோடு வாராதவாறு தடுத்தவுடன். மின் - மின்னலைப் போல்; உவம ஆகு பெயர். செய் - ஒளியை உண்டாக்கும். பொலங் கிண்கிணி - தங்கத்தாற் செய்யப் பெற்ற கிண்கிணிகளை அணிந்திருக்கும். கிண்கிணி - கிண்கிணி என்று ஒலிக்கும் அணிகலன். க்: சந்தி. கால் - தம்முடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். கொட்டி - தரையில் 'தப்புத்திப்' பென்று தட்டிக் கொண்டு. அவர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாராகிய ஆண் குழந்தையார். மீளாமை - திரும்பி எழுந்தருளிச் செல்லாத பான்மையால். உன் - உன்னுடைய. செய்கை - செயல். இதுவாகில் - இது ஆனால். போது - என்னுடன் வருவாயாக. என்று - என அந்தச் சிவபாத இருதயர் கூறிவிட்டு. அங்கு - அந்த இடத்தில். உடன் - அந்த நாயனாரை அழைத்துக் கொண்டு அவரோடு. சென்றார் - பிரமதீர்த்தத்திற்கு நீராடும் பொருட்டுப் போனார்.

அடுத்து வரும் 58-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'முப்பத்திரண்டு வகையாகிய அறங்களைப் புரிவதில் தலை சிறந்து நின்றவராகிய அந்தச் சிவபாத இருதயர் இந்தக்

கலியுகத்தின் இறுதிக் காலத்தில் ஒப்பற்ற விதத்தில் பெருகி எழுந்து சமுத்திரத்தினுடைய நீர் வெள்ளங்கள் பலவற்றை விரிவாக உண்டாக்கும் கருப்பத்தைப் போல இடைவிடாத பெருமையைப் பெற்று விளங்கும் தீர்த்தங்கள் யாவற்றிற்கும் பிறப்பதற்கு உரிய இடமாகிய இடபமாகிய துவசத்தை உயர்த்திப் பிடித்தவராகிய தோணியப்பர் வீற்றிருக்கும் அழகிய தோணியாகிய பற்றுக் கோட்டை விடாத மேம்பாட்டைப் பெற்று விளங்குவதாகும் தடாகமாகிய அந்தப் பிரமதீர்த்தத்தினுடைய துறையை அவர் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"கடையுகத்தில் தனிவெள்ளம் பலவிரிக்கும் கருப்பம்போல்
இடையறாப் பெருந்தீர்த்தம் எவற்றினுக்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாம்
தடமதனில் துறையடைந்தார் தருமத்தின் தலைநின்றார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள் கோள் அமைந்துள்ளது. தருமத்தின் - முப்பத்திரண்டு வகையாகிய அறங்களைப் புரிவதில்; ஒருமை. பன்மை மயக்கம். தலைநின்றார் - தலை சிறந்து நின்றவராகிய சிவபாத இருதயர். கடையுகத்தில் - இப்போது நடை பெற்று வரும் இந்தக் கலியுகத்தின் இறுதிக் காலத்தில். தனி - ஒப்பற்ற விதத்தில் பெருகி எழுந்த. வெள்ளம் - சமுத்திரத்தினுடைய நீர் வெள்ளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பல - பலவற்றை. விரிக்கும் - விரிவாக உண்டாக்கும். கருப்பம் போல் - கருப்பத்தைப் போல். இடையறா - இடைவிடாத. ப்: சந்தி. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தீர்த்தம் - தீர்த்தங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எவற்றினுக்கும் - யாவற்றிற்கும். பிறப்பிடமாய் - பிறப்பதற்கு உரிய இடமாகி. விடை - இடபமாகிய. உயர்த்தார் - துவசத்தை உயர்த்திப் பிடித்தவராகிய

தோணியப்பர். திருத்தோணி - வீற்றிருக்கும் அழகிய தோணியாகிய. இந்தத் தோணி சீகாழியில் பிரமபுரீசருடைய திருக்கோயிலில் உள்ள ஒரு கட்டுமலையின் மேல் இருப்பது. ப்: சந்தி. பற்று - புற்றுக் கோட்டை. விடா - விட்டு விடாத. மேன்மையதாம் - மேம்பாட்டைப் பெற்றதாக விளங்கும். தடம் - தடாகமாகிய. அதனில் - அந்தப் பிரம தீர்த்தத்தினுடைய; உருபு மயக்கம். துறை - துறையை. அடைந்தார் - அந்தச் சிவபாத இருதயர் அடைந்தார்.

பிறகு வரும் 59-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'இந்தப் பூவுலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தவராகிய சிவபாத இருதயர் தம்முடைய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பிரம தீர்த்தத்தினுடைய கரையில் அமருமாறு செய்து விட்டுத் தாம் தம்முடைய ஆண் குழந்தையாரைப் பிரிவதற்கு அச்சத்தை அடைந்து தெளிவாக உள்ள அந்தப் பிரம தீர்த்தத்தில் நிரம்பியுள்ள புனலில் இறங்க முடியாதவராகித் தம்முடைய தர்மபத்தினியாராகிய பெரிய நாயகியாரோடும் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் விளங்கும் அழகிய தோணியில் வீற்றிருந்த வள்ளலாராகிய தோணியப்பரை அவருடைய சந்நிதியில் அவரைப் பணிந்து விட்டுப் பனிவகைப் போன்ற நீர் நிரம்பிய வாவியாகிய பிரமதீர்த்தத்துக்கு உள்ளே இறங்கி நீரில் புகுந்தார்.' பாடல் வருமாறு:

"பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர்ப் புகமாட்டார் தேவியொடும் திருத்தோணி
வள்ளலார் இருந்தாரை எதிர்வணங்கி மணிவாவி
உள்ளிழிந்து புனல்புக்கார் உலகுய்ய மகப்பெற்றார்."

இந்தப் பாடலிலும் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. உலகு - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். மக - ஓர் ஆண் குழந்தையை. ப்: சந்தி. பெற்றார் - ஈன்றெடுத்தவராகிய சிவபாத இருதயர். பிள்ளையார் தமை - தம்முடைய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அறைநிலை. க்: சந்தி. கரையில் - பிரமதீர்த்தத்தினுடைய கரையில். வைத்து - அமருமாறு செய்துவிட்டு. த்: சந்தி. தாம் என்றது சிவபாத இருதயரை. பிரிவு - தம்முடைய ஆண் குழந்தையாரைப் பிரிவதற்கு. அஞ்சி - அச்சத்தைப் அடைந்து. தெள்ளு - தெளிவாக உள்ள. நீர் - அந்தப் பிரமதீர்த்தத்தில் நிரம்பியுள்ள புனலில். ப்: சந்தி. புக - இறங்க. மாட்டார் - முடியாதவராகி; முன்றெச்சம். தேவியொடும் - தம்முடைய தர்மபத்தினியாராகிய பெரிய நாயகியாரோடும். திரு - அழகிய. த் : சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் விளங்கும் தோணியில். வள்ளலார் இருந்தாரை - வீற்றிருந்தவரும் வள்ளலாரும் ஆகிய தோணியப்பரை. எதிர் - அந்த அப்பருடைய சந்நிதியில். வணங்கி - அந்த அப்பரைப் பணிந்து விட்டு. மணி - பளிங்கைப் போன்ற நீர் நிரம்பிய; உவம ஆகுபெயர். வாவிஉள் - வாவிக்குள். இழிந்து - பிரமதீர்த்தத்துக்குள்ளே இறங்கி. புனல் - நீரில். புக்கார் - புகுந்தார்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தமையால் உலகு உய்தல்: ''வையமெலாம் உய்யவரு மறைச் சிறுவர்.'', ''ஞாலம் உய்ந்திட ஞானம் உண்டவர்.'', ''பார் உய்ய வந்தவர்.'', ''வையகம் உய்ய வந்த வள்ளலார்.'', ''உலகெலாம் உய்யக் கொண்ட திருஞான

சம்பந்தர்.'', ''உலகுய்ய ஞானம் உண்டார்.'', ''ஞாலம் உய்ய வந்த பிள்ளையார்.'', ''தாரணி உய்ய ஞான சம்பந்தன் வந்தான்.'', ''மாயிரு ஞாலம் உய்ய வழியினை அருளிச் செய்வார்.'' என்று சேக்கிழார் பாடியருளிய வற்றைக் காண்க.

பின்பு வரும் 60-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிவபாத இருதயர் சீகாழியில் உள்ள பிரமதீர்த்தத்தில் முழுகி விட்டுத் தருப்பணத்தைப் புரிந்து நியமங்கள் பலவற்றைப் புரிவாராகித் தாம் சீராட்டும் தம்முடைய அழகிய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மைப் பார்ப்பதற்கு முன்னால் அந்த நியமங்களைப் புரிந்ததற்குப் பிறகு குறையாத விருப்பத்தோடு அகமருட மந்திரத்தை ஓதிப் படியுமாறு பிரமதீர்த்தத்தில் நிரம்பியுள்ள புனலில் வெளியில் வாராமல் பெருமையைப் பெற்று விளங்கும் பாது காப்பைப் பெற்றவராகி முழுகினார்.' பாடல் வருமாறு:

''நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராடும் திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பின்
ஆராத விருப்பினால் அகமருடம் படியநீர்
பேராது மூழ்கினார் பெருங்காவல் பெற்றாராய்.''

நீராடி - அந்தச் சிவபாத இருதயர் சீகாழி ஆலயத்துக்கு முன்பு உள்ள பிரமதீர்த்தத்தில் முழுகிவிட்டு. த்: சந்தி. தருப்பித்து - தம்முடைய பிதிருக்கள் முதலியவர் களை எண்ணித் தருப்பணத்தைப் புரிந்து. நியமங்கள் பல - பல வரையறையாகிய செயல்களை. அவையாவன: சந்தியா வந்தனம் புரிதல், ஆடையை அணிந்து கொள்ளுதல் முதலியவை. செய்வார் - புரிவாராகி; முற்றெச்சம். சீராடும் - தாம் சீராட்டும். திரு - அழகிய. மகனார் - தம்முடைய

புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். காண்பதன் முன் - தம்மைப் பார்ப்பதற்கு முன்னால். செய்ததற்பின் - அந்த நியமங்களைப் புரிந்த தற்குப் பிறகு. ஆராத - குறையாத. 'திருப்தி அடையாத' எனலும் ஆம். விருப்பினால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். அகமருடம் - அகமருட மந்திரத்தை ஓதி. படியநீர் - நீரில் படியுமாறு. பேராது - வெளியில் வாராமல். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். காவல் - பாதுகாப்பை. பெற்றாராய் - பெற்றவராகி. மூழ்கினார் - பிரம தீர்த்தத்தில் நிரம்பியுள்ள புனலில் முழுகினார்.

பிறகு உள்ள 61-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய அந்தணராகிய சிவபாத இருதயர் பிரமதீர்த்தத்தில் முழுகியவுடன் அவரைத் தாம் பாராமல் கண நேரமும் சகியார் என்னும் நிலைமை ஹேதுவாக பரமேசுவரராகிய பிரமபுரீசருடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை முறையாக விரும்பி முன்பு இருந்த உணர்ச்சி மூண்டு எழ நிறைந்த நீரைப் பெற்ற வாவியாகிய அந்தப் பிரமதீர்த்தத்தினுடைய கரையில் நின்று கொண்டிருந்தருளும் ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அழுதருள ஆரம்பித்தார்.' பாடல் வருமாறு:

"மறைமுனிவர் மூழ்குதலும் மற்றவர்தம் மைக்காணா
திறைதரியார் எனும்நிலைமை தலைக்கீடா ஈசர்கழல்
முறைபுரிந்த முன்உணர்வு மூளஅழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையில் நின்றருளும் பிள்ளையார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள் கோள் அமைந்துள்ளது. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். முனிவர் - அந்தணராகிய சிவபாத இருதயர். மூழ்குதலும் - பிரமதீர்த்தத்தில் முழுகியவுடன். மற்று: அசைநிலை. அவர் தம்மை - அந்தச் சிவபாத இருதயரை. தம்: அசைநிலை. க்: சந்தி. காணாது - பார்க்காமல். இறை - கண நேரமும். தரியார் - சகியார். எனும் - என்னும்; இடைக்குறை. நிலைமை - நிலையின் பான்மை. தலைக்கீடா - ஒரு வியாஜமாக. ஈசர் - பரமேசுவரராகிய பிரமபுரீசருடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். முறை - முறையாக. புரிந்த - விரும்பிய. முன் - முன்பு இருந்த. உணர்வு - உணர்ச்சி. மூள - மூண்டு எழ. நிறை - நிறைந்த. புனல் - நீரைப் பெற்ற. வாவி - வாவியாகிய பிரமதீர்த்தத்தினுடைய. க்: சந்தி. கரையில் நின்றருளும் - கரையில் நின்று கொண்டிருந்தருளும். பிள்ளையார் - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அழத் தொடங்கினார் - அழுதருள ஆரம்பித்தார்.

பிறகு வரும் 62-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'புண்ணியச் செயல்களைப் புரிந்த கன்றுக்குட்டியைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய விழிகளாகிய செந்தாமரை மலர்களில் நீர் தளும்பி வழியத் தம்முடைய திருக்கரங்களாகிய செந்தாமரை மலர்களினால் தம்முடைய கண்களைப் பிசைந்து கொண்டு சிவப்பான நிறத்தைப் பெற்ற மலரைக் கொண்ட சிவப்பாக விளங்கும் கோவைப் பழங்களைப்

போன்ற அதரங்களைப் பெற்ற தம்முடைய திருவாயில் உள்ள மாணிக்கங்களைப் போலச் சிவந்த நிறத்தைப் பெற்ற உதடுகள் பக்கத்தில் துடிக்க கணக்கு இல்லாத வேதங்களினுடைய இனிய கானம் பெருகி எழ எந்த வகையாக உள்ள உயிர்களும் குதூகலத்தை அடையுமாறு பொருமிக் கொண்டு அழுதருளினார்.' பாடல் வருமாறு:

"கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிரும் குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. புண்ணிய - புண்ணியச் செயல்களைப் புரிந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கன்று - கன்றுக் குட்டியை. அனையவர் தாம் - போன்றவராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார். தாம்: அசைநிலை. கண் - தம்முடைய விழிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். மலர்கள் - செந்தாமரை மலர்களில். நீர் - நீர்த்துளிகள்; ஒருமை பன்மை மயக்கம். நீர்த்துளிகள் - கண்ணீர்த்துளிகள். ததும்ப - துளும்பி வழிய. க்: சந்தி. கை - தம்முடைய திருக்கரங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ம்: சந்தி. மலர்களால் - செந்தாமரை மலர்களினால். பிசைந்து - தம்முடைய கண்களைப் பிசைந்து கொண்டு. வண்ண - சிவப்பான நிறத்தைப் பெற்ற. மலர் - மாதுளம் பூவைப் போலவும்; உவம ஆகுபெயர். ச்: சந்தி. செம் - சிவப்பாக விளங்கும். கனி - கோவைப் பழங்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம்: உவம ஆகு பெயர். வாய் - தம்முடைய திருவாயில் உள்ள. மணி - மாணிக்கங்களைப் போலச் சிவந்த நிறத்தைப் பெற்ற. அதரம் - உதடுகளில்; ஒருமை பன்மை மயக்கம். புடை - பக்கத்தில். துடிப்ப - துடித்துக்

கொண்டிருக்க. எண் - கணக்கு. இல் - இல்லாத; கடைக்குறை. மறை - வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இக்காலத்தில் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களே இருந்தாலும் முன் காலத்தில் கணக்கு இல்லாத வேதங்கள் இருந்தன; ''அனந்த வை வேதா'' என்று வருவதைக் காண்க. ஒலி - இனிய கானம். பெருக - பெருகி எழ. எவ்வுயிரும் - எந்த வகையாக உள்ள உயிர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த உயிர்களாவன: மக்கள், பலவகையான மிருகங்கள், பலவகையாகிய பறவைகள், ஊர்வன, புழு, பூச்சி, நீர் வாழ் பிராணிகள் முதலியவை. குதுகலிப்ப - குதூகலத்தை அடைய; ஆனந்தத்தைப் பெற. ப்: சந்தி. பொருமி - விக்கி விக்கி. அழுதருளினார் - அப்போது அழுதருளினார்.

அடுத்து உள்ள 63-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமேனியின் மேல் தம்முடைய விழிகளிலிருந்து வழியும் நீர்த்துளிகள் குளிர்ச்சியைப் பெற்று வழிய வேறு எந்த இடத்தையும் பார்த்து அழுபவராகி தம்முடைய முன் பிறப்பில் இருந்த சார்பைத் தெரிந்து கொண்டோ, அல்லது தம்மைச் சார்ந்திருக்கும் குழந்தைத் தன்மையோ சிவந்த திருமேனி முழுவதும் வெண்மையான விபூதியைப் பூசிக் கொண்டருளுபவராகிய தோணியப்பர் எழுந்தருளி யிருக்கும் அழகிய தோணியின் மேல் உள்ள கோபுரத்தை நோக்கி, ''அம்மையே, அப்பனே.'' என்று பல முறைகள் அந்தத் தோணியப்பரை அழைத்தருளி அழுதருள.' பாடல் வருமாற:

"மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ, சாரும்பிள்ளை மைதானோ?
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்
'தம்மே,அப் பா!என்றென் றழைத்தருளி அழுதருள."

இந்தப் பாடல் குளகம். மெய் - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமேனியின். ம்: சந்தி. மேல் - மீது. கண் - தம்முடைய விழிகளிலிருந்து வழியும்; ஒருமை பன்மை மயக்கம். துளி - நீர்த்துளிகள்; ஒருமை பன்மை மயக்கம். பனிப்ப - குளிர்ச்சியைப் பெற்று வழிய. வேறு எங்கும் - வேறு ஏதோ இடத்தை. உம்மை: வேண்டா வழி வந்தது. பார்த்து - நோக்கி. அழுவார் - அழுபவராகிய அந்த நாயனார். தம் - தம்முடைய. மேலை - முன்பிறவியில் இருந்த. ச்: சந்தி. சார்பு - தொடர்பை. உணர்ந்தோ - தெரிந்து கொண்டோ. இது குறிப்பாக திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முன் பிறப்பில் முருகக் கடவுளாக இருந்ததைப் புலப்படுத்துகிறது. அருணகிரியார் முதலிய சான்றோர்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முருகக் கடவுளுடைய திருவவதாரம் என்னும் கொள்கையை உடையவர்கள். சாரும் - தம்மைச் சார்ந்திருக்கும். பிள்ளைமைதானோ - குழந்தைத் தன்மையோ. செம்மேனி - சிவந்த திருமேனி முழுவதும். வெண்ணீற்றார் - வெண்மையான விபூதியைப் பூசிக் கொண்டருளுபவராகிய. திருத்தோணி - தோணியப்பர் எழுந்தருளியிருக்கும் அழகிய தோணியின் மேல் உள்ள. ச்: சந்தி. சிகரம் - கோபுரத்தை. பார்த்து - நோக்கி. "அம்மே! அப்பா" - "அம்மையே! அப்பனே!". என்றென்றழைத் தருளி - என்று என்று பலமுறைகள் அந்தத் தோணியப்பரை அழைத்தருளி. அழுதருள - அழுதருள.

அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முற்பிறப்பில் முருகக் கடவுளாக இருந்ததைக் குறிக்கும் திருப்புகழ்ப் பகுதிகள் வருமாறு:

"பறித்தலைத் திருட்டமணக் குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் - திருநீறு
பரப்பியதத் திருப்பதிபுக் கனற்புனலிற் கனத்த சொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் - கவிராசா"

"புகலிவனப்பே றப்புகல் மதுரைமன் வெப்பாறத்திகழ்
பொடி கோடு புற்பாய் சுற்றிகள் - கழுவேறப்
பொருத சமர்த்தா."

"திகுதிகென மண்டவிட்ட தீயொரு செழியனுடல்
சென்றுபற்றி - ஆருகர்
திகையின் மண் வந்துவிட்ட போதினும் -
அமையாது
சிறியகர பங்கயத்து நீறொரு தினையளவு சென்றுபட்ட -
போதினில்
தெளிய இனி வென்றிவிட்ட மோழைகள் -
கழுவேற."

"அன்றென் றொன்றும் கொண்டன் பின்றகங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கம் சிந்தும் பங்கம் துஞ்சும்
படியொரு தொகுதியில் உரைநதி எதிர்பட
அன்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை எதிர்வர விடுவி புகல்தரு -
திறலோனே."

"பொறியுடைச் செழியன் வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலச் சமணரத் - தனை பேரும்
பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் புலவோனே."

"வெடித்தமணர் கழுவேற ஒருத்திகண வனும்மீள
விளைத்த தொரு தமிழ்பாடு - புலவோனே."

"புழு கொழுகு காழி கவுணியரில் ஞான
புநிதனென ஏடு - தமிழாலே

"புனலிலெதி ரேற சமணர்கழு வேற
பொருத கவி வீர - குருநாதா."

"மதுரையின் மீதால வாயினில்
எதிரம ணாரோ ரெணாயிரர்

"மறிகழு மீதேற நீறுபரந்துலாவச்
செழியனும் ஆளாக வாதுசெய்
கவிமத சீகாழி மாமுனி
சிவசிவ மாதேவ காவென - வந்துபாடும்
திருவுடையாய்."

"அமுதுலகை வாழ்வித்த கவுணிய குலாதித்த
அரியகதிர் காமத்தில் உரியாபிராமனே."

"பஞ்சவன் நீடுகூனும் ஒன்றிடு தாபமோடு
பஞ்சற வாதுகூறு - சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேறஓது பண்டித."

"அரைக்காடை சுற்றார் தமிழ்க் கூடலிற் போய்
அனற்கே புனற் கேவ ரைந்த ஏடிட்
டறத்தா யெனப் பேர் படைத்தாய்."

"மாள அன்ற மண் நீசர் கள் - கழுவேற
வாதில் வென்ற சிகாமணி."

"மதுரை நாட்டினி லேவாழ் வாகிய
அருகர் வாக்கினி லேசார் வாகிய
வழுதி மேற்றிரு நீறே பூசி நிமிர்ந்து கூனும்

மருவு மாற்றெதிர் வீறே டேறிட
அழகிய போற்றிய மாறா லாகிய
மகிமையாற் சமண் வேரோ டேகெட
வென்றகோவே."

"கருதுசட் சமயிகட் கமைவுறங்கி றியுடைப்
பறிதலைச் சமணரைக்குல முதற் பொடிபடக்
கலகமிட் டுடலுயிர்க் கழுவினுச் சினியில் வைத்
திடுவானே."

"திருமதுரை மேவும் அமணர் குலமான
திருடர் கழுவேற - வருவோனே."
... வேதம்
படியாப் பாதகர் பாயன் றியுடாப் பேதைகள் கேசம்
பறிகோப் பாளிகள் யாரும் கழுவேறச்
சிவமாய்த் தேனமு தூறும் திருவாக்காலொளி சேர்வெண்
திருநீற் றாலம ராடும் - சிறியோனே."

"அளகை வணிகோர் குலத்தில் வனிதை உயிர் மீளழைப்ப
அருள் பரவு பாடல் சொற்ற - குமரேசா."

"கூடலான் முது கூனன் றோட வாதுயர் வேதம்
கூறு நாவல் மேவும் - தமிழ் வீரா."

"அமணர் கழுவில்வி ளையாட வாதுபடை
கருது குமரகுரு நாத."

"புத்தர் அமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திரு நீறிடவே
புக்க அனல்வய மிகஏ டுயவே - உமையாள்தன்
புத்ரன் எனஇசை பகர்நூல் மறைநூல்
கற்ற தவமுனி பிரமா புரம்வாழ்
பொற்ப கவுணியர் பெருமான் உருவாய் -
வருவோனே."

பிறகு வரும் 64-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அழுதருளிய அந்த நிலையில் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில் அமர்ந்திருந்தவராகிய தோணியப்பர் வழங்கிய திருவருட் பார்வையினால் முன்னால் அவரிடம் இருந்த நிலைமை யின் படி திருத்தொண்டுகளை எண்ணி அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குத் தம்முடைய திருவருளை வழங்கும் பொருட்டு தங்கம் தோன்றும் இமய மலையரசனுடைய புதல்வியும், பூங்கொடியும் போன்றவளாகிய பார்தவி தேவியும் சிவபெருமானாரும் போர் புரியும் இடப வாகனத்தின் மேல் எழுந்தருளி வந்து தம்முடைய தலையின் மேல் இளைய பிறைச் சந்திரன் விளங்கச் செழுமையைப் பெற்ற பொய்கையாகிய பிரமதீர்த்தத்தின் பக்கத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள் நோக்கால்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க்
கருள்புரிவான்
பொன்மலைவல் லியும்தாமும் பொருவிடைமேல்
எழுந்தருளிச்
சென்னிஇளம் பிறைதிகழச் செழும்பொய்கை
மருங்கணைந்தார்."

அந்நிலையில் - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அழுதருளிய அந்த நிலையில். திரு - அழகிய. த்: சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் தோணியில். வீற்றிருந்தார் - அமர்ந்திருந்தவராகிய தோணியப்பர். அருள் நோக்கால் -

வழங்கிய திருவருட் பார்வையினால். முன் - முன்னால் அவரிடம் இருந்த. நிலைமை - நிலைமையின் படி. த்: சந்தி. திருத்தொண்டு - திருத்தொண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். முன்னி - எண்ணி. அவர்க்கு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. அருள் புரிவான் - தம்முடைய திருவருளை வழங்கும் பொருட்டு. பொன் - தங்கம் தோன்றும். மலை - இமயமலை அரசனுடைய புதல்வியும்; திணை மயக்கம்; ஆகு பெயர். வல்லியும் - பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியும்; உவம ஆகு பெயர். 'தாமும்' என்றது சிவபெருமானாரை. பொரு - போர் புரியும். விடைமேல் - இடப வாகனத்தின் மேல். எழுந்தருளி - எழுந்தருளி வந்து. ச்: சந்தி. சென்னி - தம்முடைய தலையின் மேல். இளம்பிறை - இளைய பிறைச்சந்திரன். திகழ - விளங்க. ச்: சந்தி. செழும் - செழுமையைப் பெற்ற. செழுமை - நீர் நிரம்பியிருக்கும் தன்மை. பொய்கை - பொய்கையாகிய பிரமதீர்த்தத்தி னுடைய. மருங்கு - பக்கத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

அடுத்து உள்ள 65-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அழகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களாகிய சாத்திரத்தை முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய மறையவராகிய சிவபாத இருதயருக்கும் அவருடைய தர்ம பத்தினியாராகிய பகவதியாருக்கும் முன்பு தாம் வழங்கி அருளிய பெருகி எழும் வரத்தை எண்ணியோ, அல்லது தம்முடைய பெருமையைப் பெற்று விளங்கும் வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை விரும்பி வணங்கும் ஒருமைப் பாட்டைப் பெற்ற வழியில் உண்டாகும் சிவஞானத்தை வழங்கியருளுவதற்காகத் தம்மோடு வீற்றிருந்த பொருள் அறிவதற்கு அருமையாக

உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்பவற்றை ஆட்சி புரிதலைப் பெற்றவராகிய பெரிய நாயகியைத் தன்னுடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தோடு குழைத்த பாலை வழங்கியருளுமாறு தோணியப்பர் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.' பாடல் வருமாறு:

"திருமறைநூல் வேதியர்க்கும்
தேவியர்க்கும் தாம்கொடுத்த
பெருகுவரம் நினைந்தோதான்
தம்பெருமைக் கழல்பேணும்
ஒருநெறியில் வருஞானம்
கொடுப்பதனுக் குடனிருந்த
அருமறையா ளுடையவளை
அளித்தருள அருள்செய்வார்."

திரு - அழகிய. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங் களாகிய; ஒருமை பன்மை மயக்கம். நூல் - சாத்திரத்தை முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய. வேதியர்க்கும் - மறையவராகிய சிவபாத இருதயருக்கும். தேவியர்க்கும் - அவருடைய தர்மபத்தினியாராகிய பகவதியாருக்கும். 'தாம்' என்றது தோணியப்பரை. கொடுத்த - முன் ஒரு காலத்தில் தாம் வழங்கியருளிய. பெருகு - பெருகி எழும். வரம் - வரத்தினை. நினைந்தோ - எண்ணியோ. தான்: அசைநிலை. தம். தம்முடைய. பெருமை - பெருமையைப் பெற்று விளங்கும். க்: சந்தி. கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். பேணும் - விரும்பி வணங்கும். ஒரு நெறியில் - ஒருமைப்பாட்டைப் பெற்ற வழியில்; "ஒரு

நெறிய மனம் வைத்துணர் ஞான சமபந்தன்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மைக் குறிப்பிடுவதைக் காண்க. வரு - உண்டாகி வரும். ஞானம் - சிவ ஞானத்தை. கொடுப்பதனுக்கு - வழங்கியருளு வதற்காக. உடன் இருந்த - தம்மோடு வீற்றிருந்த. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஆள் உடையவளை - ஆட்சி புரிதலைப் பெற்றவளாகிய பெரிய நாயகியை. ஆள்: முதல் நிலைத் தொழிற் பெயர். அளித்தருள - தன்னுடைய கொங்கை களிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்த பாலை வழங்கியருளுமாறு. அருள் செய்வார் - தோணியப்பர் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.

பிறகு வரும் 66-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அழுதருளுகின்ற ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பார்த்து திருவருளும் கருணையும் எழுந்து தோன்றுகின்ற திருவுள்ளத்தைப் பெற்ற இறையவராகிய தோணியப்பர் எந்த வகையான உலகங்களில் வாழ்பவர்களும் வணங்குகின்ற இமய மலையரசனுடைய புதல்வியும், பூங்கொடியைப் போன்றவளுமாகிய பெரிய நாயகியை நோக்கியருளி, ''உன்னுடைய இரண்டு கொங்கைகளும் சொரிகின்ற பாலாகிய உணவை ஒரு பொற்கிண்ணத்தில் வைத்து இவனுக்கு உண்ணுமாறு வழங்குவாயாக'' என்று அந்தத் தோணியப்பர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

"அழுகின்ற பிள்ளையார்
தமைநோக்கி அருட்கருணை
எழுகின்ற திருவுள்ளத்
திறையவர்தாம் எவ்வுலகும்
தொழுகின்ற மலைக்கொடியைப்
பார்த்தருளித், 'துணைமுலைகள்
பொழிகின்ற பால்அடிசில்
பொன்வள்ளத் தூட்'டென்ன."

இந்தப் பாடல் குளகம். அழுகின்ற - தம்முடைய கண்களைத் தம்முடைய கைகளால் பிசைந்து கொண்டு அழுதருளுகின்ற. பிள்ளையார் தமை - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நயானாரை. தமை: இடைக்குறை. தம்: அசை நிலை. நோக்கி - பார்த்து. அருள் - திருவருளும். கருணை - கருணையும். எழுகின்ற - எழுந்து தோன்றுகின்ற. திருவுள்ளத்து - திருவுள்ளத்தைப் பெற்ற. இறையவர் தாம் - இறைவராகிய தோணியப்பர். தாம்: அசைநிலை. இறையவர் - எங்கும் நிறைந்திருப்பவர். எவ்வுலகும் - எந்த வகையான உலகங்களில் வாழ்பவர் களும்; இட ஆகுபெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். தொழுகின்ற - வணங்குகின்ற. மலை - இமயமலை அரசனுடைய புதல்வியும்; திணை மயக்கம்; ஆகுபெயர். க்: சந்தி. கொடியை - பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பெரிய நாயகியை; உவம ஆகுபெயர். ப்: சந்தி. பார்த்தருளி - நோக்கியருளி. த்: சந்தி. துணை முலைகள் - உன்னுடைய இரண்டு கொங்கைகளும். பொழிகின்ற - சொரிகின்ற. பால் - பாலாகிய. அடிசில் - இனிய சுவையைப் பெற்ற உணவை. பொன் வள்ளத்து - ஒரு பொற்கிண்ணத்தில் வைத்து. ஊட்டு - இவனுக்கு உண்ணுமாறு வழங்குவா யாக. என்ன - என்று அந்தத் தோணியப்பர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

அடுத்து வரும் 67-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வதம் என்னும் நான்கு வேதங்களையும், ஏழு உலகங்களில் வாழும் உயிர்களையும் பெற்றருளி அந்த எல்லாவற்றிற்கும் காரண பூதையாகி வளப்பம் பெருகி எழும் கருணையே தன்னுடைய அழகிய திருவுருவமாக உள்ள சீர்த்தியைப் பெற்ற தெய்வப் பெண்ணாகிய பெரிய நாயகி சிவபெருமானாராகிய தோணியப்பர் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தவுடன் அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம் எழுந்தருளிப் போய் அவரை அடைந்து கச்சோடு பொருந்திய தம்முடைய அழகிய கொங்கைகளிலிருந்து பாலை ஒரு பொற்கிண்ணத்தில் கறந்தருளி.' பாடல் வருமாறு:

"ஆரணமும் உலகேழும் ஈன்றருளி அனைத்தினுக்கும்
காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரணங்கு சிவபெருமான் அருளுதலும் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி."

இந்தப் பாடலும் குளகம். ஆரணமும் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். உலகு ஏழும் - ஏழு உலகங்களில் வாழும் உயிர்களையும்; இடஆகு பெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். ஈன்றருளி - பெற்றருளி. அனைத்தினுக்கும் - அவை எல்லாவற்றிற்கும். காரணமாய் - காரண பூதையாகி. வளம் - வளப்பம். பெருகு - பெருகி எழும். கருணை - கருணையே. திருவடிவு ஆன - தன்னுடைய அழகிய திருவுருவமாக உள்ள. சீர் - சீர்த்தியைப் பெற்ற. அணங்கு - தெய்வப் பெண்ணாகிய பெரிய நாயகி. சிவபெருமான் - சிவபெருமானாகிய தோணியப்பன். அருளுதலும் -

அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தவுடன். சென்று - அந்த ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம் எழுந்தருளிப் போய். அணைந்து - அந்த நாயனாரை அடைந்து. வார் - கச்சு. இணங்கு - பொருந்திய. திரு - அழகிய. முலை - தம்முடைய கொங்கைகளிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பால் - இனிய சுவையைப் பெற்ற பாலை. வள்ளத்து - ஒரு பொற்கிண்ணத்தில். க்: சந்தி. கறந்தருளி - வைத்துக் கறந்தருளி.

பின்பு வரும் 68-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தப் பெரிய நாயகியார் நினைப்பதற்கு அருமையாக உள்ள சிவஞானமாகிய இனிய சுவையைப் பெற்ற அமுதத்தைப் போன்ற பாலைத் தம்முடைய கொங்கைகளிலிருந்து ஒரு பொற்கிண்ணத்தில் கறந்து அந்தப் பாலோடு சிவஞானத்தைக்குழைத்தருளி, 'இந்தப் பாலாகிய இனிய சுவையைப் பெற்ற உணவை நீ உண்ணுவாயாக!' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து உண்ணுமாறு செய்தருளி உமையாகிய பெரிய நாயகி தம்மை எதிரில் பார்க்கும் அந்த நாயனாருடைய திருக்கண்களில் வழியும் நீரைத் தன்னுடைய திருக்கரத்தால் துடைத்தருளி அந்த நாயனாருடைய வலக்கையில் ஒரு பொற்கிண்ணத்தை வழங்கியருளி தலைவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் என்னும் ஆண் குழந்தையை அந்த இடத்தில் அழுதருளிய அழுகையை மாற்றிவிட்டு அழகிய கண்களைப் பெற்றவராகிய தோணியப்பர் அந்த நாயனாருக்குத் தம்முடைய திருவருளை வழங்கினார்.' பாடல் வருமாறு:

''எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
'உண்ணடிசில்' எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணம்அளித்
தண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனார் அருள்புரிந்தார்.''

எண்ணரிய - நினைப்பதற்கு அருமையாக உள்ள. எண்: முதல் நிலைத்தொழிற் பெயர். சிவஞானத்து - சிவஞானமாகிய. இன் - இனிய சுவையைப் பெற்ற. அமுதம் - அமுதத்தைப் போன்ற பாலைத் தம்முடைய கொங்கைகளிலிருந்து ஒரு பொற்கிண்ணத்தில் கறந்து அந்தப் பாலோடு சிவஞானத்தை. அமுதம்: உவம ஆகு பெயர். குழைத்தருளி - அந்தப் பெரிய நாயகியார் குழைத்தருளி. அடிசில் - இந்தப் பாலாகிய உணவை. உண் - நீ உண்பாயாக. என - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. ஊட்ட - அந்த நாயனாரை உண்ணுமாறு செய்தருள. உமையம்மை - உமையம்மையாகிய பெரிய நாயகி. எதிர் நோக்கும் - தம்மை எதிரில் பார்க்கும். கண் - விழிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். மலர் - செந்தாமரை மலர்களிலிருந்து வழியும்; ஒருமை பன்மை மயக்கம். நீர் - நீரை. துடைத்தருளி - தம்முடைய வலக்கையால் துடைத்தருளி. க்: சந்தி. கையில் - அந்த நாயனாருடைய வலக்கையில். பொற் கிண்ணம் - ஒரு தங்கக் கிண்ணத்தை. அளித்து - வழங்கியருளி. அண்ணலை - தலைவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. 'அண்ணல் - பெருமையைப் பெற்றவர்' எனலும் ஆம். அங்கு - அந்த இடத்தில். அழுகை - அழுதருளிய அழுகையை. தீர்த்து - போக்கி விட்டு. அம் - அழகிய. கணனார் - கண்களைப் பெற்றவராகிய தோணியப்பர். கணனார்: இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். அருள் புரிந்தார் - அந்த நாயனாருக்குத் தம்முடைய திருவருளை வழங்கினார்.

பின்பு வரும் 69-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'எல்லா மக்களுக்கும் தந்தையும் அன்னையும் என்று கூறப் பெறும் இந்தத் தோணியப்பர் இவ்வாறு தம்முடைய திருவருளை வழங்கினார் ஆகையால் அந்த ஆண் குழந்தை யார் அதுமுதல் ஆளுடைய பிள்ளையார் என்னும் திருநாமத்தைப் பெற்றவராகி எல்லாத் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் அறிவதற்கு அருமையாக உள்ள குழந்தையாக விளங்கும் கேடு இல்லாத ஒப்பற்ற சிவஞான சம்பந்தர் என்னும் திருநாமத்தையும் பெற்றவர் ஆனார்.' பாடல் வருமாறு:

''யாவருக்கும் தந்தைதாய் எனும்இவர்இப் படிஅளித்தார்
ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய பொருள்ஆகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்தர் ஆயினார்.''

யாவருக்கும் - எல்லா மக்களுக்கும். தந்தை - தகப்பனும். தாய் - அன்னையும். எனும் - என்று கூறப் பெறும்; இடைக்குறை. இவர் - இந்தத் தோணியப்பர். இப்படி - இவ்வாறு. அளித்தார் - தம்முடைய திருவருளை வழங்கினார். ஆவதனால் - ஆகையால். ஆளுடைய பிள்ளையாராய் - ஆளுடைய பிள்ளையார் என்னும் திருநாமத்தைப் பெற்றவராகி. அகில - எல்லா. தேவருக்கும் - தேவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். முனிவருக்கும் - முனிவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். 'அந்தணர்களுக்கும்' எனலும் ஆம். தெரிவரிய - அறிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. பொருள் - குழந்தை; ''பொருட்பல மதுடையசுரன் தாரகனைப் பொருது பொன்று வித்த பொருளினை'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''செப்பலுற்ற பொருளின் சிறப்பினால்'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க. ஆகும் - ஆக

விளங்கும். தா - கேடு. இல் - இல்லாத; கடைக்குறை. தனி - ஒப்பற்ற. ச்: சந்தி. சிவஞான சம்பந்தர் - சிவஞான சம்பந்தர் என்னும் மற்றொரு திருநாமத்தையும். ஆயினார் - பெற்றவர் ஆனார்.

பின்பு வரும் 70-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த நிலையில் தவத்தைப் புரிந்த முதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிவபெருமானுடைய திருவடிகளையே தியானம் புரியும் அழகு பெருகி எழும் சிவஞானத்தையும், இந்த மனிதப் பிறப்பை அடியோடு போகுமாறு புரியும் பக்குவத்தோடு ஓங்கி எழுந்த மெய்ஞ்ஞானத்தையும், உவமை வேறு எதுவும் இல்லாத அறுபத்து நான்கு கலைகளைக் கற்றுத் தேர்ச்சி பெற்ற மெய்ஞ்ஞானத்தையும், அறிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள உண்மையான ஞானத்தையும் தெரிந்து கொண்டார்.' பாடல் வருமாறு:

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமைஇலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. அந்நிலையில் - அந்த நிலையில். தவ - தவத்தைப் புரிந்த. முதல்வர் - முதல்வராகிய. சம்பந்தர்தாம் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தாம்: அசைநிலை. சிவன் - சிவபெருமானுடைய. அடியே - திருவடிகளையே; ஒருமை பன்மை மயக்கம். சிந்திக்கும் - தியானம் புரியும். திரு - அழகு. ப்: சந்தி. பெருகு - பெருகி எழும். சிவஞானம் - சிவஞானத்தையும். பவமதனை - இந்த மானிடப் பிறவியை. அது: பகுதிப் பொருள் விகுதி. அற - அடியோடு போகுமாறு. மாற்றும் - போக்கிவிடும். பாங்கினில் -

பக்குவத்தோடு; உருபு மயக்கம். ஓங்கிய - ஓங்கி எழுந்த. ஞானம் - மெய்ஞ்ஞானத்தையும். உவமை - தனக்கு ஒப்பாக வேறு ஒன்றும். இலா - இல்லாத. க்: சந்தி. கலை - அறுபத்து நான்கு கலைகளைக் கற்றுத் தேர்ச்சி பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஞானம் - உண்மையான அறிவையும். உணர்வரிய - தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மெய்ஞ்ஞானம் - உண்மையான ஞானத்தையும். உணர்ந்தார் - தெரிந்து கொண்டார்.

பின்பு வரும் 71-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'''எந்தப் பொருளையும் உண்டாக்கி அருள்பவன் பரமேசுவரனே'' என்னும் உணர்ச்சியையும், ''அந்தப் பொருள் அடியேங்களை ஆட்களாக உடையவராகிய சிவ பெருமானாருடைய அடியவர்களே'' என்னும் அறிவையும், இந்த வகையால் இவற்றை அல்லாமல் தம்முடைய சம்மதத்தைப் பெற்றுக் கொண்டு நடக்கும் பரிசுத்தம் இல்லாதவர்களாகிய சமண சமயத்தைச் சார்ந்த சமணர்களினுடைய துணிந்த கொள்கைகளும் பொடிப் பொடி ஆகுமாறு ஓர் உபாயத்தை எண்ணித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் தங்கியிருந்த திருமடத்திலிருந்து எழுந்து சென்றார்.' பாடல் வருமாறு:

"'எப்பொருளும் ஆக்குவான் ஈசனே' எனும்உணர்வும்,
'அப்பொருள்தான் ஆளுடையார் அடியார்கள்' எனும்அறிவும்,
இப்படியால் இதுவன்றித் தம்இசைவு கொண்டியலும்
துப்புரவில் லார்துணிவும் துகளாகச் சூழ்ந்தெழுந்தார்.''

எப்பொருளும் - எந்த வகையான பொருளையும். 'பொருள் - செல்வம்' எனலும் ஆம். ஆக்குவான் - உண்டாக்கியருள்பவன். ஈசனே - பரமேசுவரனே. எனும் - என்னும்; இடைக்குறை. உணர்வும் - உணர்ச்சியையும்.

அப்பொருள் தான் - அந்தச் செல்வம். தான்: அசைநிலை. ஆளுடையார் - அடியேங்களை அடிமைகளாகப் பெற்றவராகிய அந்தப் பரமேசுவரருடைய. 'அடியேங்கள்' என்றது சேக்கிழார் தம்மையும் பிற திருத்தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. ஆள்: ஒருமை பன்மை மயக்கம். அடியார்கள் - அடியவர்களே. எனும் - என்று எண்ணும்; இடைக்குறை. அறிவும் - அறிவையும். இப்படியால் - இந்த வகையால். இது - இவற்றை; ஒருமை பன்மை மயக்கம். அன்றி - அல்லால். த்: சந்தி. தம் - தம்முடைய; என்றது 'அந்தப் பரமேசுவரருடைய' என்பதை. இசைவு - சம்மதத்தை. கொண்டு - பெற்றுக் கொண்டு. இயலும் - நடைபெறும். துப்புரவு - பரிசுத்தம். இல்லார் - இல்லாதவர்களாகிய சமணர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். துணிவும் - துணிந்த கொள்கைகளும்; ஆகுபெயர். துகளாக - பொடிப் பொடியாக அழிந்து போகுமாறு. ச்: சந்தி. சூழ்ந்து - ஓர் உபாயத்தை எண்ணி. எழுந்தார் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் தங்கிக் கொண்டிருந்த திருமடத்திலிருந்து எழுந்து சென்றார்.

அடுத்து வரும் 72-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சீர்த்தியைப் பெற்ற வேதியராகிய சிவபாத இருதயரும் சிறிது நேரத்தில் பிரம தீர்த்தத்தில் நிரம்பியிருக்கும் நீரை அடைந்து தாம் வழக்கமாகப் புரிந்து வரும் சந்தியாவந்தனம், பிரம்மயக்ஞம் முதலிய நியமங் களை நிறைவேற்றிய பிறகு அந்தப் பிரமதீர்த்தத்தினுடைய கரையின் மேல் ஏறி வந்து பெரிய மெய்ஞ்ஞானத்தோடு விளங்குகின்ற தம்முடைய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பார்த்து, ''நீ உனக்கு யார் கொடுத்த பாலாகிய உணவைக் குடித்தது?'' எனக் கேட்டுச் சினத்தைப் பெற்று.' பாடல் வருமாறு:

"சீர்மறையோர் சிவபாத இருதயரும் சிறுபொழுதில்
நீர்மருவித் தாம்செய்யும் நியமங்கள் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி,
'யாரளித்த பாலடிசில் உண்டதுநீ' எனவெகுளா"

இந்தப் பாடல் குளகம். சீர் - சீர்த்தியைப் பெற்ற. மறையோர் - வேதியரும். சிவபாத இருதயரும் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தந்தையாரும் ஆகிய சிவபாத இருதயரும். சிறுபொழுதில் - சிறிது நேரத்தில். நீர் - பிரமதீர்த்தத்தில் நிரம்பியிருக்கும் நீரை. மருவி - அடைந்து. த்: சந்தி. தாம் செய்யும் - தாம் வழக்கமாகப் புரிந்து கொண்டு வரும். நியமங்கள் - சந்தியாவந்தனம், பிரம்மயக்ஞம் முதலிய நியமங்களை. முடித்து - செய்து நிறைவேற்றி விட்டு. ஏறி - பிறகு அந்தப் பிரம தீர்த்தத்தின் கரையின் மேல் ஏறிவந்து. ப்: சந்தி. பேருணர்வில் - பெரியதாக விளங்கும் மெய்ஞ்ஞானத்தோடு. பொலிகின்ற - விளங்குகின்ற. பிள்ளையார் தமை - தம்முடைய ஆண் குழந்தையாராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. நோக்கி - பார்த்து. நீ யார் - நீ எவர். அளித்த - உனக்குக் கொடுத்த. பால் அடிசில் - பாலாகிய உணவை. உண்டது - குடித்தது. என - என்று கேட்டு; இடைக்குறை. வெகுள - கோபித்துக் கொண்டு.

அடுத்து உள்ள 73-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர், "எச்சில் நீர் கலந்திருக்குமாறு உனக்கு இந்தப் பாலை அளித்தவரை எனக்குக் காட்டுவாயாக" என்று கூறி விட்டுத் தம்முடைய வல்க்கையில் சிறியதாகிய ஒரு கோலை எடுத்துக் கொண்டு தம்மை அடிப்பதற்காகத் தம்முடைய வலக்கையை ஓங்கத் தம்முடைய திருவடிகளைத் தரையி லிருந்து எடுத்து அந்தச் சிறியவராகிய பெருமையையும்

தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஆனந்தக் கண்ணீர்த் துளிகளைச் சொரிந்து தம்முடைய தலைக்கு மேல் எடுத்தருளும் ஓர் அழகிய வலக்கையில் உள்ள சுட்டு விரலால் சுட்டிக் காட்டி.' பாடல் வருமாறு:

"'எச்சில்மயங் கிடஉனக்கீ திட்டாரைக் காட்'டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
அச்சிறிய பெருந்தகையார் ஆனந்தக் கண்துளிபெய்
துச்சியினில் எடுத்தருளும் ஒருதிருக்கை விரற்சுட்டி."

இந்தப் பாடலும் குளகம். எச்சில் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் எச்சில் நீர். மயங்கிட - கலந்திருக்குமாறு. உனக்கு - நினக்கு. ஈது - இந்தப் பாலை. இட்டாரை - அளித்தவரை. க்: சந்தி. காட்டு - எனக்கு நீ காட்டுவாயாக. என்று - எனக் கூறிவிட்டு. கை - தம்முடைய வலக்கையில். ச்: சந்தி. சிறியது ஒரு - சிறியதாகிய ஒரு. மாறு - கோலை. கொண்டு - எடுத்துக் கொண்டு. ஓச்ச - தம்மை அடிப்பதற்காகத் தம்முடைய வலக்கையை ஓங்க. க்: சந்தி. கால் - தம்முடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து - தரையிலிருந்து எடுத்துக் கொண்டு. ஏ: அசைநிலை. அச்சிறிய - அந்தச் சிறியவராகிய; வினையாலணையும் பெயர். பெரும் - பெருமையையும். தகையார் - தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். ஆனந்தக் கண்துளி - ஆனந்தக் கண்ணீர்த் துளிகளை; ஒருமை பன்மை மயக்கம். பெய்து - சொரிந்து. உச்சியினில் - தம்முடைய தலைக்கு மேல்; உருபு மயக்கம். எடுத்தருளும் - தூக்கியருளும். ஒருதிரு - ஓர் அழகிய. க்: சந்தி. கை - வலக்கையில் உள்ள. விரல் - சுட்டு விரலால். சுட்டி - சுட்டிக் காட்டி.

பின்பு வரும் 74-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'ஆகாயத்தில் நிரம்பிய பெருகி எழுந்த பிரகாசத்தோடு திகழும் இளமையைப் பெற்ற இடப வாகனத்தின் மேல் சந்தங்கள் நிரம்பியுள்ளவையும், பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாகயுள்ளவை யும் ஆகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் தம்மை வணங்கித் துதிக்கப் பொம்மையைப் போல என்றும் மாறாத அழகைப் பெற்றவளாகிய பெரிய நாயகியோடு எழுந்தருளி வந்து தம்முடைய எண்ணத்தில் நிரம்பியுள்ள கருணையோடு தமக்கு முன்னால் நின்று கொண்டிருந்த வராகிய பிரமபுரீசரைத் தம்முடைய எதிரில் தம்முடைய சுட்டு விரலினால் சுட்டிக் காட்டி தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பிச் சொரிந்து மேலெழுந்த உயர்ச்சியைப் பெற்ற சிவஞானத்தைக் கொண்ட அழகிய வார்த்தைகளால்.' பாடல் வருமாறு:

"விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த அருமறைகள் பணிந்தேத்தப் பாவையுடன்
எண்ணிறைந்த கருணையினால் நின்றாரை எதிர்காட்டி
உண்ணிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால்."

இந்தப் பாடலும் குளகம்.விண் - ஆகாயத்தில். நிறைந்த - நிரம்பிய. பெருகு - பெருகி எழுந்து தோன்றிய. ஒளியால் - பிரகாசத்தோடு; உருபு மயக்கம். விளங்கு - திகழும். மழ - இளமையைப் பெற்ற. விடைமேல் - இடப வாகனத்தின் மீது. ஏ: அசைநிலை. பண் - சந்தங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நிறைந்த - நிரம்பியுள்ளவையும்; வினையாலணையும் பெயர். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ளவையும் ஆகிய; வினையாலணையும் பெயர். மறைகள் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும்

நான்கு வேதங்களும். பணிந்து - வணங்கி. ஏத்த - துதிக்க. ப்: சந்தி. பாவையுடன் - பொம்மையைப் போல. என்றும் மாறாத அழகைப் பெற்றவளாகிய பெரிய நாயகியோடு; உவம ஆகு பெயர். எண் - தம்முடைய எண்ணத்தில். நிறைந்த - நிரம்பியுள்ள. கருணையினால் - கருணையோடு; உருபு மயக்கம். நின்றாரை - தமக்கு முன்னால் நின்று கொண்டிருந்தவராகிய பிரமபுரீசரை. எதிர் - தமக்கு எதிரில். காட்டி - தம்முடைய சுட்டு விரலினால் காட்டி. உள் - தம்முடைய திருவுள்ளத்தில். நிறைந்து - நிரம்பி. பொழிந்து - மழையைப் போலச் சொரிந்து. எழுந்த - மேலே எழுந்த. உயர் - உயர்ச்சியைப் பெற்ற; முதல் நிலைத் தொழிற் பெயர். ஞான - சிவஞானத்தை கொண்ட. த்: சந்தி. திரு - அழகிய. மொழியால் - வார்த்தைகளால்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து உள்ள 75-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வரம்பு இல்லாத வேதங்களில் முதலில் உள்ள மெய்யெழுத்தாகிய 'த்' என்ற எழுத்தோடு தொடங்கிய ஏடுகளில் வரையும் வேதமாகிய வளப்பத்தைப் பெற்ற நீண்ட செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தால் இந்தப் பெருமையைப் பெற்று விளங்கும் நிலவுலகத்தில் வாழும் மக்களுக்கு உபதேச மொழி சிறந்து விளங்கப் பல வகையான உயிர்களும் மகிழ்ச்சியை மிகுதியாக அடையுமாறு தம்முடைய பாசுரம் பரமேசுவரராகிய பிரமபுரீசரிடம் போகும் முறையைப் பெறுவதற்காகத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தப் பிரமபுரீசருடைய அழகிய செவிகளைச் சிறப்பாக எடுத்துப் பாடி.' பாடல் வருமாறு:

"எல்லையிலா மறைமுதல்மெய் யுடன்எடுத்த எழுதுமறை
மல்லல்நெடும் தமிழால்இம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்
பல்லுயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து."

இந்தப் பாடலும் குளகம். எல்லை - வரம்பு. இலா - இல்லாத; இடைக்குறை. மறை - வேதங்களில்; ஒருமை பன்மை மயக்கம். முதல் - முதலில் உள்ள. மெய்யுடன் - மெய்யெழுத்தாகிய 'த்' என்ற எழுத்தோடு. எடுத்த - பாடத் தொடங்கிய. எழுது - ஏடுகளில் வரையும். மறை - வேதமாகிய. மல்லல் - வளப்பத்தைப் பெற்ற; சொற் சுவை, பொருட் சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற. நெடும் - நீண்ட காலம் இருக்கத்தகும். தமிழால் - செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தால்; ஆகுபெயர். இம்மா - இந்தப் பெருமையைப் பெற்ற. நிலத்தோர்க்கு - நிலவுலகத்தில் வாழும் மக்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். உரை - உபதேச.மொழி. சிறப்ப - சிறந்து விளங்க. ப்: சந்தி. பல் - பல. உயிரும் - உயிர்களும்; ஒருமை பன்மை மயக்கம். களி - மகிழ்ச்சியை. கூர - மிகுதியாக அடையுமாறு. த்: சந்தி. தம் - தம்முடைய. பாடல் - பாசுரம். பரமர் பால் - பரமேசுவரராகிய பிரமபுரீசரிடம். செல்லும் - போய்ச் சேரும். முறை - முறையை. பெறுவதற்கு - அடைவதற் காக. த்: சந்தி. திரு - அழகிய. ச்: சந்தி.செவியை - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்த பிரமபுரீசருடைய செவிகளை; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சிறப்பித்து - சிறப்பாக எடுத்துக் கூறிப் பாடி.

பின்பு வரும் 76-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிறப்பான தன்மையைப் பெறுமாறு தாம் தொடங்கிய அழகிய, ''தோடுடைய செவியன்'' என்று தொடங்கும் உண்மைகளை எடுத்துக் கூறும் ஒரு திருப்பதிகத்தை பிரம்புரியாகிய சீகாழியில் விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவராகிய பிரமபுரீசரை அவருக்கு உரிய அடையாளங்களாகிய காதுகள், இடப வாகனம், பிறைச்

சந்திரன், திருநீறு என்பவற்றோடு பாடியருளித் தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரிடம், ''அடியேமை இதைப் புரிந்தருளிய தலைவன் இவன் அன்றே'' என்று அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

''செம்மைபெற எடுத்ததிருத், 'தோடுடைய செவியன்'எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்
தம்மைஅடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்
'கெம்மைஇது செய்தபிரான் இவனன்றே' எனஇசைத்தார்.''

செம்மை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிறப்பான தன்மையை. பெற - பெறுமாறு. எடுத்த - தாம் பாடத் தொடங்கிய. திரு - அழகிய. த்: சந்தி. 'தோடுடைய செவியன்' எனும் - 'தோடுடைய செவியன்' என்று தொடங்கும். எனும்: இடைக்குறை. மெய்ம்மை - உண்மைகளை; ஒருமை பன்மை மயக்கம். மொழி - எடுத்துக் கூறுதலைப் பெற்ற. மொழி: முதல் நிலைத் தொழிற்பெயர். த்: சந்தி. திருப்பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பிரமபுரம் - பிரமபுரமாகிய சீகாழியில். மேவினார் தம்மை - விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பவராகிய பிரமபுரீசரை. தம்: அசைநிலை. அடையாளங்களுடன் - அவருக்கு உரிய காதுகள், இடப வாகனம், பிறைச்சந்திரன், திருநீறு என்னும் அடையாளங்களோடு. சாற்றி - பாடியருளி. த்: சந்தி. தாதையார்க்கு - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரிடம்; உருபு மயக்கம். எம்மை - அடியேமை. இது - இதனை. செய்த - புரிந்தருளிய. பிரான் - தலைவன். இவனன்றே என - இவனன்றே என்று; இடைக்குறை. இசைத்தார் - அந்த நாயனார் பாடியருளினார்.

அவ்வாறு அவர் பாடியருளிய பாசுரம் வருமாறு. இந்தப் பாசுரம் நட்டபாடைப் பண் அமைந்தது:

"தோடுடைய செவியன் விடையேறிஓர் தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசிஎன் உள்ளம் கவர்கள்வன்
ஓடுடைய மலரான்முளை நாட்பணிந் தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமபுரம் மேவிய பெம்மான் இவனன்றே."

இந்தப் திருப்பதிகத்தில் உள்ள இறுதிப் பாசுரம் வருமாறு:

"அருநெறிய மறைவல்ல முனிஅகன் பொய்கை மலர்மேய
பெருநெறிய பிரமபுரம் மேவிய பெம்மான் இவன்றன்னை
ஒருநெறிய மனம்வைத்துணர் ஞானசம் பந்தன்
னுரைசெய்த
திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை தீர்தல்
எளிதாமே."

*சீகாழி:* இது காழி எனவும் வழங்கும். இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் பிரமபுரீசர். தோணியப்பர், சட்டை நாதர் என்பவை. இந்தத் திருநாமங்கள் வேறு வேறு இடங்களில் உள்ள மூர்த்திகளின் திருநாமங்கள். அம்பிகை திருநிலை நாயகி. தீர்த்தம் பிரம தீர்த்தம். இந்தச் சிவத்தலம் சிதம்பரத்திற்குத் தெற்குத் திசையில் 11-மைல் தூரத்தில் உள்ளது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய தலம் இது. இந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் பிரமபுரீசரும் திருநிலை நாயகியும் தம்மை ஆட் கொண்டதை,

"போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு வாதவகை உண்டு
பலபொய்
ஓதியவர் கொண்டுசெய்வ தொன்றுமிவை நன்றதுணர்
வீருரை மினோ
ஆதியெமை யாளுடைய அரிவையொடு பிரிவிலி அமர்ந்த
பதிதான்

சாதிமணி தெண்டிரை கொணர்ந்துவயல் புகஎறிகொள்
சண்பை நகரே.''

''காலைநன் மாமலர் கொண்டடி பரவிக்
கைதொழு மாணியைக் கறுத்த வெங்காலன்
ஓலம திடமுன் உயிரொடு மாள
உதைத்தவன் உமையவள் விருப்பஎம் பெருமான்
மாலைவந் தணுக ஓதம்வந் துலவி
மறிதிரை சங்கொடு பவளமுன் உந்தி
வேலைவந் தணையும் சோலைகள் சூழ்ந்த
வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரே.''

''போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை ஆண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையாள் அவளொடும் பெருந்தகை இருந்ததே.''

என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய வற்றால் உணரலாம். திருநீலகண்டப் பெரும்பாண நாயனார், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைச் சேர்ந்து அவர் அருளிச் செய்யும் தேவாரத் திருப்பதிகங்களைத் தம்முடைய யாழில் வாசிக்கும் பேற்றைப் பெற்றிருந்த தலம் இது. இந்தச் சிவத்தலத்தல் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு ஒரு தனித் திருக்கோயில் உள்ளது. ஸ்ரீகாழி, பிரமபுரம், தோணிபுரம், வேணுபுரம், சிரபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருநாமங்களைப் பெற்ற தலம் இது. பிரமதேவன் வழிபட்டமையால் பிரமபுரம் எனவும், தேவர்கள் புகலிடமாகப் புகுந்த காரணத்தால் புகலி எனவும், பிரளய காலத்தில் ஒரு தோணியைப் போலக் கடலில் அமிழாமல் மிதந்தமையால் தோணிபுரம் எனவும் பெயர்கள் வந்தன. பிரமதேவன் வழிபட்டதைப் புலப்படுத்தித்

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"எரியார் மழுவொன் றேந்தி அங்கை இடுதலை யேகலனா
வரியார் வளையார் ஐயம் வவ்வாய் மாநலம் வவ்வுதியே
சரியா நாவின் வேதகீதன் தாமரை நான் முகத்தன்
பெரியான் பிரமன் பேணி யாண்ட பிரம புரத்தானே."

சீகாழி கடலின்மேல் மிதந்ததைப் புலப்படுத்தித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய புறநீர்மைப் பண் அமைந்த ஒரு பாசுரம் வருமாறு:

"சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபம்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனார் தங்கிடம் எங்கும்
ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி
ஒலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையால் மிக்க
கழுமல நகரென வாமே."

இந்தச் செய்தியைப் புலப்படுத்தி அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு பாசுரம் வருமாறு:

"அருவரை பொறுத்த ஆற்றலி னானும்
அணிகிளர் தாமரை யானும்
இருவரும் ஏத்த எரியுரு வான
இறைவர் உறைவிடம் வினவில்
ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ணம்
ஒலிபுனல் வெள்ளம்முன் பரப்பக்
கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்கும்
கழுமல நகரென வாமே."

''அமரர் புகலால் மலிந்த பூம்புகலி'' என்று புகலி என்னும் பெயர் வந்ததற்கு உரிய காரணத்தைப் புலப்படுத்தல் காண்க.

பின்பு வரும் 77-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் பிழைகளைப் புரிந்தாலும் தம்மை வந்து சேர்ந்தால் நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் படைத்தவனாகிய கைலாசபதி பெருமையைப் பெற்று விளங்கும் கருணையைக் கைக் கொள்வார்கள் என்று காட்டுவதற்காக நல்ல எண்ணம் இல்லாத வலிமையைப் பெற்ற இராக்கதனாகிய இராவணன் கைலாய மலையைத் தூக்கித் தன்னுடைய கைகள் ஒடிந்த பிறகு சங்கீதப் பாடல்களை அவன் பாட தலைவனாகிய கைலாசபதி அந்த அரக்கனுக்குத் தன்னுடைய திருவருளை வழங்கிய பாக்கியத்தை எடுத்துக் கூறித் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பா டருள்செய்தார்.''

மண்ணுலகில் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இந்த மண்ணுலகத்தில். வாழ்வார்கள் - வாழும் மக்கள். பிழைத்தாலும் - பிழைகளைப் புரிந்தாலும். வந்து - தம்மிடம் வந்து. அடையின் - புகலாக அடைவார் களானால். கண்ணுதலான் - நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் படைத்த கைலாசபதி. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். கருணை - கருணையை. கைக் கொள்ளும் - கைக்கொள்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். என -

என்று; இடைக்குறை. க்: சந்தி. காட்ட - எடுத்துக் காட்டுவதற்காக. எண்ணம் - நல்ல எண்ணம். இலா - சிறிதும் இல்லாத; இடைக்குறை. வல் - வலிமையைப் பெற்ற. அரக்கன் - இராக்கதனாகிய இராவணன். எடுத்து - கைலாய மலையைத் தூக்கி. முறிந்து - தன்னுடைய கைகள் ஒடிந்து. இசை - இசைப் பாடல்களை; ஒருமை பன்மை மயக்கம். பாட - அந்த அரக்கன் பாட. அண்ணல் - தலைவனாகிய அந்தக் கைலாசபதி 'அண்ணல் - பெருமையைப் பெற்றவன்' எனலும் ஆம். அவற்கு - அந்த இராவணனுக்கு. அருள் புரிந்த - தன்னுடைய திருவருளை வழங்கிய. ஆக்கப்பாடு - பாக்கியத்தை எடுத்துக் கூறி. அருள்செய்தார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

இந்தச் செய்தியைப் புலப்படுத்தித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய பாசுரங்கள் வருமாறு:

"தென்னிலங்கை அரையன் வரைபற்றி எடுத்தான்
முடிதிண்டோள்
தன்னிலங்கு விரலால் நெரித்திசை கேட்டன் றருள்செய்த
மின்னிலங்கு சடையான்மட மாதொடு மேவும்மிடம் என்பர்
பொன்னிலங்கு மணிமாளிகை மேல்மதி தோயும் புகலூரே."

"முன்நிற்பவர் இல்லாமுரண் அரக் கன்வட கயிலை
தன்னைப் பிடித்தெடுத்தான் முடிதடந் தோள்இற ஊன்றிப்
பின்னைப் பணிந்தேத்தப் பெருவாள் பேரொடும் கொடுத்த
மின்னிற் பொலிசடையான் இடம் வீழிம் மிழலையே."

"அறையார்கடல் இலங்கைக்கிறை அணி சேர் கயிலாயம்
இறையார மூளெடுத்தான் இருபது தோன்ற ஊன்றி
நிறையார்புனல் நெய்த்தானன் நல்நிகழ் சேவடி பரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத் துதல் கதியே."

"மையார் நிறமேனி அரக்கர்தம் கோனை
உய்யா வகையால் அடர்த்தின் னருள்செய்த
கொய்யார் மலர்சூடி குரங்கணில் முட்டம்
நெறியால் தொழுவார் வினைநீற்க இலாவே."

"இலகும் முடிபத் துடையானை
அல்லகண் டருள்செய்த எம்மண்ணல்
உலகில் லுயிர்நீர் நிலம்மற்றும்
பலகண் டவன்ஊர் பனையூரே."

"விடைத்தவல் அரக்கன் வெற்பினை எடுக்க
மெல்லிய திருவிரல் ஊன்றி
அடர்த்தவன் றனக்கன் றருள்செய்த அடிகள்
அனலது ஆடுமெம் அண்ணல்
மடக்கொடி யவர்கள் வருபுனல் ஆட
வந்திழி அரிசிலின் கரைமேல்
படப்பையிற் கொணர்ந்து பருமணி சிதறும்
பாம்புர நன்னக ராரே."

"பொன்னங் கானல் வெண்திரை சூழ்ந்த
பொருகடல் வேலி இலங்கை
மன்னன் ஒல்க மால்வரை ஊன்றி
மாமுர ணாகமும் தோளும்
முன்னவரை வாட்டிப் பின்னருள் செய்த
மூவிலை வேலுடை மூர்த்தி
அன்னம் கன்னிப் பேடையொ டாடி
அணவு பெருந்துறை வாரே."

"கல்லார் வரைஅரக்கன் தடந்தோள் கவின்வாட
ஒல்லை அடர்த்தவனுக் கருள்செய்த திசையுள்
பல்லார் பகுவாய நகுவெண் தலைசூடி
வில்லால் எயிலெய்தான் ஆடும்வீரட் டானத்தே."

"மாவடைந்த தோரரக்கன் வலிதொலைவித் தவன்றன்
நாவுடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே
பூவடைந்த நான்முகன்போற் பூசுரர் போற்றிசெய்யும்
சேவடைந்த ஊர்த்தியானே சேய்ஞலூர் மேயவனே."

"அந்தரத்தில் தேரூரும் அரக்கன்மலை யன்றெடுப்பச்
சுந்தரத்தின் திரவிரலால் ஊன்றஅவ னுடல்நெரிந்து
மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தானும்
கொந்தரத்த மதிச்சென்னிக் கோளிலிஎம் பெருமானே."

"இருளைப் புரையும் நிறத்தி லரக்கன் றனைஈ டழிவித்து
அருளைச் செய்யும் அம்மான் நேரா ரந்தண் கந்தத்தின்
மருளைச் சுரும்பு பாடி அளக்கர் வரையார் திரைக்கையால்
தரளத் தோடு பவளம் ஈனும் சண்பை நகராரே."

"மறந்தான் கருதி வலியை நினைந்து மாறாய் எடுத்தான்தோள்
நிறந்தான் முரிய நெரிய ஊன்றி நிறைய அருள்செய்தார்
திறந்தான் காட்டி அருளாய் என்று தேவ ரவர்வேண்ட
அறந்தான் காட்டி அருளிச் செய்தார் அண்ணா
மலையாரே."

"பரக்கும் பெருமை இலங்கை என்னும் பதியிற் பொலிவாய
அரக்கர்க் கிறைவன் முடியும் தோளும் அணியார்
விரல்தன்னால்
நெருக்கி அடர்த்து நிமலா போற்றி என்று நின்றேத்த
இரக்கம் புரிந்தார் உமையா ளோடும் ஈங்கோய்
மலையாரே."

"கரையார் கடல்சூழ் இலங்கை மன்னன் கயிலை
மலைதன்னை
வரையார் தோளால் எடுக்க முடிகள் நெரித்து மனமொன்றி
உரையார் கீதம் பாட நல்ல உவப்பில் அருள்செய்தார்
திரையார் புனல்சூழ் செல்வ நறையூர்ச் சித்தீச் சரத்தாரே."

"வரையார் திரள்தோள் மதலா ளரக்கன் எடுப்ப மலைசேரும்
விரையார் பாத நுதியால் ஊன்ற நெரிந்து சிரம்பத்தும்
உரையார் கீதம் பாடக் கேட்டங் கொளிவாள் கொடுத்தாரும்
கரையார் பொன்னி சூழ்தண் குடந்தைக் காரோ ணத்தாரே."

"விண்டான திரவியனார் கயிலை வேரோ டெடுமுத்
தான்றன்
திண்டோ ளுடலும் முடியும் நெரியச் சிறிதே ஊன்றிய
புண்டான் ஒழிய அருள்செய் பெருமான் புறவம் பதியாக
எண்டோ ளுடையான் இமையோ ரேத்த உமையோ
டிருந்தானே."

"பாங்கிலா அரக்கன் கயிலையன் றெடுப்பப்
பலதலை முடியொடு தோளவை நெரிய
ஓங்கிய விரலால் ஊன்றியன் றவற்கே
ஒளிதிகழ் வாளது கொடுத்தழ காய
கோங்கொடு செருந்தி கூவிளம் மத்தம்
கொன்றையும் குலாவிய செஞ்சடைச் செல்வர்
வேங்கைபொன் மலரார் விரைதரு கோயில்
வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரே."

"கச்சும் ஒள்வாளும் கட்டிய உடையர்
கதிர்முடி சுடர்விடக் கவரியும் குடையும்
பிச்சமும் பிறவும் பெண்ணங் காய
பிறைநுத லவர்தமைப் பெரியவர் பேணப்

பச்சமும் வலியும் கருதிய அரக்கன்
பருவரை எடுத்ததிண் டோள்களை அடர்வித்
தச்சமும் அருளும் கொடுத்தளம் அடிகள்
அச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே.''

''வலம்கொள் புகழ்பேணி வரையால் உயர்திண்டோள்
இலங்கைக் கிறைவாட அடர்த்தங் கருள்செய்தான்
பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர் பணிந்தேத்தக்
கலங்கொள் கடல்நாகைக் காரோ ணத்தானே.''

''ஆவா எனஅரக்கன் அலற அடர்த்திட்டுத்
தேவா எனஅருளார் செல்வம் கொடுத்திட்ட
கோவே எருக்கத்தம் புலியூர் மிகுகோயில்
தேவே எனஅல்லல் தீர்தல் திடமாமே.''

''அரக்கன் நெரிதர, இரக்கம் எய்தினீர்
பரக்கும் மிழலையீர், கரக்கை தவிர்மினே.''

''வலங்கொள் சங்கத்தார் கலியோதத் துதை யுண்டு
கலங்கள் வந்து கார்வயல் ஏறும் கலிக்காழி
இலங்கை மன்னன் தன்னை இடர்கண் டருள்செய்த
சலங்கொள் சென்னி மன்னா என்னத் தவமாமே.''

''கறுத்த மனத்தினொடு கடுங்காலன்வந் தெய்துதலும் கலங்கி
மறுக்குறு மாணிக் கருள மகிழ்ந்தான் இடம்வினவில்
செறுத்தெழு வாளரக்கன் சிரம்தோளும் மெய்யும் நெரியஅன்று
ஒறுத்தருள் செய்த பிரான் திருவூறலை உள்குதுமே.''

"நோதல் செய்தரக்கனை நோக்கழியச்
சாதல் செய்தவனடி சரணெனலும்
ஆதர வருள்செய்த அடிகளவர்
காதல்செய் வளநகர் சடைமுடியே."

"கருவைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்தும் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை ஏத்தும் நாமடியோம்
செருவில் அரக்கனைச் சீரி வடர்த்தரள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெறா திருநீல கண்டம்."

"இரவணன் இருபது கரமெழில் மலைதனின்
இரவண நினைதர அவன்முடி பொடிசெய்து
இரவண மமர்பெயர் அருளினன் அகநெதி
இரவண நிகர்வலி வலமுறை இறையே."

"அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
அரக்கர்கோன் தலைகள் பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக்
கருள்புரிந்த மைந்தர் கோயில்
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ
இளமேதி இரிந்தங் கோடிச்
செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல
வயல்படியும் திருவை யாறே."

"மாடம் நீடுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்
வாடியூட் வரையால் அடர்த்தன் றருள் செய்தவர்
வேட வேடர் திருவாஞ்சியம் மேவிய வேந்தரைப்
பாட நீடு மனத்தார் வினைபற் றறுப்பார்களே."

"பொலியும் மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நான்கொடுத் தான்மங் கலக்குடிப்
புலியின் ஆடையி னானடி ஏத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே."

"ஓயாத அரக்கன் ஒடிந்தலற
நீயாரருள் செய்து நிகழ்ந்தவனே
வாயார வழுத்துவர் நாகேச்சரத்
தாயே எனவல் வினைதானறுமே."

"பரப்புறு புகழ்ப்பெருமை யாலின் வரைதன்னால்
அரக்கனை அடர்த்தருளும் அண்ணல் இடமென்பர்
நெருக்குறு கடற்றிரைகள் முத்தமணி சிந்தச்
செருக்குறு பொழிற்பொலி திருப்புகலி யாமே."

"உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்தன்
றரக்கனை அடர்த்தருளும் அப்பனிடம் என்பர்
குரக்கினம் விரைப்பொழி லின்மீது கனிஉண்டு
பரக்குறு புனற்செய் விளையா டுவழுவூரே."

"இருக்கும் நீள்வரை பற்றி அடர்த்தன் றெடுத்த
அரக்கன் ஆகம் நெரித்தருள் செய்தவன் கோயில்
மருக்கு வாவிய மல்லிகை சண்பகம் வண்பூந்
திருக்கு வாவிய தண்பொழில் நீடுகாய்க் காடே."

"எரித்த மயிர்வா ளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடுதாள்
நெரித் தருளும் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினான்
உரித்த வரித்தோ லுடையான்உறை பிரமபுரந் தன்னைத்
தரித்த மனம் எப்போதும் பெறுவார்தாம் தக்காரே."

“கன்னெடிய குன்றெடுத்தான் தோளடரக் காலூன்றி
இன்னருளால் ஆட்கொண்ட எம்பெருமான் தொல்கோயில்
பொன்னடிக்கே நாள்தோறும் பூவோடு நீர்சுமக்கும்
தன்னடியார் ஆக்கூரில் தான்றோன்றி மாடமே.”

“பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்தன் றருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே.”

“இத்தே ரேக இம்மலை பேர்ப்பன் என்றேந்தும்
பத்தோர் வாயான் வரைக்கீழ் அலறப் பாதந்தான்
வைத்தா ரருள்செய் வரதன் மருவும் ஊரான
புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே.”

“அடலெரு தேறுகந்த அதிரும்கழற் களைதிரும் சிலம்பொ
டிசையக்
கடலிடை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன்
முனிவுற்றிலங் கையரையன்
உடலொடு தோளனைத்தும் முடிபத்திறுத்து மிசைகேட்
டிரங்கி ஒருவாள்
நடலைகள் தீர்த்துநல்கி நமையாளவல்ல நறையூரின்
நம்பன வனே.”

“வண்ண மால்வரை தன்னை மறித்திட லுற்றவல் லரக்கன்
கண்ணும் தோளும் நல்வாயும் நெரிதரக் கால்விர லூன்றிப்
பண்ணின் பாடல்கைந் நரம்பாற் பாடிய பாடலைக் கேட்டு
அண்ண லாயருள் செய்த அடிகளுக் கிடம் அரசிலியே.”

"இலங்கு பூண்வரை மார்புடை இராவணன்
எழில்கொள் வெற்பெடுத் தன்று
கலங்கச் செய்துதலும் கண்டு தம்
கழலடி நெரியவைத் தருள்செய்தார்
புலங்கள் செங்கழு நீர் மலர்த்
தென்றல் மன்றதனிடைப் புகுந்தாரும்
குலங்கொள் மா மறை அவர்சிர
புரம்தொழு தெழவினை குறுகாவே."

"மலையுடன் எடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுடன் நெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர் வெண்காடு மேவிய
அலையுடைப் புனல் வைத்த அடிகளல்லாரே."

"மலையன இருபது தோளி னான்வலி
தொலைவுசெய் தருள்செய் சோதி யாரிடம்
மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்
வலம்வரு மலையன மாடக் கோயிலே."

"அரக்கனார் அருவரை எடுத்தவ னலறிட
நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவாள் அருள்செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்கு நீரவளொடும் பெருந்தகை இருந்ததே."

"தடவரை எடுத்தவன் தருக்கறத் தோளடர்
படவிரல் ஊன்றியே பிரிந்தவற் கருள்செய்தான்
மடவர வெருக்கொடு வன்னியும் மத்தமும்
இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே."

"மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
கடகட எடுத்தவன் தலைபத்தும் நெரிதர
அடர்தர ஊன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென உறைவிடம் திருவுசாத் தானமே."

"எடுத்த வல்லரக்கன் முடி தோளிற
அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுட்
கொடித்து யங்குநற் கோயிலு ளின்புற
இடத்து மாதொடு தாமும் இருப்பவரே."

"தென்னிலங்கையர் மன்னன் செழுவரை
தன்னிலங்க அடர்த்தருள் செய்தவன்
மன்னிலங்கிய மாமழ பாடியை
உன்னிலங்க வுறுபிணி இல்லையே."

"இமையவர் அஞ்சிஓட எதிர்வாரவர் தம்மை யின்றி
அமைதரு வல்லரக்கன் னடர்த்து மலை அன்றெடுப்பக்
குமையது செய்து பாடக் கொற்றவா ளொருநாள்
கொடுத்திட்
டுமையொ டிருந்தபிரான் பிரமாபுர முன்னுமினே."

"எரியனைய மயிர்இரா வணனை
யீடழிய எழில்கொள் விரலால்
பெரியவரை ஊன்றி அருள்செய்தசிவன்
மேவுமலை பெற்ற வினவின்
வரியசிலை வேடுவர்கள் ஆடவர்கள்
நீடுவரை பூடுவ ரலால்
கரியினொடு வரியுழுவை அரியனமும்
வெருவுகா ளத்தி மலையே."

"இலங்கைநகர் மன்னன்முடி ஒருபதினொ
டிருபதுதோள் நெரிய விரலால்
விலங்கலில் அடர்த்தருள் புரிந்தவர்
இருந்தஇடம் வினவுதிர் களேல்
கலங்கல்நுரை யுந்திஎதிர் வந்தகயம்
மூழ்கிமலர் கொண்டு மகிழா
மலங்கிவரு காவிரி நிரந்துபொழி
கின்றமயி லாடு துறையே."

"வரைக்குல மகட்கொரு மறுக்கம்
வருவித்த மதியில் வலியுடை
அரக்கன் துரக்கர சிரத்துற
அடர்த்தருள் புரிந்த அழகன்
இருக்கைய தருக்கன்முத லானஇமை
யோர்குழுமி எழ விழவினில்
தருக்குல நெருக்குமலி தண்பொழில்கள்
கொண்டவன சண்பை நகரே."

"முடித்தலைகள் பத்துடைமுருட் டுருஅரக்கனை
நெருக்கி விரலால்
அடித்தல முன்வைத்தல மரக்கருணை
வைத்தவன் இடம்பலதுயர்
கெடுத்தலை நினைத்தற இயற்றுதல்
கிளர்ந்துபுல் லாணர்வறுமை
விடுத்தலை மதித்துநிதி நல்குமவர்
மல்குபதி வேதவனமே."

"எண்ணமது வின்றியெழி ஷ்ர்கைலை
மாமலை எடுத்ததிறலார்
திண்ணிய அரக்கனை நெரித்தருள்
புரிந்தசிவ லோகனிடமாம்

பண்ணமரும் மென்மொழியி னார்பணை
முலைப்பவள வாயழகதார்
ஒண்ணுதல் மடந்தையர் குடைந்துபுனல்
ஆடுதவி மாணிகுழியே.''

''உரக்கர் நெருப்பெழ நெருக்கிவரை
பற்றிஒருத் தன்முடிதோள்
அரக்கனை அடத்தவன் இசைக்கினிது
நல்கியருளி அங்கணனிடம்
முருக்கிதழ் மடக்கொடி மடந்தையரும்
ஆடவரும் மொய்த்தகலவை
வரைக்குழல் மிகக்கமழ விண்ணிசை
உலாவுதிரு வேதிகுடியே.''

''ஏறுபுகழ் பெற்றதென் இலங்கையவர் கோனை
அருவரையில்
சீறியா னுக்கருளும் எங்கள்சிவ லோகனிட மாகும்
கூறுமடி யார்களிசை பாடிவலம் வந்தயரு மருவிச்
சேறுகமரான வழியத்திகழ் தரும் திருநல் லூரே.''

''தண்டணை தோளிரு பத்தினொடும்
தலைபத் துடையானை
ஒண்டனை மாதுமை தான்நடுங்க
ஒருகால் விரலூன்றி
மிண்டது தீர்த்தருள் செய்யவல்ல
விகிதர்க் கிடம்போலும்
வண்டணை தன்னொடு வைகு
பொழில்வளம்புர நன்னகரே.''

"கடுத்தவா ளரக்கன் கைலைஅன் றெடுத்த
கரமுரம் சிரம்நெரிந் தவற
அடர்த்ததோர் விரலால் அஞ்செழுத் துரைக்க
அருளினன் தடமிகு நெடுவாள்
படித்த நான்மறை கேட்டி ருந்த
பைங்கிளிகள் பதங்களைஓதப் பாடிருந்த
விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி
மிழலையான் எனவினை கெடுமே."

பிறகு உள்ள 78-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தன்னை வணங்கும் பக்தர்களுக்கே சிவபெருமான் தன்னுடைய திருவருளை வழங்குதல் உண்டு எனவும்; தன்னை வணங்காதவர்களாகி பிழையான உள்ளங்களோடு மயக்கத்தை அடைந்தவர்களாகிய திருமாலும் பிரமதேவனும் தாழ்வாகிய பிறப்பைப் பெற்ற கரிய மிருகமாகிய பன்றியும், அன்னப் பறவையுமாக உருவங்களை எடுத்துக் கொண்டு திருவடிகளையும் திருமுடியையும் தரையைத் தோண்டிப் பார்த்துத் தேடியும், மேலே பறந்து தேடியும் அவற்றை அடைய முடியாமையால் சோர்ந்து விழுபவர்களாகிய அந்த இருவரும் ந, ம, சி, வா, ய என்ற ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை ஓதிச் சிவபெருமானைத் துதித்து உஜ்ஜீவனத்தை அடைந்த வண்ணத்தை விரிவாக எடுத்துத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துத் துதித்துய்ந்த படிவிரித்தார்."

தொழுவார்க்கே - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், தன்னை வணங்கும் பக்தர்களுக்கே; ஒருமை பன்மை மயக்கம். சிவபெருமான் அருளுவது - சிவபெருமான் தன்னுடைய திருவருளை வழங்குதல் உண்டு. என - எனவும்; இடைக்குறை. த்: சந்தி. தொழார் - தன்னை வணங்காதவர்களாகிய; முற்றெச்சம்; ஒருமை பன்மை மயக்கம். வழுவான - பிழையை உடையவை ஆன. மனத்தால் - உள்ளங்களோடு; உருபு மயக்கம்; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை. மாலாய - மயக்கத்தை அடைந்தவர்களாகிய; ஆகுபெயர், மால் - திருமாலும். அயனும் - பிரமதேவனும். இழிவாகும் - தாழ்வாகிய பிறப்பைப் பெற்றவையாகும். கருவிலங்கும் - கரிய மிருகமாகிய பன்றியும். பறவையுமாய் - அன்னப் பறவையுமாக உருவங்களை எடுத்துக் கொண்டு திருவடிகளையும் திருமுடியையும் தரையைத் தோண்டிப் பார்த்துத் தேடியும், மேலே பறந்து சென்று தேடியும். எய்தாமை - அவற்றை அடைய முடியாமையால். விழுவார்கள் - சோர்வை அடைந்து, தரையில் விழுபவர்களாகிய அந்த இருவரும். அஞ்சு எழுத்து - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. துதித்து - ஓதிச் சிவபெருமானைத் துதித்து. உய்ந்தபடி - உஜ்ஜீவனத்தை அடைந்த வண்ணத்தை. விரித்தார் - விரிவாக எடுத்துத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 79-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அடியேங்களுடைய தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் "இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் திருவாய் மலர்ந்தருளிச் செய்த காரண புருஷராகிய

வெண்மையாகிய பிறைச் சந்திரன் தங்கியிருக்கும் சிவந்த சடாபாரத்தைத் தன்னுடைய தலையின் மேற் பெற்ற தலைவனாகிய பிரமபுரீசனுக்கு உரிய சைவ சமய வழியைத் தெரிந்து கொண்டு உஜ்ஜீவனத்தை அடையாதவர் களும், தங்களுக்குள்ளே நல்ல எண்ணங்களைத் தங்களுடைய உள்ளங்களில் மேற்கொள்ளும் ஞானம் இல்லாதவர்களுமாகிய சமணர்களாகிய இழிந்த குணங் களையும் இழிந்த செயல்களையும் பெற்றவர்களுடைய சமய நெறியும் பௌத்தர்களினுடைய சமய நெறியும் பழி உடையவை யாகப் புரியும் குற்றத்தை உடையனவே'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"'வேத காரணராய் வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலம்கொள்ளும்
போதம்இலார் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே'என மொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. எங்கள் - அடியேங்களுடைய; இது சேக்கிழார் தம்மையும் பிற திருத்தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. பிரான் - தலைவராகிய; ஒருமை பன்மை மயக்கம். சம்பந்தர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வேத - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். காரணராய் - திருவாய் மலர்ந்தருளிச் செய்த காரண புருஷராகிய. வெண் - வெண்மை நிறத்தைப் பெற்ற. பிறை - பிறைச் சந்திரன். சேர் - தங்கியிருக்கும். செய்ய - சிவந்த. சடை - சடாபாரத்தைத் தன்னுடைய தலையின் மேற் பெற்ற. நாதன் தலைவனாகிய பிரமபுரீசனுக்கு உரிய. நெறி - சைவ சமய வழியை. அறிந்து

- தெரிந்து கொண்டு. உய்யார் - உஜ்ஜீவனத்தை அடையாதவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். தம்மில் - தங்களுக்குள். ஏ: அசைநிலை. நலம் - நல்ல எண்ணங்களை; ஒருமை பன்மை மயக்கம். கொள்ளும் - தங்களுடைய உள்ளங்களில் மேற்கொள்ளும். போதம் - ஞானம். இலார் - இல்லாதவர்களுமாகிய; ஒருமை பன்மை மயக்கம்; இடைக்குறை. சமண் - சமணர்களாகிய; திணை மயக்கம். கையர் - இழிந்த குணங்களையும் இழிந்த செயல்களையும் பெற்றவர் களுடைய; ஒருமை பன்மை மயக்கம். புத்தர் - பௌத்தர்களினுடைய. வழி - சமய நெறியும். பழி - பழியை உடையவை ஆக; ஆகுபெயர். ஆக்கும் - புரியும். ஏதமே - குற்றத்தை உடையனவே; ஆகுபெயர். என - என்று; இடைக்குறை. மொழிந்தார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 80-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் மேலே கூறிய கருத்துக்களை வைத்து ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி, அதை நிறைவேற்றித் திருக்கடைக் காப்பையும் பாடியருளி, தமிழ் வேதம் ஆகிய திருப்பதிகங்களைப் பாடியருளும் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரமபுரீசருடைய சந்நிதியில் அந்த ஈசரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டருள பிரமபுரீசர் வழங்கிய திருவருளையும் கருணையையும் திருவாளனாராகிய அந்த நாயனார் பெற்ற திருவருளைத் தெரிந்து கொண்டு தேவர்கள் எல்லாரும் பெருகி எழுமாறு ஆகாயத்தில் மகிழ்ச்சியால் ஆரவாரத்தைப் புரிந்து கற்பக மரத்திலிருந்து கொய்து கொண்டு வந்த தேன் நிரம்பிய மலர்களை மாரியைப் போலச் சொரிந்தார்கள்.' பாடல் வருமாறு:

"திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்தொழுது நின்றருள
அருட்கருணைத் திருவாள னார்அருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினில்ஆர்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார்."

திருப்பதிகம் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் மேலே கூறிய கருத்துக்களை வைத்து ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி. அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய திருப்பதிகம் காந்தாரப் பஞ்சமப் பண் அமைந்த பஞ்சாக்கரத் திருப்பதிகம் ஆகும். அந்தப் பதிகத்தில் வரும் 10-ஆம் பாசுரத்தில் மேலே கூறிய கருத்து அமைந்துள்ளது. அந்தப் பாசுரம் வருமாறு:

"புத்தர் சமண் கழுக்கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன அஞ்செ ழுத்துமே."

நிறைவித்து - அந்தத் திருப்பதிகத்தைப் பாடி நிறைவேற்றிவிட்டு. த்: சந்தி. திருக்கடைக்காப்பு - அந்தத் திருப்பதிகத்தின் இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளிய பாசுரத்தை. ச்: சந்தி. சாத்தி - பாடியருளி. அந்தப் பாசுரம் வருமாறு:

"நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை
கற்றவன் காழியார் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்பர் ஆவரே."

இருக்குமொழி - தமிழ் வேதமாகிய திருப்பதிகங் களைப் பாடியருளும். ப்: சந்தி. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எதிர் - பிரமபுரீசருடைய சந்நிதியில் அந்த

ஈசுவரருக்கு முன்னால். தொழுது - தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு. நின்று அருள் - தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டருள. அருள் - பிரமபுரீசர் வழங்கிய திருவருளையும். கருணை - கருணையையும். த்: சந்தி. திருவாளனார் - திருவாளனாராகிய அந்த நாயனார் பெற்ற. அருள் - திருவருளை. கண்டு - தெரிந்து கொண்டு. அமரர் எலாம் - தேவர்கள் எல்லாரும். எலாம்: இடைக்குறை. பெருக்க - பெருகி எழுமாறு. விசும்பினில் - ஆகாயத்தில். ஆர்த்து - மகிழ்ச்சியால் ஆரவாரத்தைப் புரிந்து. ப்: சந்தி. பிரசமலர் - கற்பக மரத்திலிருந்து கொய்து கொண்டு வந்த தேன் நிரம்பிய மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். மழை - மழையைப் போல. பொழிந்தார் - சொரிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 81-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அப்போது சீகாழிக்கு வந்து பொங்கி எழும் மங்கல வாத்தியங்களான ஆகாய துந்துபிகளினுடைய முழக்கமும், கந்தருவர்களும் கின்னரர்களும் பாடும் இனிய கானத்தினால் உண்டாகும் ஓசை சமுத்திரத்தைப் போல முழங்கும் முழக்கமும், இந்திரன் முதலாக உள்ள தேவர்கள் எடுத்துத் துதிக்கும் இசை பாடல்களினுடைய முழக்கமும், முடிவு இல்லாத பல சிவகணத்தலைவர்கள் செய்யும் 'அர, அர' என்று ஓதும் ஓசையினால் அடங்க நிற்க.' பாடல் வருமாறு:

"வந்தெழு மங்கலமான வானகதுந் துபிமுழக்கும்
கந்தருவர் கின்னரர்கள் கானஒலிக் கடல்முழக்கும்
இந்திரனே முதல்தேவர் எடுத்தேத்தும் இசைமுழக்கும்
அந்தமில்பல் கணநாதர் 'அர'எனும்ஓ சையின்அடங்க."

இந்தப் பாடல் குளகம். வந்து - அப்போது சீகாழிக்கு வந்து. எழு - பொங்கி எழும். மங்கலமான - மங்கல வாத்தியங்களான; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர்.

வானக - ஆகாய. துந்துபி - துந்துபிகள்; ஒருமை பன்மை மயக்கம். முழக்கும் - முழங்கும் முழக்கமும். கந்தருவர் - கந்தருவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். கின்னரர்கள் - கின்னரர்களும். கான - பாடும் இனிய கானத்தினால் உண்டாகும். ஒலி - ஓசை. க்: சந்தி. கடல் - சமுத்திரத்தைப் போல; உவம ஆகுபெயர். முழக்கும் - முழங்கும் முழக்கமும். இந்திரன் - தேவர்களினுடைய அரசனாகிய இந்திரன். ஏ: அசைநிலை. முதல் - முதலாக உள்ள. தேவர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து ஏத்தும் - எடுத்துப் பிரமபுரீசரைத் துதிக்கும். இசை - இசைப் பாடல்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஆகு பெயர். முழக்கும் - முழக்கமும். அந்தம் - முடிவு. இல் - இல்லாத; கடைக்குறை. பல் - பல. கணநாதர் - சிவகணங்களினுடைய தலைவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அர - ஹர. எனும் - என்று ஓதும்; இடைக்குறை. ஓசையின் - ஓசையினால். அடங்க - அடங்கி நிற்க.

பின்பு உள்ள 82-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் அப்போது இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் கிளர்ச்சியை அடைந்து கானம் வளருமாறு முழக்கத்தைப் புரியவும், தேவலோகத்தில் வாழும் தேவர்களுடைய அழகு நிரம்பிய கிரீடங்கள் நெருக்கத்தி னால் கீழே தள்ளிய வரிசையாக உள்ள மாணிக்கங்கள் தரையில் சிந்த, உயரமாக உள்ள ஆகாயத்திலிருந்து பெய்யும் மழைத் துளிகள் என்று கூறுமாறு வந்து இந்த மண்ணுலகம் முழுவதும் நிரம்பவும், குறையாத உண்மையான பொறுமை தங்களுடைய திருவுள்ளங்களில் பெருகி எழும் தவத்தைப் புரிந்த முனிவர்கள் என்னும் சமுத்திரம் பக்கத்தில் சுற்றியிருக்க.' பாடல் வருமாறு:

"மறைகள் கிளர்ந்தொலி வளர முழங்கிட வானோர்தம்
நிறைமுடி உந்திய நிரைமணி சிந்திட நீள்வானத்
துறையென வந்துல கடைய நிறைந்திட ஓவாமெய்ப்
பொறைபெ ருகும்தவ முனிவர் எனும்கடல் புடைசூழ."

இந்தப் பாடலும் குளகம். மறைகள் - அந்தச் சீகாழியில் அப்போது இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும். கிளர்ந்து - கிளர்ச்சியை அடைந்து. ஒலி - கானம். வளர - வளருமாறு. முழங்கிட - முழக்கத்தைப் புரியவும். வானோர் தம் - தேவலோகத்தில் வாழும் தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. நிறை - அழகு நிரம்பிய. அழகு: தோன்றா எழுவாய். முடி - கிரீடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். உந்திய - நெருக்கத்தினால் ஒன்றோடொன்று உராய்ந்து தள்ளிய. நிரை - வரிசையாக உள்ள. மணி - அந்தக் கிரீடங்களில் பதிக்கப் பெற்ற மாணிக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிந்திட - தரையில் சிந்த. நீள் - உயரமாக உள்ள. வானத்து - ஆகாயத்திலிருந்து பெய்யும். உறை - மழைத்துளிகள்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று கூறுமாறு: இடைக்குறை. வந்து உலகு - வந்து இந்த மண்ணுலகம். அடைய - முழுவதும். நிறைந்திட - நிரம்பவும். ஓவா - குறையாத. மெய் - உண்மையாக உள்ள. ப்: சந்தி. பொறை - பொறுமை. பெருகும் - தங்களுடைய திருவுள்ளங்களில் பெருகி எழும். தவ - தவத்தைப் புரிந்த. முனிவர் - முனிவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எனும் - என்னும்; இடைக்குறை. கடல் - சமுத்திரம். புடை - பக்கத்தில். சூழ - சுற்றியிருக்க.

பின்பு வரும் 83-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தம்மை அடைவதற்காக தம்முடைய திருவுள்ளத்தில் வந்து மேலெழும் சிவஞானத்தைப் பெற ஆரம்பித்த தோணியப்பருடைய அடியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம் ஒப்பு இல்லாத பிறப்புக்களாகிய கிளர்ச்சியைப் பெற்ற சமுத்திரங்கள் அகன்று போகுமாறு தம்முடைய இரண்டு திருவடிகளாகிய தெப்பத்தை வழங்கியருளும் அழகிய கண்களைப் பெற்றவரும், போர் புரியும் இடப வாகனத்தின்மேல் தம்மோடு தங்கியுள்ள வரும், தம்மிடம் பொருந்திய வாம பாகத்தில் எழுந்தருளியிருக்கும் தம்முடைய தர்மபத்தினியுமாகிய பெரியநாயகியோடு வேதங்கள் தொடர்ந்து பின்சென்ற பெருமையைப் பெற்று விளங்கும் திருத்தோணியை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்
இணையில் பவம்கிளர் கடல்கள் இகந்திட இருதாளின்
புணையருள் அங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையொ டணைந்தனர் சுருதி தொடர்ந்திட பெருந்தோணி."

அணைவுற - தம்மை அடைவதற்காக. வந்து - தம்முடைய திருவுள்ளத்தில் வந்து. எழும் - மேலெழும். அறிவு - சிவஞானத்தை. தொடங்கின - பெற ஆரம்பித்த. அடியார்பால் - தோணியப்பருடைய அடியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம், இணை - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. கிளர் - கிளர்ச்சியைப் பெற்று எழும். கடல்கள் - சமுத்திரங்கள். இகந்திட - அகன்று போகுமாறு. இரு - தம்முடைய இரண்டு. தாளின் - திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். புணை - தெப்பத்தை. அருள் - வழங்கியருளும். அம் - அழகிய. கணர் - கண்களைப் பெற்றவரும். கணர்: இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். பொரு - போரைப் புரியும்.

விடை - இடப வாகனத்தின்மேல். தங்கிய - தம்மோடு தங்கியுள்ளவரும்; வினையாலணையும் பெயர். புணர்பாக - தம்மிடம் பொருந்திய வாம பாகத்தில் எழுந்தருளியிருக்கும். த்:சந்தி. துணையொடு - தம்முடைய தர்ம பத்தினியுமாகிய பெரிய நாயகியோடு. சுருதி - வேதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தொடர்ந்திட - தொடர்ந்து பின் சென்ற. பெருமீ - பெருமையைப் பெற்று விளங்கும். தோணி - திருத்தோணியை. இந்தத் தோணி சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் உள்ளது. அணைந்தார் - அடைந்தார்.

அடுத்து வரும் 84-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய தலைவராகிய தோணியப்பர் தோணியை அடைந்த தன்மையைப் பார்த்துத் தம்முடைய திருவுள்ளத்தில் தொடர்ச்சியாக அமைந்து மேலெழும் பக்தியினால் தரையின் மேல் நின்று கொண்டிருந்த வேதியரும், சிறிய யானையைப் போன்றவருமாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் தம்முடைய கண்களின் வழியாகப் போன தம்முடைய திருவுள்ளத்தை விட்டு விடாமல் சேர்ந்து செல்வப் புண்ணியராகிய பிரமபுரீசர் எழுந்தருளியுள்ள மலர்கள் மிகுதியாகப் பரப்பப் பெற்ற திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"அண்ணல் அணைந்த மைகண்டு
தொடர்ந்தெழும் அன்பாலே
மண்மிசை நின்ற மறைச்சிறு
போதகம் அன்னாரும்
கண்வழி சென்ற கருத்து
விடாது கலந்தேகப்

புண்ணியர் நண்ணிய பூமலி
கோயிலின் உட்புக்கார்.''

அண்ணல் - தம்முடைய தலைவராகிய தோணியப்பர். அணைந்தமை - தோணியை அடைந்த தன்மையை. கண்டு - பார்த்து. தொடர்ந்து - தம்முடைய திருவுள்ளத்தில் தொடர்ச்சியாக அமைந்து. எழும் - பொங்கி எழும். அன்பால் - பக்தியினால். ஏ: அசைநிலை. மண்மிசை - தரையின்மேல். நின்ற - நின்று கொண்டிருந்த. மறை - வேதியரும்; திணை மயக்கம். ச்: சந்தி. சிறு - சிறிய. போதகம் - யானையை. அன்னாரும் - போன்றவருமாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும். கண் - தம் கண்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். வழி - வழியாக. சென்ற - போன. கருத்து - தம்முடைய திருவுள்ளத்தை. விடாது - விட்டு விடாமல். கலந்து - சேர்ந்து. ஏக - செல்ல. ப்: சந்தி. புண்ணியர் - புண்ணியராகிய பிரமபுரீசர். நண்ணிய - எழுந்தருளியுள்ள. பூ - மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மலி - மிகுதியாகப் பரப்பப் பெற்ற. கோயிலின் - திருக்கோயிலுக்கு. உள் - உள்ளே. புக்கார் - நுழைந்தார்.

பிறகு வரும் 85-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இத்தகைய ஆண் குழந்தையைப் பெறும் பொருட்டு முடிவு இல்லாத பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தை முன்பு செய்து திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தந்தையார் என்று கூறும் பாக்கியத்தைப் பெற்றவராகிய சிவபாத இருதயர் தங்களுக்கு ஒப்பாக ஏதும் இல்லாமல் எல்லாப் பொருள்களும் தாழ்வாகிப் போன செந்தாமரை மலர்களைப் போன்ற தம்முடைய திருக்கரங்களைத் தம்முடைய தலையின் மேல் குவித்துக் கும்பிட்டு மகிழ்ச்சியை அடைந்து கூத்தாடி வேறாக உண்டான

பயத்தோடும் அதிசய உணர்ச்சியோடும், விருப்பத்தோடும் தமிழ்ப் புலவர்கள் பாடும் அருமையாக விளங்கும் செந்தமிழ் மொழியின் அர்த்தமாக விளங்கும் பிரமபுரீசருடைய குறித்த எண்ணத்தைச் சிந்தித்துப் பார்ப்பவரானார்.' பாடல் வருமாறு:

"ஈறில் பெருந்தவம் முன்செய்து தாதை எனப்பெற்றார்
மாறு விழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறு விளைந்த வெருட்சி வியப்பு விருப்போடும்
கூறும் அருந்தமிழின் பொருளான குறிப் போர்வார்."

ஈறு - இத்தகைய ஆண் குழந்தையைப் பெறும் பொருட்டு முடிவு. இல் - இல்லாத; கடைக்குறை. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தவம் - தவத்தை. முன் - முன்பு. செய்து - புரிந்து. தாதை - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தந்தையார்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று கூறும்; இடைக்குறை. ப்: சந்தி. பெற்றார் - பாக்கியத்தைப் பெற்றவராகிய சிவபாத இருதயர். மாறு - தங்களுக்கு ஒப்பாக ஏதும் இல்லாமல். விழுந்த - எல்லாப் பொருள்களும் தாழ்வாகிப் போன. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கை - தம்முடைய திருக்கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். குவித்து - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கும்பிட்டு. மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. ஆடி - கூத்தாடி. வேறு - வேறாக. விளைந்த - உண்டான. வெருட்சி - பயத்தோடும். வியப்பு - அதிசய உணர்ச்சியோடும். விருப்போடும் - விருப்பத்தோடும். கூறும் - செந்தமிழ் புலவர்கள் பாடும். அரும் - அருமையாக விளங்கும். தமிழின் - செந்தமிழ் மொழியினுடைய. பொருள் ஆன - அர்த்தமாக விளங்கும் பரம்பொருள் ஆக விளங்கும் பிரமபுரீசர். குறிப்பு -குறித்த எண்ணத்தை. ஓர்வார் - சிந்தித்துப் பார்ப்பவரானார்.

அடுத்து உள்ள 86-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'வஜ்ரத்தம்பம் போல விளங்குபவராகிய தோணியப்பரைத் தனியாகத் தரிசித்து அவரைத் தொடர்ந்து சென்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் போலத் தாம் தரிசித்தலைப் பெறுதல் இல்லாதவர் ஆயினும் அந்தச் சிவபாத இருதயர் நடந்த நிகழ்ச்சிகளைப் பார்த்திருப்பவர் தோணிபுரமாகிய சீகாழியில் பிரமபுரீசர் ஆலயத்தில் உள்ள கட்டுமலையில் வீற்றிருக்கும் தோணியப்பர் வழங்கிய திருவருள் ஆதலை எண்ணிப் பேராவலோடு விரும்பும் திருவுள்ளத்தோடு முன்னால் ஆலயத்துக்குள் நுழைந்த தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குப் பின்னால் போனார்.' பாடல் வருமாறு:

"தாணு வினைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போல்
காணு தல்பெற்றில ரேனும்நி கழ்ந்தன கண்டுள்ளார்
தோணிபு ரத்திறை தன்னரு ளாதல் துணிந்தார்வம்
பேணும னத்தொடு முன்புகு காதலர் பின்சென்றார்."

தாணுவினை - வஜ்ரத்தம்பம் போல் விளங்கு பவராகிய தோணியப்பரை. த்: சந்தி. தனி - தனியாக. கண்டு - தரிசித்து. தொடர்ந்தவர் தம்மைப் போல் - அந்தத் தோணியப்பரைத் தொடர்ந்து பின்பற்றிச் சென்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் போல. தம்: அசைநிலை. காணுதல் - தரிசித்தலை. பெற்றிலரேனும் - பெறுதல் இல்லாதவர் ஆயினும். நிகழ்ந்தன - அந்தச் சிவபாத இருதயர் நடந்த நிகழ்ச்சிகளை. கண்டுள்ளார் - பார்த்திருப்பவர். தோணி புரத்து - தோணிபுரமாகிய சீகாழியில். இறை தன் அருள் ஆதல் - பிரமபுரீசருடைய ஆலயத்தில் உள்ள கட்டுமலையில் வீற்றிருக்கும்

தோணியப்பர் வழங்கிய திருவருள் ஆதலை. துணிந்து - உறுதியாக எண்ணி. ஆர்வம் - பேராவலோடு. பேணு - விரும்பும். மனத்தொடு - திருவுள்ளத்தோடு. முன் - முன்னால். புகு - ஆலயத்துக்குள் நுழைந்த. காதலர் - தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. பின் - பின்னால். சென்றார் - தாமும் ஆலயத்துக்குள் போனார்.

பிறகு வரும் 87-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் அவருடைய தந்தையாராகிய சிவபாத இருதயரும் பிரமபுரீசருடைய ஆலயத்துக்குள் நுழைந்த அந்தச் சமயத்தில் அந்த அழகிய இடத்தில் அந்த இரண்டு பேர்களும் அடைந்ததைப் பார்த்தவர்களும், அவர்களை அல்லாத மற்ற மக்களும், மூன்று புரிகளைக் கொண்ட பூணூலை அணிந்து கொண்டிருக்கும் வேதியர்களும் மயிர்க் கூச்சாகிய புளகாங்கிதத்தை அடைந்து, ''இவ்வாறு நிகழ்ந்ததை ஒப்பதாகிய ஒரு வியப்பைத் தரும் நிகழ்ச்சி எந்த ஊரில் நடந்திருக்கிறது?'' என்று என்று பவளத்தைப் போன்ற சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய பிரமபுரீசருடைய திருக்கோயிலை உயரமாக நிற்கும் கோபுரத்தின் முன் உள்ள வாசலினுடைய வெளியிடத்தைச் சுற்றி வர.' பாடல் வருமாற:

"அப்பொழுது அங்கண் அணைந்தது கண்டவர் அல்லாதார்
முப்புரி நூல்மறை யோர்கள் உரோம முகிழ்ப்பெய்தி
'இப்படி ஒப்பதொர் அற்புதம் எங்குள' தென்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாயில் புறம்சூழ."

இந்தப் பாடல் குளகம். அப்பொழுது - அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் அவருடைய

தந்தையாராகிய சிவபாத இருதயரும் பிரமபுரீசருடைய ஆலயத்துக்குள் நுழைந்த அந்தச் சமயத்தில். அங்கண் - அந்த அழகிய இடத்தில். அணைந்தது - அந்த இரண்டு பேர்களும் அடைந்ததை. கண்டவர் - பார்த்த மக்களும்; ஒருமை பன்மை மயக்கம். அல்லாதார் - அவ்வாறு பார்த்தவர்கள் அல்லாத வேறு மக்களும்; ஒருமை பன்மை மயக்கம். முப்புரி - மூன்று புரிகளைக் கொண்ட. புரி: ஒருமை பன்மை மயக்கம். நூல் - பூணூலை அணிந்து கொண்டிருக்கும். மறையோர்கள் - சீகாழியில் வாழும் வேதியர்களும். உரோமமுகிழ்ப்பு - மயிர்க்கூச்சாகிய புளகாங்கிதத்தை. எய்தி - அடைந்து. இப்படி - இவ்வாறு நிகழ்ந்ததற்கு. ஒப்பது - நிகராகிய. ஓர் - ஒரு. அற்புதம் - வியப்பை உண்டாக்கும் நிகழ்ச்சி. எங்கு - எந்த ஊரில். உளது - நடந்திருக்கிறது; இடைக்குறை. என்று என்றே - என்று எனக் கூறி. ஏ: அசைநிலை. துப்பு - பவளத்தை. உறழ் - போல உள்ள. வேணியர் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய பிரம புரீசருடைய. கோயிலின் - திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும். வாயில் - கோபுரத்தின் முன்னால் உள்ள வாசலினுடைய. புறம் - வெளியிடத்தை. சூழ - சுற்றி வர.

பின்பு உள்ள 88-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிவஞானமாகிய பாலைக் குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரகாசம் பொங்கி எழும் திருமாலாகிய இடபவாகனத்தின் மேல் ஏறிக் கொண்டு அழகைப் பெற்ற தங்கத்தைப் பதித்த தோணியில் தங்கி வீற்றிருந்த பெருமையைப் பெற்று விளங்கும் அழகிய வாழ்வாகிய தோணியப்பரைச் சந்தித்து, ''இந்தச் சீகாழியில் அடியேனை ஆளாக உடையவனாகிய தோணியப்பன் உமாதேவியாகிய பெரிய நாயகியோடும் கட்டு மலையில்

வீற்றிருந்தான்'' என எண்ணி அந்த நாயனார் அந்த இடத்தில் அந்தத் தோணியப்பருடைய சந்நிதியில் நின்று கொண்டு பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''பொங்கொளி மால்விடை மீது புகுந்தணி பொற்றோணி
தங்கி இருந்த பெருந்திரு வாழ்வு தலைப்பட்டே
'இங்கெனை ஆளுடையான் உமையோடும் இருந்தான்' என்
றங்கெதிர் நின்று பகன்றார் ஞானத் தமுதுண்டார்.''

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. ஞானத்து - பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துக் குழைத்த சிவஞானமாகிய. அமுது - பாலை. உண்டார் - குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பொங்கு ஒளி - பிரகாசம் பொங்கி எழும். மால் - திருமாலாகிய. விடை - இடப வாகனத்தின். மீது - மேல். புகுந்து - ஏறிக் கொண்டு. அணி - அழகைப் பெற்ற. பொன் - தங்கத்தைப் பதித்திருக்கும். தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் விளங்கும் கட்டு மலையின் மேல் உள்ள தோணியில். தங்கி இருந்த - தங்கிக் கொண்டு வீற்றிருந்த. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். திரு - அழகிய. வாழ்வு - வாழ்வாகிய தோணியப்பரை. தலைப்பட்டு - சந்தித்து; தரிசித்து. ''மயில் வாகனனைச் சந்திக்கிலேன்.'' என்று கந்தர் அலங்காரத்தில் வருவதைக் காண்க. ஏ: அசை நிலை. இங்கு - இந்தச் சீகாழியில். எனை - அடியேனை; இடைக்குறை. ஆள் உடையான் - அடிமையாகப் பெற்றவனாகிய தோணியப்பன். உமையோடும் - உமா தேவியாகிய பெரிய நாயகியோடும். இருந்தான் - கட்டு மலையில் வீற்றிருந்தான். என்று - என எண்ணி. அங்கு - அந்த நாயனார் அந்த இடத்தில். எதிர் -

அந்தத் தோணியப்பருடைய சந்நிதியில். நின்று - நின்று கொண்டு. பகன்றார் - பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பின்பு உள்ள 89-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இனிய நாதத்தைப் பெற்ற ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களும் பொருந்திய சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழுமையைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகங்கள் பரமேசுவரனாகிய பிரமபுரீசனுக்கே செய்யுட் சொற்களை வைத்து முறையாகப் பாடியருளும் தொழும்பையும் அந்த பிரமபுரீசர் வழங்கிய திருவருளைப் பெற்ற சம்பந்தத்தோடும் பலவாகிய வேதங் களை முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய மறையவர்கள் பார்க்குமாறு விருப்பத்தோடு பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்துத் தந்த பாலின் மணம் கமழும் தங்கத்தைப் போன்ற அழகிய திருவாயைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரமபுரீசருடைய ஆலயத்திலிருந்து புறப்பட்டு வெளியில் எழுந்தருளிச் சென்றார்.' பாடல் வருமாறு:

"இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர் காண விருப்பொடு பால்நாறும்
பொன்மணி வாயினர் கோயிலின் நின்று புறப்பட்டார்."

இன்னிசை - இனிய நாதத்தைப் பெற்ற. ஏழும் - ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களும். இசைந்த - பொருந்திய. செழும் - சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழுமையைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகங்கள்; ஆகுபெயர். ஈசற்கே -

பரமேசுவரனாகிய பிரமபுரீசனுக்கே. சொல் - செய்யுட் சொற்களை; ஒருமை பன்மை மயக்கம். முறைபாடு - வைத்து முறையாகப் பாடியருளும். தொழும்பு - தொண்டினையும். அருள் - அந்தப் பிரமபுரீசர் வழங்கிய திருவருளையும். பெற்ற தொடக்கோடும் - பெற்ற தொடர்போடும். பல் - பலவாகிய. மறை - வேதங்களை முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். வேதியர் - மறையவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். காண - பார்க்குமாறு. விருப்பொடு - விருப்பத்தோடு. பால் - பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்துத் தந்த பாலினுடைய. நாறும் - நறுமணம் கமழும். பொன் - தங்கத்தைப் போன்ற; உவம ஆகுபெயர். மணி - அழகிய; 'பவளத்தைப் போன்ற அதரங்களைப் பெற்ற' எனலும் ஆம்; உவம ஆகு பெயர். வாயினர் - திருவாயைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். கோயிலின் நின்று - பிரமபுரீசருடைய ஆலயத்திலிருந்து. புறப்பட்டார் - புறப்பட்டு வெளியில் எழுந்தருளிச் சென்றார்.

அடுத்து வரும் 90-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் விரும்பிய வியப்பை உண்டாக்கும் நெடுங்காலம் இருக்கும் திருவருளைப் பெற்ற தலைவனாகிய தோணியப்பனுடைய சந்நிதிக்கு முன்னால் உயரமாக உள்ள தளங்களோடு விளங்கும் கோபுரத்தின் முன்னால் உள்ள ஆலயத்தினுடைய வாசலுக்கு நேராக அடைந்து ஒளியை வீசும் பிறைச்சந்திரனோடு விளங்கும் சடா பாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய பிரமபுரீசருடைய திருத்தொண்டர்கள் நல்ல வாழ்வை அடையும்

தோணிபுரமாகிய சீகாழியில் வாழும் மக்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில் சென்று அந்த நாயனாரை வரவேற்றுத் தோத்திரங்களைக் கூறுபவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"பேணிய அற்புதம் நீடருள் பெற்றபி ரான்முன்னே
நீணிலை யில்திகழ் கோபுர வாயிலின் நேரெய்தி
வாணில வில்திகழ் வேணியர் தொண்டர்கள் வாழ்வெய்தும்
தோணிபு ரத்தவர் தாம்எதிர் கொண்டு துதிக்கின்றார்."

பேணிய - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் விரும்பிய. அற்புதம் - வியப்பை உண்டாக்குவதும்; வினையாலணையும் பெயர். நீடு - நெடுங்காலம் இருப்பதும் ஆகிய; வினையாலணையும் பெயர். அருள் பெற்ற - திருவருளைப் பெற்ற. பிரான் - தலைவனாகிய தோணியப்பனுடைய. முன் - சந்நிதிக்கு முன்னால். ஏ: அசை நிலை. நீள் - உயரமாக உள்ள. நிலையில் - தளங்களோடு; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்க்ம். திகழ் - விளங்கும். கோபுர - கோபுரத்திற்கு முன்னால் உள்ள. வாயிலின் - ஆலயத்தினுடைய வாசலுக்கு. நேர் - நேராக. எய்தி - அடைந்து. வாள் - நிலாவை வீசும். நிலவில் - பிறைச் சந்திரனோடு; உருபு மயக்கம். திகழ் - விளங்கும். வேணியர் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய பிரமபுரீசருடைய. தொண்டர்கள் - திருத்தொண்டர்கள். வாழ்வு - நல்ல வாழ்க்கையை. எய்தும் - அடையும் இடமாகிய. தோணி புரத்தவர் தாம் - தோணிபுரமாகிய சீகாழியில் வாழும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். தாம்: அசை நிலை. எதிர் கொண்டு - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில் சென்று அந்த நாயனாரை வரவேற்று. துதிக்கின்றார் - பின் வருமாறு தோத்திரங்களைக் கூறுபவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 91-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'''சீகாழியில் வாழும் மக்கள் முன்பிறவியில் புரிந்த தவத்தின் பயனாகத் திருவவதாரம் செய்தருளியவரே, வேதியர்களுக்குள் கௌண்டிய கோத்திரத்தில் பிறந்தவர் களுக்குச் செல்வத்தைப் போன்றவரே, அறுபத்து நான்கு கலைகளைக் கற்றுத் தேர்ச்சியைப் பெற்ற அறிவைக் கொண்ட ஆழமான சமுத்திரத்தைப் போன்றவரே; அந்தச் சமுத்திரத்தில் தோன்றிய அமிர்தத்தைப் போன்றவரே, அடியவர்களுக்கு முன்னால் எழுந்தருளி வந்து இந்த மண்ணுலகத்தின் மேல் தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய ஒப்பற்ற தலைவனாகிய தோணியப்ப னுடைய தர்மபத்தினியும் ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற சங்கீதத்தைப் போன்ற வார்த்தைகளைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரும் ஆகிய பெரியநாயகி வழங்கிய திருவருளைப் பெற்றாய்'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டுவார்கள்.' பாடல் வருமாறு:

'''காழியர் தவமே, கவுணியர் தனமே, கலைஞானத்
தாழிய கடலே, அதனிடை அமுதே, அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திருவருள் பெற்றனை' என்பார்.''

காழியர் - சீகாழியில் வாழும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். தவமே - முன்பிறப்பில் புரிந்த தவத்தின் பயனாகத் திருவவதாரம் செய்தருளியவரே; ஆகு பெயர். கவுணியர் - வேதியர்களுக்குள் கௌண்டின்ய கோத்திரத் தில் பிறந்தவர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். தனமே - செல்வத்தைப் போன்றவரே; உவம ஆகு பெயர். கலை - அறுபத்து நான்கு கலைகளைக் கற்றுத் தேர்ச்சியைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஞானத்து - அறிவைக் கொண்ட.

ஆழிய - ஆழமான. கடலே - பாற்கடலைப் போன்றவரே; உவம ஆகு பெயர். அதனிடை - அந்தப் பாற்கடலில் தோன்றிய. அமுதே - அமுதத்தைப் போன்றவரே; உவம ஆகு பெயர். அடியார் - பிரமபுரீசருடைய அடியவர் களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முன் - முன்னால். வாழிய: அசைநிலை. வந்து இம்மண்மிசை - இந்த மண்ணுலகத்தின் மேல் திருவவதாரம் செய்தருளி வந்து. வானோர் - தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தனி - ஒப்பற்ற. நாதன் - தலைவனாகிய தோணியப்பனுடைய தர்மபத்தினியும்; ஆகு பெயர். ஏழிசை - ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற சங்கீதத்தைப் போன்ற; உவம ஆகுபெயர். மொழியாள் தன் - வார்த்தைகளைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவளும் ஆகிய பெரிய நாயகி. மொழி: ஒருமை பன்மை மயக்கம். தன்: அசை நிலை. திருவருள் வழங்கிய திருவருளை. பெற்றனை - நீ பெற்றாய். என்பார் - என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 92-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் வளருமாறு புரிந்தருளும் செல்வத்தைப் போன்றவரே, வைதிக சமயத்தினுடைய நிலை பேறாக விளங்குபவரே, வளரும் சிவஞானமாகிய சுமையை அணிந்த மேகத்தைப் போன்றவரே, புகலியாகிய சீகாழியில் வாழும் மக்களுடைய அடைக்கலத்தானமாகத் திகழ்பவரே, கரையை மோதும் அலைகளை வீசும் பொன்னைக் கொழிக்கும் காவிரியாற்றினுடைய துறையில் விளங்கும் சீகாழி பெற்ற மாணிக்கத்தைப் போன்றவரே, வேதங்களினுடைய

பிரகாசமாகப் பொலிபவரே, தங்களுடைய ஆலயத்துக்கு வெளியில் எழுந்தருளி இறையவனாகிய தோணியப்பன் உமையாளாகிய பெரிய நாயகியோடு எழுந்தருளி தன்னுடைய திருவருளை வழங்க அதனை அடைந்தவரே'' என்று சீகாழியில் உள்ள பக்தர்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டிப் பேசுவார்கள்.' பாடல் வருமாறு:

'''மறைவளர் திருவே, வைதிக நிலையே, வளர்ஞானப்
பொறையணி முகிலே, புகலியர் புகலே, பொருபொன்னித்
துறைபெறு மணியே, சுருதியின் ஒளியே, வெளியேவந்
திறையவன் உமையா-ளுடனருள் தரஎய்தினை.' என்பார்.''

மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளருமாறு புரிந்தருளும். திருவே - செல்வத்தைப் போன்றவரே; உவம ஆகுபெயர். வைதிக - வைதிக சமயத்தினுடைய. நிலையே - நிலைபேறாக விளங்குபவரே. வளர் - வளரும். ஞான - சிவஞானமாகிய. ப்: சந்தி. பொறை - சுமையை. அணி - தாங்கி அணிந்த. முகிலே - மேகத்தைப் போன்றவரே; உவம ஆகுபெயர். புகலியர் - புகலியாகிய சீகாழியில் வாழும் மக்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். புகலே - அடைக்கலத் தானமாகத் திகழ்பவரே. பொரு - கரையை மோதும் அலைகளை வீசும். பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாற்றினுடைய. த்: சந்தி. துறை - துறையில் விளங்கும் சீகாழி. பெறு - பெற்ற. மணியே - மாணிக்கத்தைப் போன்றவரே; உவம ஆகுபெயர். சுருதியின் - வேதங்களினுடைய. ஒளியே - பிரகாசமாகப் பொலிபவரே. வெளி - தங்களுடைய ஆலயத்துக்கு வெளியில். ஏ: அசை நிலை. வந்து - எழுந்தருளி. இறையவன் - எங்கும் நிறைந்தவனாகிய தோணியப்பன்.

உமையர்ளுடன் - உமையாளாகிய பெரிய நாயகியோடு. அருள் - தன்னுடைய திருவருளை. தர - வழங்க. எய்தினை - அதனை அடைந்தவரே. என்பார் - என்று சீகாழியில் வாழும் பக்தர்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டிப் பேசுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

மறைவளர்திரு: ''வேதநெறி தழைத்தோங்க... புனித வாய் மலர்ந்தழுத சீதவளவயற் புகலித் திருஞான சம்பந்தர்.'', ''சேயபொருள் திருமறையும் தீந்தமிழும் சிறக்கவரு நாயகனை.'', ''வேத நெறி வளர்ப்பவரும்.'', ''வேதம் வளர்க்கவும் சைவம் விளங்குதற்கும் வேதவனத்தருமணியை மீண்டும் புக்குப் பாதமுறப் பணிந்தெழுந்து.'', ''நான்மறையின் தனித்துணையை.'', ''நன்னெறி காட்ட வந்தார் நான் மறை வாழ வந்தார்.'', ''வேதமொடு சைவநெறி விளங்க வந்த கவுணியனார்.'', ''மறைவாழ அந்தணர் தம் வாய்மை ஒழுக்கம் பெருகும் துறைவாழ.'', ''வேத வாய்மையின் விதியுளி வினையினால் விளங்க.'', ''மறைகளோடு தாரணி உய்ய ஞான சம்பந்தன் வந்தான்.'' என்று சேக்கிழாரும், ''நான் மறை வளர ஐவேள்வுயர்த்த ஆறு தொழிலாளன்.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 93-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'''புண்ணியச் செயல்களுக்கு முதல்வராக விளங்கு பவரே, இடுப்பில் அணியும் சலங்கைகள் கோத்த அரை நாணோடு எழுந்தருளும் கண்களில் நிறைந்த சூரியனைப் போன்றவரே, அறுபத்து நான்கு கலைகளும் வளரும் சந்திரனைப் போலத் திகழ்பவரே, அழகு பொருந்தி விளங்கும் பண்கள் நடக்கும் நடையைப்போலத் திகழ்பவரே, இளம் பருவத்தில் ஒரு மூன்று பிராயம் நடக்கும் போதே நீ எண்ணிய பரம்பொருளாகி நிலைத்து

நின்றவராகிய தோணியப்பர் வழங்கிய திருவருளை நீ பெற்றாய்'' என்று சீகாழியில் வாழும் மக்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டிப் பேசுவார்கள்.' பாடல் வருமாறு:

> '''புண்ணிய முதலே, புனைமணி அரைஞா ணொடுபோதும்
> கண்ணிறை கதிரே, கலைவளர் மதியே, கவின்மேவும்
> பண்ணியல் கதியே, பருவம தொருமூ வருடத்தே
> எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற் றனைஎன்பார்."

புண்ணிய - புண்ணியச் செயல்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முதலே - முதல்வராக விளங்குபவரே. முதல்: திணை மயக்கம். புனை - இடுப்பில் அணியும். மணி - சலங்கைகள் கோத்த; ஒருமை பன்மை மயக்கம். அரைஞாணொடு - அரை நாள் வடத்தோடு. போதும் - எழுந்தருளும். கண் - கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். நிறை - நிறைந்த. கதிரே - சூரியனைப் போன்றவரே; உவம ஆகுபெயர். கலை - அறுபத்து நான்கு கலைகள்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளரும். மதியே - சந்திரனைப் போன்றவரே; உவம ஆகுபெயர். கவின் - அழகு. மேவும் - பொருந்தி விளங்கும். பண் - பண்கள்; ஒருமை பன்மை மயக்கம். இயல் கதியே - நடக்கும் நடையைப் போலத் திகழ்பவரே; உவம ஆகுபெயர். பருவமது ஒருமூவருடத்து - இளம் பருவத்தில் ஒரு மூன்று பிராயம் நடக்கும் போதே. அது: பகுதிப் பொருள் விகுதி. ஏ: அசைநிலை. எண்ணிய - நீ எண்ணிய. பொருளாய் - பரம் பொருளாகி. நின்றவர் - நிலைத்து நின்றவராகிய தோணியப்பர். அருள் - வழங்கிய திருவருளை. பெற்றனை - நீ பெற்றாய். என்பார் - என்று சீகாழியில் வாழும் மக்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பாராட்டிப் பேசுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 94-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சீகாழியில் வாழும் மக்கள் என இத்தகைய பல பாராட்டு வார்த்தைகளைச் சொல்லி வேத மந்திரங்களாகிய வார்த்தைகளைக் கூறும் வேதியர்களும், மற்ற மக்களும் நின்று கொண்டு தோத்திரங்களைப் புரிந்து அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவடிகளைத் தங்களுடைய உயரமான தலைகளின் மேல் வைத்துத் தங்கள் கைகளைக் குவித்துக் கும்பிட்டு வரிசையாக நின்ற சமயத்தில் அந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்த திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் தெய்வத் தன்மையைப் பெற்ற சிவஞானத்தை அடைந்த கன்றுக் குட்டியைப் போன்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை முன்னால் சென்று தம்முடைய கைகளில் எடுத்துக் கொண்டு தம்முடைய பின் கழுத்தின் மேல் ஏற்றிக் கொண்டு மகிழ்ச்சியை மிகுதியாக அடைந்து போக.' பாடல் வருமாறு:

"என்றினைய பலகூறி இருக்குமொழி
அந்தணரும் ஏனை யோரும்
நின்றுதுதி செய்தவர்தாள் நீள்முடிக்கண்
மேலேந்தி நிரந்த போது
சென்றணைந்த தாதையார் சிவபாத
இருதயர்தாம் தெய்வ ஞானக்
கன்றினைமுன் புக்கெடுத்துப் பியலின்மேற்
கொண்டுகளி கூர்ந்து செல்ல."

இந்தப் பாடல் குளகம். என்று - அந்தச் சீகாழியில் வாழும் மக்கள் என. இனைய - இத்தகைய. பல - பல பாராட்டு வார்த்தைகளை. கூறி - சொல்லி. இருக்கு மொழி - வேத மந்திரங்களாகிய வார்த்தைகளைக் கூறும். மொழி: ஒருமை பன்மை மயக்கம். அந்தணரும் - வேதியர்களும்;

ஒருமை பன்மை மயக்கம். ஏனையோரும் - மற்ற மக்களும்; ஒருமை பன்மை மயக்கம். நின்று - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு முன்னால் நின்று கொண்டு. துதிசெய்து - தோத்திரங்களைப் புரிந்து. துதி: ஒருமை பன்மை மயக்கம். அவர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். நீள் - தங்களுடைய உயரமான. முடிக்கண்மேல் - தலைகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். ஏந்தி - வைத்துத் தங்களுடைய கைகளைக் குவித்துக் கும்பிட்டு. நிரந்த - வரிசையாக நின்று கொண்டிருந்த. போது - சமயத்தில். சென்று - அந்த இடத்திற்குப் போய். அணைந்த - சேர்ந்த. தாதையார் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய தந்தையாராகிய. சிவபாத இருதயர்தாம் - சிவபாத இருதயர். தாம் : அசை நிலை. தெய்வ - தெய்வத் தன்மையைப் பெற்ற. ஞான - சிவஞானத்தை அடைந்த. க்: சந்தி. கன்றினை - கன்று குட்டியைப் போன்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகுபெயர். முன் - முன்னால். புக்கு - சென்று. எடுத்து - தம்முடைய கைகளில் எடுத்துக் கொண்டு. ப்: சந்தி. பியலின்மேல் - தம்முடைய பிடரியின் மேல். கொண்டு - ஏற்றிக் கொண்டு. களி - ஆனந்தத்தை. கூர்ந்து - மிகுதியாக அடைந்து. செல்ல - போக.

பிறகு வரும் 95-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு சிவபாத இருதயர் தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தம்முடைய பிடரியின் மேல் ஏற்றிக் கொண்டு சென்ற அந்தச் சமயத்தில் பெருமையைப் பெற்று விளங்கும் வேதியர்களினுடைய கூட்டத்தோடு மிகுதியாகக் கூடிய பிரமபுரீசருடைய திருத்தொண்டர்களின் கூட்டம்

தம்முடைய பக்கத்தில் சுற்றிக் கொண்டு தங்களுடைய இடுப்புக்களில் உடுத்திருந்த ஆடைகளோடு, அங்க வஸ்திரங்களை ஒப்பற்ற ஆகாயத்தில் வீசிவிட்டு ஆரவாரம் புரியும் பான்மையினால், மலர்களைப் பரப்பிய அந்தத் திருவீதி சிவானந்தம் என்னும் நீர் நிரம்பிய வெள்ளத்தைக் கொண்ட நதி ஓட அந்த நதியின் மேல் பொங்கி எழும் அழகு மருவிய நுரைகளைக் கொண்ட கொப்புளங்கள் மேல் எழுந்து இறங்குபவற்றைப் போலத் திகழும் பெருமையைப் பெற்று விளங்கும் தோற்றத்தைப் பெற்றதாக.' பாடல் வருமாறு:

"மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத்
தொண்டர்குழாம் மருங்கு சூழ்ந்து
தாம்அறுவை உத்தரியம் தனிவிசும்பில்
எறிந்தார்க்கும் தன்மை யாலே
பூமறுகு சிவானந்தம் பெருக்காறு
போத அதன்மீது பொங்கும்
காமர்நுரைக் குமிழிஎழுந் திழ்வனபோல்
விளங்குபெரும் காட்சித் தாக."

இந்தப் பாடலும் குளகம். மா - இவ்வாறு சிவபாத இருதயர் தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தம்முடைய பிடரியின்மேல் ஏற்றிக் கொண்டு சென்ற அந்தச் சமயத்தில் பெருமையைப் பெற்று விளங்கும். மறையோர் - வேதியர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குழாத்தினுடன் - கூட்டத்தோடு. மல்கு - மிகுதியாகக் கூடிய. திருத்தொண்டர் - பிரமபுரீசருடைய திருத்தொண்டர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குழாம் - கூட்டம். மருங்கு - தம்முடைய பக்கத்தில். சூழ்ந்து - சுற்றிக் கொண்டு. 'தாம்' என்றது அந்தத் தொண்டர்களை. அறுவை - தாங்கள் தங்களுடைய இடுப்புக்களில் உடுத்துக்

கொண்டிருந்த ஆடைகளோடு; ஒருமை பன்மை மயக்கம். உத்தரியம் - அங்கவஸ்திரங்களை. தனி - ஒப்பற்ற. விசும்பில் - ஆகாயத்தில். எறிந்து - வீசிவிட்டு. ஆர்க்கும் - ஆரவாரம் புரியும். தன்மையால் - பான்மையினால். ஏ: அசை நிலை. பூ - மலர்களைப் பரப்பி யிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மறுகு - அந்தத் திருவீதி. சிவானந்த - சிவானந்தம் என்னும் நீர். ப்: சந்தி. பெருக்காறு - வெள்ளத்தைக் கொண்ட நதி. போத - ஓட. அதன் மீது - அந்த நதியின் மேல். பொங்கும் - பொங்கி எழும். காமர் - அழகு மருவிய. நுரை - நுரைகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குமிழி - கொப்புளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எழுந்து - மேலே எழுந்து. இழிவன போல் - இறங்குபவற்றைப் போல. விளங்கு - திகழும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். காட்சித்தாக - தோற்றப் பொலிவைப் பெற்றதாக.

பிறகு வரும் 96-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நெடுங்காலமாகப் புகழோடு விளங்கும் அழகிய கழுமலமாகிய சீகாழியில் வாழும் பூதேவர்களாகிய அந்தணர்களினுடைய மாளிகைகளுக்கு மேல் நெருக்கமாக நின்று கொண்டு அந்த இடத்தில் பக்கத்தில் கூடியிருக்கும் மடப்பத்தைப் பெற்ற பெணிமணிகள் மங்கலகரமான பெருமையைப் பெற்று விளங்கும் வார்த்தைகளால் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு வாழ்த்துக்களைக் கூறி நல்ல வாசனை கமழும் இதழ்கள் மிகுதியாக அமைந்த நறுமணம் கமழும் பலவகையாகிய மலர்களையும் பொற் சுண்ணத்தையும் வெண்மையான நெற்பொரிகளோடும், சிகரங்கள் அமைந்த பெருமையைப் பெற்ற ஒரு மலையின் மேல் மின்னல்களினுடைய கூட்டங்கள் பக்கங்களில் அசைந்து செல்லும் கொள்கையை உடையதாகத்

தூவியபடியே நின்று கொண்டிருப்பார்கள்.' பாடல் வருமாறு:

"நீடுதிருக் கழுமலத்து நிலத்தேவர்
மாளிகைமேல் நெருங்கி அங்கண்
மாடுநிறை மடவார்கள் மங்கலமா
மொழிகளால் வாழ்த்தி வாசத்
தோடுமலி நறுமலரும் சுண்ணமும்வெண்
பொரியினொடும் தூவி நிற்பார்
கோடுபயில் குலவரைமேல் மின்குலங்கள்
புடைபெயரும் கொள்கைத் தாக."

நீடு - நெடுங்காலமாகப் புகழோடு விளங்கும். திரு - அழகிய. 'செல்வர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். க்: சந்தி. கழுமலத்து - கழுமலமாகிய சீகாழியில் வாழும். நிலத்தேவர் - பூசுரர்களாகிய அந்தணர் களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். மாளிகைமேல் - மாளிகைக்களுக்கு மேல்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கி - நெருக்கமாக நின்று கொண்டு. அங்கண் - அந்த இடத்தில். மாடு - பக்கத்தில். நிறை - நிரம்பிக் கூடியிருக்கும். மடவார்கள் - மடப்பத்தைப் பெற்ற பெண் மணிகள். மங்கலமா - பெருமையைப் பெற்று விளங்கும் மங்ககரமான. மொழிகளால் - வார்த்தைகளால். வாழ்த்தி - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு வாழ்த்துக்களைக் கூறி. வாச - நல்ல வாசனை கமழும். த்: சந்தி. தோடு - இதழ்கள்; ஒருமை பன்மை மயக்கம். மலி - மிகுதியாக அமைந்த. நறு - நறுமணம் கமழும். மலரும் - செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், அல்லி மலர், ஆம்பல் மலர், அரளி மலர், மல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், பவள மல்லிகை மலர், சண்பக மலர், மகிழ மலர் முதலிய மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம்.

சுண்ணமும் - பொற் சுண்ணத்தையும். வெண் - வெண்மை யான. பொரியினொடும் - நெற் பொரிகளோடும்; ஒருமை பன்மை மயக்கம். கோடு - சிகரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பயில் - அமைந்த. குல - பெருமையைப் பெற்ற. வரை மேல் - ஒரு மலையின் மேல். மின் - மின்னல்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலங்கள் - கூட்டங்கள். புடை - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். பெயரும் - அசைந்து செல்லும். கொள்கைத்து ஆக - கொள்கையை உடையது ஆக. தூவி - வீசி. நிற்பார் - நின்று கொண்டிருப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பெண்மணிக்கு மின்னல் உவமை: ''மின்னு சுடர்க் கொடி போலும் மேனியினாள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மின்னனையாள் திருமேனி.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''மின்னார் உருவம் மேல் விளங்க.'' என்று கண்டராதித்தரும், ''வானக மின்னுக் கொடிகள் வந்திழிந்தாலென வந்து.'' என்று சேக்கிழாரும், ''மின்னாய்... அன்ன திருவுருவம்.'' (பெரிய திருமடல்) என்று திருமங்கையாழ்வாரும், ''சதகோடி மின் சேவிக்க மின்னர சென்னும் படி நின்றாள்.'', ''அவள் மின்னின் மின்னிய மேனி.'' (மிதிலைக் காட்சிப் படலம், 31, 83), ''பொன்னணி புணர்முலைப் புரிமென் கூந்தலார் மின்னென.'' (எழுச்சிப் படலம், 15), ''மின்னினிழல் அன்னவள் தன் மேனி ஒளிமான.'' (கோலம் காண் படலம், 28), ''மின்னென விளங்கும் மெய்.'', ''மின்னையுற்ற நடுக்கத்து மேனியாள்.'' (நகர் நீங்கும் படலம், 124, 220), ''மின்னிழிவ தன்மை இது விண்ணிழிவ தென்ன.'', ''மின்னொடும் தொடர்ந்து செல்லும் மேகம் போல் மிதிலை வேந்தன், பொன்னொடும் புனிதன் போய்ப் பூம்பொழிற் சாலை புக்கான்.'' (சூர்ப்பணகைப் படலம், 62, 69),

''மின்னிற் நாணி எங்கும் வெளிப்படா தொளிக்கும்.'' (நாடவிட்ட படலம், 65), ''இயக்கர் பாவையர் முன்னின பணி முறை மாற முந்துவார், மின்னினம் மிடைந்தென விசும்பின் மீச் செல்வார்.'', ''மின்னெனத் தரளம் வேய்ந்த வெண்ணிற விமானம் ஊர்ந்து.'' (ஊர்தேடு படலம், 49, 119), ''மின்னை நோக்கிய வீரன் இதியம்விடும் வேலை.'' (மீட்சிப் படலம், 1831) என்று கம்பரும் பாடியருளிய வற்றையும், ''மின்னனையாள் சால வெருவி.'' (திக்கு விசயப்படலம், 167), ''மின்னொடும் கூடி மேதினி படிந்து விளங்குகார் மேகமா மென்னச் செந்நிற மேனிச் சீதையைத் தனது செம்மலர்த் திருக்கையால் அணைத்து.'' (சீதைவனம் புகு படலம், 23) என்று உத்தரகாண்டத்தில் வருவன வற்றையும், ''மின் போலவர் அவரே.'' (தக்கயாகப்பரணி, 84) என்று ஒட்டக்கூத்தரும், ''கொண்டலின் மின்னுக்குழாம் போன்றும்'' (விக்கிரம சோழன் உலா, 95) என்று அதே புலவரும், ''பொலங்கொடி மின்னிற் புயலைங் கூந்தல்.'' (சிலப்பதிகாரம், 11:109) என்று இளங்கோவடிகளும், ''பெயலிடைப் பிறழும் மின்னேர் சாயலர்.'', ''மன்னவன் மார்பில் மின்னென ஒடுங்கி.'', ''வெண்முகிற் பிறழும் மின்னென நுடங்கி.'', ''மின்னுறழ் சாயற் பொன்னுறழ் சுணங்கின்.'', ''மின்னேர் சாயலை மேயநம் பெருமகற்கு.'' (பெருங்கதை) என்று கொங்குவேளிரும், ''மின்னொழுகு சாயல் மிகு பூப்பதுமை.'', ''மின்னுக் கொடிப்பல நுடங்கி யாங்குத் தோழியர் குழாத்துள் நிற்ப.'', ''மின்னுமிழ்ந்துலா மேனி.'' (சீவகசிந்தாமணி, 44, 526, 2449) என்று திருத்தக்க தேவரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 97-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சீகாழி மாநகரத்தில் வாழும் மக்கள் மங்கல வாத்தியங்களை வாசிப்பார்கள்; சாமவேதத்தைக் கானம் புரிவார்கள்; வீதிகளில் உள்ள தங்களுடைய திருமாளிகைகளில் இருக்கும் திண்ணைகளினுடைய பக்கங்களில் ஒளி பொங்கி எழும் மாணிக்கத்தைப் பதித்திருக்கும் திருவிளக்குக்களை ஏற்றி வைத்துப் பூரண கும்பங்களையும் வரிசை வரிசையாக வைப்பார்கள்; திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வாழ்த்துவர்ர்கள்; அந்தச் சீகாழியில் அந்த மக்களுடைய திருவுள்ளங்களில் பொங்கி வியப்புணர்ச்சியும், பெருமையைப் பெற்று விளங்கும் விருப்பமும், பக்தியும் பொங்கி எழத் தாங்கள் தங்கி வாழும் அழகு மிகுதியாக அமைந்த தெருக்களைப் பெற்ற சண்பை நகரமாகிய சீகாழி என்னும் பெரிய சிவத்தலத்தை வலமாக வந்து அடையும் சமயத்தில்.' பாடல் வருமாறு:

"மங்கலதூ ரியம்துவைப்பார்; மறைச்சாமம்
பாடுவார்; மருங்கு வேதிப்
பொங்குமணி விளக்கெடுத்துப் பூரணகும்
பமும்நிரைப்பார்; போற்றி செய்வார்;
அங்கவர்கள் மனத்தெழுந்த அதிசயமும்
பெருவிருப்பும் அன்பும் பொஙக்த்
தங்குதிரு மலிவீதிச் சண்பைநகர்
வலம் செய்துசாரும் காலை."

இந்தப் பாடல் குளகம். மங்கலதூரியம் - அந்தச் சீகாழி மாநகரத்தில் வாழும் மக்கள் மங்கல வாத்தியங் களை; ஒருமை பன்மை மயக்கம். துவைப்பார் - வாசிப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மறைச்சாமம் - சாமவேதத்தை. பாடுவார் - அந்ததணர்கள் கானம் செய்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மருங்குவேதி - திருவீதிகளில் உள்ள

தங்களுடைய திருமாளிகைகளில் இருக்கும் திண்ணை களினுடைய பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பொங்கு - ஒளி பொங்கு எழும். மணி - மாணிக்கத்தைப் பதித்திருக்கும். விளக்கு - திரு விளக்குகளை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து - ஏற்றி வைத்து. ப்: சந்தி. பூரண கும்பமும் - பூரண கும்பங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். நிரைப்பார் - வரிசையாக வைப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். பூரண கும்பம் - தூய நீரை நிரப்பிய கு'டம். போற்றி செய்வார் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வாழ்த்துவார்கள் ; ஒருமை பன்மை மயக்கம். அங்கு - அந்தச் சீகாழியில். அவர்கள் - அந்த மக்கள். மனத்து - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். எழுந்த - எழுந்து தோன்றிய. அதிசயமும் - வியப்புணர்ச்சியும். பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். விருப்பும் - விருப்பமும். அன்பும் - பக்தியும். பொங்க - பொங்கி எழ. த்: சந்தி. தங்கு - தாங்கள் தங்கிக் கொண்டு வாழும். திரு - அழகு; 'செல்வர்கள்' எனலும் ஆம்; திணை மயக்கம். மலி - மிகுதியாக அமைந்த. வீதி - திருவீதிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சண்பை - சண்பையாகிய சீகாழி என்னும். நகர் - பெரிய சிவத்தலத்தை. வலம் செய்து - வலமாக வந்து. சாரும் - தங்களுடைய திருமாளிகைகளை அடையும். காலை - சமயத்தில்.

பிறகு உள்ள 98-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் விளங்கும் அழகைப் பெற்ற தங்கத்தைப் பதித்திருக்கும் தோணியின் மேல் வீற்றிருந்த தலைவனாகிய தோணியப்பனோடு வீற்றிருந்த அவனுடைய தர்ம பத்தினியாராக விளங்கும் பசுமையான தங்கத்தால் செய்த

கை வளைகளை அணிந்து கொண்டிருக்கும் பெரிய நாயகியாரும் தம்முடைய அழகிய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கியருளிய பாலினுடைய மணம் போகாத இனிய வார்த்தைகளை அருளிச் செய்யும் பவளங்களைப் போன்ற அதரங்களைப் பெற்ற திருவாயை உடையவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமாளிகையில் எழுந்தருளி நுழையும் சமயத்தில், சங்கவாத்தியங்களினுடைய இனிய ஒலியும், ஆகாய துந்துபிகள் முதலாக உள்ள அளவு இல்லாத பெருகி எழும் இனிய ஓசை தழைத்து விளங்குமாறு தம்முடைய திருமாளிகையை அடைந்து அதற்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"தம்திருமா ளிகையின்கண் எழுந்தருளிப்
புகும்பொழுது சங்க நாதம்
அந்தரதுந் துபிமுதலா அளவில்பெரு
கொலிதழைப்ப அணைந்து புக்கார்
சுந்தரப்பொற் றோணிமிசை இருந்தபிரா
னுடன்அமர்ந்த துணைவி யாகும்
பைந்தொடியாள் திருமுலையின் பாலறா
மதுரமொழிப் பவள வாயார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. சுந்தர - சீகாழியில் உள்ள பிரமபுரீச ருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் அழகைப் பெற்ற. ப்: சந்தி. பொன் - தங்கத்தைப் பதித்திருக்கும். தோணிமிசை - தோணியின் மேல். இருந்த - வீற்றிருந்தருளிய. பிரானுடன் - தலைவனாகிய தோணியப்பனோடு. அமர்ந்த - எழுந்தருளியிருந்த. துணைவி - அவனுடைய தர்ம பத்தினி. ஆகும் - ஆக

விளங்கும். பைம் - பசுமையாகிய தங்கத்தால் செய்திருக்கும். தொடியாள் - கைவளைகளை அணிந்தவளாகிய பெரிய நாயகி. தொடி: ஒருமை பன்மை மயக்கம். திரு - அழகிய. முலையின் - கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கியருளிய. முலை: ஒருமை பன்மை மயக்கம். பால் - பாலின் மணம். அறா - போகாத. மதுர - இனிமையான. மொழி - வார்த்தைகளை அருளிச் செய்யும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பவள - பவளங்களைப் போன்ற அதரங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம்; உவம ஆகு பெயர். வாயார் - திருவாயை உடையவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தம் - தம்முடைய. திருமாளிகையின் கண் - திருமாளிகையில். எழுந்தருளி - எழுந்தருளிச் சென்று. ப்: சந்தி. புகும் - நுழையும். பொழுது - சமயத்தில். சங்க - சங்க வாத்தியங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதம் - இனிய ஒலியும். அந்தர - ஆகாய. துந்துபி - துந்துபிகள்; ஒருமை பன்மை மயக்கம். முதலா - முதலாக உள்ள. அளவு இல் - அளவு இல்லாத; கடைக்குறை. பெருகு - பெருகி எழும். ஒலி - இனிய ஓசை. தழைப்ப - தழைத்து விளங்குமாறு. அணைந்து - தம்முடைய திருமாளிகையை அடைந்து. புக்கார் - அதற்குள் நுழைந்தார்.

அடுத்து உள்ள 99-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய பரிசுத்தமாக உள்ள மாணிக்கங்களைப் பதித்திருக்கும் திருமாளிகையில் வீற்றிருந்தருளி அன்றைக்கு இரவு நேரத்தில் பழமையாக உள்ள இனிய ஓசையைப் பெற்ற பெருமையைப் பெற்று விளங்கும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் ஒன்றாகச் சேர்ந்து கானம் செய்யும்

பெருமையைப் பெற்றுத் திகழும் அழகிய தோணியில் நிலை பெற்று அமர்ந்திருந்தவராகிய தோணியப்பருடைய அழகு மருவிய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளைத் தம்முடைய திருவுள்ளத்தில் அமைய இடைவிடாத விருப்பத்தை மேற்கொண்டு புகழைப் பெற்ற நீளமான கிரணங்களை வீசும் சூரியன் கீழ்வானத்தில் உதயமாக அந்த நேரத்தில் அந்த நாயனார் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில் நிலைபெற்று வீற்றிருக்கும் நம்பராகிய தோணியப்பருடைய திருக்கோயிலை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"தூமணிமா ளிகையின்கண் அமர்ந்தருளி
அன்றிரவு தொல்லை நாத
மாமறைகள் திரண்டபெரும் திருத்தோணி
மன்னிவீற் றிருந்தார் செய்ய
காமருசே வடிக்கமலம் கருத்திலுற
இடையறாக் காதல் கொண்டு
நாமநெடும் கதிருதிப்ப நண்ணினார்
திருத்தோணி நம்பர் கோயில்."

தூ - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சீகாழியில் விளங்கும் தம்முடைய பரிசுத்தமாக உள்ள. மணி - மாணிக்கங்களைப் பதித்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மாளிகையின் கண் - திருமாளிகையில். அமர்ந்தருளி - வீற்றிருந்தருளி. அன்று - அன்றைக்கு. இரவு - இரவு நேரத்தில். தொல்லை - பழமையாக உள்ள. நாத - இனிய கானத்தை எழுப்பும். மா - பெருமையைப் பெற்று விளங்கும். மறைகள் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும். திரண்ட - ஒன்றாகச் சேர்ந்து கானம் செய்யும். பெரும் -

பெருமையைப் பெற்றுத் திகழும். திரு - அழகிய. த்: சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரம புரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில். மன்னி - நிலை பெற்று. வீற்றிருந்தார் - அமர்ந்தவராகிய தோணியப்பருடைய. செய்ய - சிவப்பாக உள்ள. காமரு - அழகு மருவிய. சேவடிக் கமலம் - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை. அடி: ஒருமை பன்மை மயக்கம். கமலம்: ஒருமை பன்மை மயக்கம். கருத்தில் - தம்முடைய திருவுள்ளத்தில். உற - அமைய. இடையறா - இடை விடாத. க்: சந்தி. காதல் - விருப்பத்தை. கொண்டு - மேற் கொண்டு. நாம - புகழைப் பெற்ற. நெடும் - நீளமான கிரணங் களை வீசும். கதிர் - சூரியன். உதிப்ப - கீழ்வானத்தில் உதயமாக. திரு - அழகிய. த்: சந்தி. தோணி - தோணியில் அமர்ந்திருக்கும். நம்பர் - தம்முடைய அடியவர்களுக்குப் பலவகையான நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய தோணியப்பருடைய. கோயில் - திருக்கோயிலை. நண்ணினார் - அந்த நாயனார் அடைந்தார்.

பிறகு வரும் 100-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவ்வாறு விருப்பத்தோடு தோணியப்பருடைய ஆலயத்தை அடைந்து அழகிய கழுமலமாகிய சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் தோணியில் சேர்ந்து அமர்ந்திருந்த தங்களுடைய தந்தையாரைப் போன்ற வராகிய தோணியப்பரையும், திருக்கோயிலுக்கு வெளியில் எழுந்தருளி தாங்குவதற்கு அருமையாக உள்ள உண்மையான சிவஞானத்தைத் தம்மிடம் எழுந்தருளி வந்து ஞானமாக விளங்கும் தம்முடைய கொங்கைகளி லிருந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்துப் பாலைக் கறந்து

வழங்கியருளிய தம்முடைய புண்ணியச் செயல்களின் பயனாக விளங்கும் அன்னையைப் போன்றவராகிய பெரியநாயகியாரையும் முன்னால் அந்த நாயனார் பணிந்து வாழ்த்தி விட்டு மேன்மையையும் தகுதியையும் பெற்ற அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளைப் பெற்றுக் கொண்டு திருக்கோலக்காவுக்கு எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சத்தபுரீசரை வணங்குவதற்காக விருப்பத்தோடு அந்த நாயனார் அந்தத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"காதலுடன் அணைந்துதிருக் கழுமலத்துக்
கலந்துவீற் றிருந்த தங்கள்
தாதையா ரையும்வெளியே தாங்கரிய
மெய்ஞ்ஞானம் தம்பால் வந்து
போதமுலை சுரந்தளித்த புணியத்தா
யாரையும்முன் வணங்கிப் போற்றி
மேதகைய அருள்பெற்றுத் திருக்கோலக்
காஇறைஞ்ச விருப்பிற் சென்றார்."

காதலுடன் - அந்தத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அவ்வாறு விருப்பத்தோடு. அணைந்து - தோணியப்பருடைய ஆலயத்தை அடைந்து. திரு - அழகிய; 'செல்வர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். க்: சந்தி. கழுமலத்து - கழுமலமாகிய சீகாழியில். க்: சந்தி. கலந்து - சேர்ந்து. வீற்றிருந்த - அமர்ந்திருந்த. தங்கள் - தங்களுடைய; என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நயானார் தம்மையும் வேறு திருத்தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. தாதையாரையும் - தந்தையாரைப் போன்றவராகிய தோணியப்பரையும்; உவம ஆகுபெயர். வெளி - திருக்கோயிலுக்கு வெளியில். ஏ: அசைநிலை. தாங்கரிய - தம்முடைய திருவுள்ளத்தில் தாங்குவதற்கு அருமையாக

உள்ள. மெய் - உண்மையான. ஞ்: சந்தி. ஞானம் - சிவஞானத்தை. தம்பால் - தம்மிடம்; என்றது 'திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம்' என்பதை. வந்து - எழுந்தருளி வந்து. போத - ஞானமாக விளங்கும். முலை - தம்முடைய கொங்கைகளிலிருந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்துப் பாலை; ஒருமை பன்மை மயக்கம். சுரந்து - கறந்து. அளித்த - வழங்கியருளிய. புண்ணிய - தம்முடைய புண்ணியச் செயல்களின் பயனாக விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாயாரையும் - அன்னையாரைப் போன்றவராகிய பெரிய நாயகியாரையும்; உவம ஆகுபெயர். முன் - அவர்களுடைய சந்நிதிகளில்; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி - அந்த இருவரையும் பணிந்து. ப்: சந்தி. போற்றி - வாழ்த்தி விட்டு. மேதகைய - மேன்மையையும் தகுதியையும் பெற்ற. அருள் - அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளை. பெற்று - பெற்றுக் கொண்டு. த்: சந்தி. திருக்கோலக்கா - திருக்கோலக்காவுக்கு எழுந்தருளி. இறைஞ்ச - அந்தச் சிவத்தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சத்தபுரீசரை வணங்குவதற்காக. விருப்பில் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். சென்றார் - அந்த நாயனார் அந்தத் திருக்கோலக்காவிற்கு எழுந்தருளி னார்.

திருக்கோலக்கா: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் சத்தபுரீசர். அம்பிகை ஓசை கொடுத்த நாயகி. இந்தத் தலம் இந்தக் காலத்தில் திருத்தாளமுடையார் கோயில் என வழங்கும். இது சீகாழிக்குத் தெற்குத் திசையில் அரை மைல் தூரத்தில் உள்ளது. சீகாழிக்கும் திருக்கோலக்காவுக்கும் இடையில் கழுமல வாய்க்கால் என்ற கால்வாய் ஓடுகிறது. இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பொற்றாளத்தைப் பெற்ற தலம்.

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மடையில் வாளை பாய மாதரர்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சும்கிளி
உடையும் கொண்ட உருவம் என்கொலோ."

சுந்தர மூர்த்தி நாயனார் தக்கேசிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரத்தில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இந்தத் தலத்தில் பொற்றாளத்தைப் பெற்ற செய்தியைப் புலப்படுத்தும் பாசுரம் வருமாறு:

"நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை எண்கணம் இறைஞ்சும்
கோளிலிப் பெரும் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே."

பிறகு வரும் 101-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நீர் வெள்ளம் பேராரவாரம் செய்து அலைகள் விளங்கும் காவிரியாற்றில் ஓடும் புனல் தேன் நிரம்பிய பல வகையாக உள்ள மலர்களையும், முத்துக்களையும் கரையில் எடுத்து வீச கோடுகளைப் பெற்ற அழகைக் கொண்ட வண்டுகள் அலைந்து திரிய, விருப்பம் மருவிய பெண்கள் முழுகித் துளையும் பளிங்கைப் போன்ற புனல் நிரம்பியிருக்கும்

வாவியைப் பெற்ற திருக்கோலக்காவுக்கு அந்த நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தை அடைந்து தேவர்களி னுடைய தலைவனாகிய சத்தபுரீசன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை அந்த நாயனார் வலமாக வந்து அந்தச் சத்தபுரீசருடைய சந்நிதியில் நின்று கொண்டு, இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் ஓலமிட்டும் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள அந்தச் சத்தபுரீசருடைய திருவடிகளைத் துதிப்பதற்காக ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளுவதற்குத் தொடங்கிக் கொள்வாரானார்.' பாடல் வருமாறு:

"பெருக்கோலிட் டலைபிறங்கும் காவிரிநீர்
பிரசமலர் தரளம் சிந்த
வரிக்கோல வண்டாட மாதரார்
குடைந்தாடும் மணிநீர் வாவித்
திருக்கோலக் காஎய்தித் தேவர்பிரான்
கோயில்வலம் செய்து முன்னின்
றிருக்கோலிட் டறிவரிய திருப்பாதம்
ஏத்துவதற் கெடுத்துக் கொள்வார்."

பெருக்கு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நீர் வெள்ளம். ஒலிட்டு - பேராரவாரத்தைச் செய்து கொண்டு. அலை - அலைகள்; ஒருமை பன்மை மயக்கம். பிறங்கும் - விளங்கும். காவிரி - காவிரியாற்றில் ஓடும். நீர் - புனல். பிரசம் - தேன் நிரம்பிய. மலர் - பலவகையாக உள்ள மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். தரளம் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். சிந்த - தன்னுடைய கரையில் எடுத்து வீச. வரி - கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கோல - அழகைக் கொண்ட. வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை

மயக்கம். ஆட - அலைந்து திரிய. மாதரார் - விருப்பம் மருவிய பெண்மணிகள். குடைந்து - முழுகி. ஆடும் - துளையும். மணி - பளிங்கைப் போன்ற; உவம ஆகுபெயர். நீர் - புனல் நிரம்பியிருக்கும் வாவி - வாவியைப் பெற்ற. த்: சந்தி. திருக்கோலக்கா எய்தி - திருக் கோலக்காவிற்கு அந்த நாயனார் எழுந்தருளி அடைந்து. த்: சந்தி. தேவர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவனாகிய சத்தபுரீசன். கோயில் - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை. வலம்செய்து - வலமாக வந்து. முன் - அந்தச் சத்தபுரீசருடைய சந்நிதியில். நின்று - நின்றுகொண்டு. இருக்கு - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஓலிட்டு - ஓலமிட்டும். அறிவரிய - தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. திருப்பாதம் - அந்தச் சத்தபுரீசருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். ஏத்துவதற்கு - துதிப்பதற்காக. எடுத்து - ஒரு திருப்பதிகத்தைத் தாம் பாடியருளுவதற்குத் தொடங்கி. க்: சந்தி. கொள்வார் - கொள்வாரானார்.

இருக்கோலிட்டு அறிவரியார்: ''வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே.'', ''மறையிலீறு முன் தொடரொணாத நீ.'', ''நான் மறையும் மாவேறு சோதியும் வான வரும் தாமறியா சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும் கண்டாரும் இல்லை.'' (திருவாசகம்) என்று மாணிக்கவாசகரும், ''மறைகளும் அமரர் கூட்டமும் மாட்டா தயன் திரு மாலொடு மயங்கி, முறை முறை முறையிட்டோர் வரியாயை.'' என்று திருமாளிகைத் தேவரும், ''மாமறைகள் எவையும்மானவர்கள் ஈட்டமும் தாட்டிருக் கமலத் தருமாலவனும் அறிவரும் பெருமை.'' என்று கருவூர்த் தேவரும், ''ஆரணம் தொடராப் பூரண

புராண.'', ''சுருதியும் தொடராச்சுருதி நாயக.'', ''சுருதியும் இருவரும் தொடர்ந்து நின்ற லமர, மருதிடம் கொண்ட மருத மாணிக்க.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''அருமறை முறையிட்டடின்னும் அறிவதற் கரியான்.'', ''இருக்கோலமிடும் பெருமான்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 102-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'உண்மை நிரம்பி உள்ள செம்மையாகிய பரம் பொருளாக விளங்குபவரும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய மேலான அர்த்தமாகத் திகழ்பவரும், தம்முடைய தலையில் உள்ள சடாபாரத்தின் மேல் படங்கள் நிரம்பிய பாம்புகளோடு பசுமையான குழந்தைப் பிறைச்சந்திரனைத் தாங்கியருளுபவனும், மையைப் போன்ற கரியநிறம் அமைந்த திருக்கழுத்தைப் பெற்றவனாகிய சத்தபுரீசனை, ''மடையில் வாளை பாய'' என்று தொடங்கும் திருப்பதிகத்தைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவாக்கினால் தம்முடைய கைகளில் நிரம்பிய தாளத்தை வரையறையாகத் தட்டிக் கலைகளினுடைய தன்மை அமைந்த ஒரு திருப்பதிகத்தை கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களுடைய அரசராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளும் சமயத்தில்.' பாடல் வருமாறு:

"மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின்
விழுப்பொருளை வேணி மீது
பைந்நிறைந்த அரவுடனே பசுங்குழவித்
திங்கள்பரித் தருளு வானை
மைந்நிறைந்த மிடற்றானை 'மடையில்வா
ளைகள்பாய' என்னும் வாக்கால்

கைந்நிறைந்த ஒத்தறுத்துக் கலைப்பதிகம்
கவுணியர்கோன் பாடும் காலை.''

இந்தப் பாடல் குளகம். மெய் - உண்மை. ந்: சந்தி. நிறைந்த - நிரம்பி உள்ள. செம்பொருளாம் - செம்மையாகிய பொருளாக விளங்கி வரும். வேதத்தின் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். விழு - மேலான. ப்: சந்தி. பொருளை - அர்த்தமாகத் திகழ்பவரும்; வினையாலணையும் பெயர். வேணி மீது - தம்முடைய தலையில் உள்ள சடாபாரத்தின்மேல் பை - படங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ந்: சந்தி. நிறைந்த - நிரம்பிய. அரவுடன் - பாம்புகளோடு; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை. பசும் - இளம் பருவத்தைப் பெற்ற. குழவித் திங்கள் - பிறைச் சந்திரனாகிய குழந்தையை; உருவகம். பரித்தருளுவானை - தாங்கியருளுபவனும்; வினையாலணையும் பெயர். மை - மையைப் போன்ற கரிய நிறம்; உவம ஆகுபெயர். ந்: சந்தி. நிறைந்த - நிரம்பி அமைந்த. மிடற்றானை - திருக்கழுத்தைப் பெற்றவராகிய சத்தபுரீசனை. 'மடையில் வாளைகள் பாய' என்னும் - 'மடையில் வாளைகள் பாய' என்று தொடங்கும் திருப்பதிகத்தைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வாக்கால் - தம்முடைய திருவாக்கினால். கை - தம்முடைய கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். ந்: சந்தி. நிறைந்த - ஓசை நிரம்பியுள்ள. ஒத்து - தாளத்தை. அறுத்து - வரையறையாகத் தட்டி.க்: சந்தி. கலை - கலைகளினுடைய தன்மை அமைந்த; ஒருமை பன்மை மயக்கம். அந்தக் கலைகள் அறுபத்து நான்கு. ''ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்'' என வருதல் காண்க. அவை இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ப்: சந்தி. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை.

கவுணியர் - சீகாழியில் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். கோன் - அரசராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பாடும் - பாடியருளும். காலை - சமயத்தில்.

*பின்பு உள்ள 103-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய கைகளால் வரையறையாகத் தாளத்தைதத் தட்டிக் கொண்டு சத்தபுரீசரைப் பாடியருளியவுடன், அதனைப் பார்த்தருளித் தம்முடைய கருணையை மிகுதி யாக வழங்கியருளிய சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற மகாதேவராகிய சத்தபுரீசருக்கு உரிய ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்களும் அடங்கிய பஞ்சாட்சரத்தை வரைந்திருக்கும் நல்ல சிவந்த தங்கத்தால் செய்யப் பெற்ற ஒரு தாளம் ஐயராகிய அந்தச் சத்தபுரீசர் வழங்கிய திருவருளால் அந்த நாயனார் பாடத் தொடங்கிய பாசுரத்தோடு பொருந்திய அளவோடு தட்ட இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள் எல்லோரும் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும் வேதியச் சிறுவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருக்கை களாகிய இடத்தில் வந்து சேர்ந்தது.' பாடல் வருமாறு:

"கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலும்
கண்டருளிக் கருணை கூர்ந்த
செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும்
எழுதியநற் செம்பொற் றாளம்
ஐயரவர் திருவருளால் எடுத்தபா
டலுக்கிசைந்த அளவால் ஒத்த
வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர்
கைத்தலத்து வந்த தன்றே."

கையதனால் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய கைகளால்; ஒருமை பன்மை மயக்கம். அது: பகுதிப் பொருள் விகுதி. ஒத்து - தாளத்தை. அறுத்து - வரையறை செய்து தட்டிக் கொண்டு. ப்: சந்தி. பாடுதலும் - சத்தபுரீசரைப் பாடியருளியவுடன். கண்டருளி - அதனைப் பார்த்தருளி. க்: சந்தி. கருணை - தம்முடைய கருணையை. கூர்ந்த - மிகுதியாக வழங்கியருளிய. செய்ய - சிவந்த. சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற. வானவர்தம் - மகாதேவராகிய சத்தபுரீசருக்கு உரிய. தம்: அசைநிலை. அஞ்சு - ஐந்து. எழுத்தும் - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்களும் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். எழுதிய - வரைந்துள்ள. நல் - நல்ல. செம் - சிவப்பாக இருக்கும். பொன் - தங்கத்தால் செய்யப் பெற்ற. தாளம் - ஒரு தாளம். ஐயர் - ஐயராகிய. ஐயர் - தகப்பனாரைப் போன்றவர்; தலைவர், அழகைப் பெற்றவர். அவர் - அந்தச் சத்தபுரீசர். திருவருளால் - வழங்கிய திருவளினால். எடுத்த - அந்த நாயனார் பாடத் தொடங்கிய. பாடலுக்கு - பாசுரத்தோடு; உருபு மயக்கம். இசைந்த - பொருந்திய. அளவால் - அளவோடு; உருபு மயக்கம். ஒத்த - தட்ட. வையம் - இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். வரு - சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும். மறைச் சிறுவர் - வேதியச் சிறுவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. மறை: திணை மயக்கம். கைத் தலத்து - திருக்கரங்களாகிய இடத்தில்; ஒருமை பன்மை மயக்கம். வந்தது - வந்து சேர்ந்தது. அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

பின்பு உள்ள 104-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சீகாழியில் திருவவதாரம் செய்தருளிவரும் பெருமையையும் தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருக்கரங்களில் வந்து சேர்ந்த அழகிய பொற்றாளமாகிய இசைக் கருவியைப் பார்த்து அந்தத் தாளத்தை அந்த நாயனார் தம்முடைய அழகிய தலையின் மேல் வைத்துக் கொண்டருளித் தம்முடைய திருவுள்ளம் மகிழ்ச்சியடையத் தம்முடைய இனிமையாகிய வார்த்தைகளை அருளிச் செய்யும் திருவாயில், ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்கள் அமைந்த சங்கீதமும் தழைப்பை அடைந்து ஓங்கி நிற்க இனிய பண் அமைந்த சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பம் அமைந்திருக்கும் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்தச் சத்தபுரீசரை அடையுமாறு பாடியருளித் தொங்கும் மாணிக்கங்களால் செய்யப் பெற்ற குழைகளைத் தம்முடைய செவிகளில் அணிந்தவராகிய சத்தபுரீசருடைய சந்நிதியில் நின்று கொண்டு அந்தத் திருப்பதிகத்திற்குத் தக்க அழகிய இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடி அந்தப் பாசுரத்தைச் சத்தபுரீசருக்கு அணிந்து விட்டு அந்த நாயனார் அந்தத் திருக்கோயிலில் நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"காழிவரும் பெருந்தகையார் கையில்வரும்
திருத்தாளக் கருவி கண்டு
வாழியதம் திருமுடிமேற் கொண்டருளி
மனம்களிப்ப மதுர வாயில்
ஏழிசையும் தழைத்தோங்க இன்னிசைவண்
டமிழ்ப்பதிகம் எய்தப் பாடித்
தாழுமணிக் குழையார்முன் தக்கதிருக்
கடைக்காப்புச் சாத்தி நின்றார்."

காழி - சீகாழியில். வரும் - திருவவதாரம் செய்தருளி வரும். பெரும் - பெருமையையும். தகையார் - தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. கையில் - திருக்கரங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வரும் - வந்து சேர்ந்திருக்கும். திரு - அழகிய. த்: சந்தி. தாள - தங்கத் தாளமாகிய. க்: சந்தி. கருவி - இசைக் கருவியை. கண்டு - பார்த்து. வாழிய: அசைநிலை. தம் - தம்முடைய. திரு - அழகிய. முடிமேல் - தலையின் மேல். கொண்டருளி - வைத்துக் கொண்டருளி. மனம் - தம்முடைய திருவுள்ளம். களிப்ப - மகிழ்ச்சியை அடைய. மதுர - இனிமையாக உள்ள வார்த்தைகளை அருளிச் செய்யும்; ஆகுபெயர். வாயில் - தம்முடைய திருவாயில். ஏழிசையும் - ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்கள் அமைந்த சங்கீதமும். இசை: ஒருமை பன்மை மயக்கம். தழைத்து - தழைப்பை அடைந்து. ஓங்க - ஓங்கி நிற்க. இன்னிசை - இனிய பண் அமைந்த. வண் - சொற் சுவை, பொருட்சுவை என்னும் வளப்பம். தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ப்: சந்தி. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. எய்த - அந்தச் சத்தபுரீசரை அடையுமாறு. ப்: சந்தி. பாடி - பாடியருளி. த்: சந்தி. தாழும் - தொங்கும். மணி - மாணிக்கங்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குழையார் - குழைகளைத் தம்முடைய செவிகளில் அணிந்தவராகிய சத்தபுரீசருடைய. குழை: ஒருமை பன்மை மயக்கம். முன் - சந்நிதியில் நின்று கொண்டு. தக்க - அந்தத் திருப்பதிகத்திற்கு ஏற்றபடி உள்ள. திருக்கடைக் காப்பு - அழகிய இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளி. ச்: சந்தி. சாத்தி - சத்தபுரீசருக்கு அணிந்து விட்டு. நின்றார் - அந்த நாயனார் அந்தத் திருக்கோயிலில் நின்று கொண்டிருந்தார்.

அந்த இறுதிப் பாசுரம் தக்கராகப் பண் அமைந்தது. அது வருமாறு:

"நலம்கொள் காழி ஞானம்சம் பந்தன்
குலம்கொள் கோலக் காவு ளானையே
வலம்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலம்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே."

அடுத்து வரும் 105-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தேவலோகத்தில் வாழும் தேவர்கள் வியப்பை அடையுமாறு ஓங்கி எழுந்த இனிய ஓசையினுடைய அளவின் உண்மையைப் பார்த்துத் தும்புரு, நாரத முனிவர் முதலாக இருக்கும் சுருதியோடு பொருந்துமாறு பாடும் சங்கிதத் துறையில் வல்லவர்களாக இருப்பவர்கள் சத்தபுரீசரைத் தோத்திரங்களைக் கூறித் துதித்துவிட்டு, தரையின்மேல் நறுமணம் கமழும் கற்பக மரத்திலிருந்து தாங்கள் கொய்து கொண்டு வந்த மலர்களை பெருமையைப் பெற்று விளங்கும் மாரியைப் போலச் சொரிந்தார்கள்; இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் நல்ல வாழ்வைப் பெறும் வண்ணம் சீகாழியில் திருவவதாரம் செய்தருளும் ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் தம்முடைய தலைவனாகிய பிரமபுரீசன் வழங்கிய திருவருளை வாழ்த்திவிட்டுத் திருக்கோலக்காவிலிருந்து புறப்பட்டுத் திரும்பி வந்தருளிச் சண்பை நகரமாகிய சீகாழி மாநகரத்திற்குப் போய்ச் சேருமாறு எழுந்தருள்பவரானார்.' பாடல் வருமாறு:

"உம்பருல கதிசயிப்ப ஓங்கியநா
தத்தளவின் உண்மை நோக்கித்
தும்புருநா ரதர்முதலாம் சுருதிஇசைத்
துறையுள்ளோர் துதித்து மண்மேல்

வம்பலர்மா மழைபொழிந்தார்; மறைவாழ
வந்தருளும் மதலை யாரும்
தம்பெருமான் அருள்போற்றி மீண்டருளிச்
சண்பைநகர் சாரச் செல்வார்.''

உம்பர் உலகு - தேவலோகத்தில் வாழும் தேவர்கள்; இட ஆகுபெயர். அதிசயிப்ப - வியப்பை அடையுமாறு. ஓங்கிய - ஓங்கி எழுந்த. நாதத்து - இனிய ஓசையினுடைய. அளவின் - அளவினுடைய. உண்மை - உண்மையை. நோக்கி - பார்த்து த்: சந்தி. தும்புரு - தும்புருவும். நாரதர் - நாரத முனிவரும். முதல்ஆம் - முதலாக இருக்கும். சுருதி - சுருதியோடு பொருந்துமாறு. 'வேதங்களினுடைய' எனலும் ஆம்: ஒருமை பன்மை மயக்கம். இசை - பாடும் சங்கீதம். த்: சந்தி. துறை - என்னும் துறையில். உள்ளோர் - வல்லவர்களாக இருப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். துதித்து - தோத்திரங்களைக் கூறிச் சத்தபுரீசரைத் துதித்து விட்டு. மண்மேல் - தரையின் மேல். வம்பு - நறுமணம். அலர் - விரியும்; கமழும். மா - பெருமையையும் பெற்று விளங்கும். மழை - கற்பக மரத்திலிருந்து தாங்கள் கொய்து கொண்டு வந்த மலர்களை மாரியைப் போல; உவம ஆகுபெயர். பொழிந்தார் - சொரிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். வாழ - நல்ல வாழ்வைப் பெறுமாறு. வந்தருளும் - சீகாழியில் திருவவதாரம் செய்து வந்தருளும். மதலையாரும் - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும். தம் - தம்முடைய. பெருமான் - தலைவனாகிய பிரமபுரீசன். அருள் - வழங்கிய திருவருளை. போற்றி - வாழ்த்திவிட்டு. மீண்டருளி - திருக்கோலக்காவிலிருந்து புறப்பட்டுத் திரும்பி வந்தருளி. ச்:

சந்தி. சண்பைநகர் - சண்பை நகரமாகிய சீகாழி என்னும் பெரிய சிவத்தலத்திற்கு. சார - போய்ச் சேருமாறு. ச்: சந்தி. செல்வார் - எழுந்தருள்பவரானார்.

பிறகு வரும் 106-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போன்ற கைகளில் அழகிய பொற்றாளத்தோடு நடந்து எழுந்தருளும் சமயத்தில் தங்களுடைய குடும்பத்தில் உள்ள தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய கால்களால் நடந்து போவதைச் சகிக்காமல் தம்முடைய தோள்களின் மேல் எடுத்துச் சுமந்து கொண்டு செல்ல அந்த இடத்தில் அந்தச் சிவபாத இருதயராகிய தம்முடைய தந்தையாரின் தோள்களின் மேல் எழுந்தருளித் தம்மை அடைந்த பக்தர்களை வலமாக வந்து தேவர்கள் துதிக்கும் சந்திரனை அணிந்த மாணிக்கங்களைப் பதித்திருக்கும் மாடங்கள் உயரமாக நிற்கும் அழகிய தோணிபுரமாகிய சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் தோணி அமைந்திருக்கும் முடியைப் பெற்ற திருக்கோயிலுக்குள்.' பாடல் வருமாறு:

"செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத்
துடன்நடந்து செல்லும் போது
தங்கள்குலத் தாதையர் தரியாது
தோளின்மேல் தரித்துக் கொள்ள
அங்கவர்தம் தோளின்மிசை எழுந்தருளி
அணைந்தார்சூழ்ந் தமரர் ஏத்தும்
திங்கள்அணி மணிமாடத் திருத்தோணி
புரத்தோணிச் சிகரக் கோயில்."

இந்தப் பாடல் குளகம். செங்கமல மலர்க் கரத்து - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போன்ற கைகளில். மலர்: ஒருமை பன்மை மயக்கம். கரத்து: ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. திரு - அழகிய. த்: சந்தி. தாளத்துடன் - தமக்குச் சத்தபுரீசர் வழங்கியருளிய தங்கத் தாளத்தோடு. நடந்து - தம்முடைய கால்களால் நடந்து. செல்லும் - எழுந்தருளும். போது - சமயத்தில். தங்கள் - தங்களுடைய; என்றது திருஞான சம்பந்தரையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. குல - குடும்பத்தில் உள்ள. த்: சந்தி. தாதையர் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர். தரியாது - தம்முடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவடிகளால் நடந்து செல்லுவதைச் சகிக்காமல். தோளின்மேல் - தம்முடைய தோள்களின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். தரித்துக் கொள்ள - எடுத்துச் சுமந்து கொண்டு செல்ல. அங்கு - அந்த இடத்தில். அவர்தம் - அந்தச் சிவபாத இருதயராகிய தம்முடைய தந்தையாரின். தம்: அசைநிலை. தோளின்மிசை - தோள்களின்மேல்; ஒருமை பன்மை மயக்கம். எழுந்தருளி - ஏறிக்கொண்டு எழுந்தருளி. அணைந்தார் - தம்மைப் புகலாக அடைந்த பக்தர்களை; ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்து - வலமாக வந்து. அமரர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஏத்தும் - துதிக்கும். திங்கள் - சந்திரனை. அணி - புனைந்துள்ள. மணி - மாணிக்கங்களைப் பதித்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மாட - மாடங்கள் உயரமாக நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. திரு - அழகிய. த்: சந்தி. தோணிபுர - தோணிபுரமாகிய சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின்மேல் விளங்கும் தோணி அமைந்திருக்கும். த்: சந்தி. தோணி - தோணி அமைந்திருக்கும். ச்: சந்தி. சிகர - முடியைப் பெற்ற;

கோபுரத்தைப் பெற்ற. க்: சந்தி. கோயில் - திருக்கோயிலுக்கு உள்ளே.

பின்பு உள்ள 107-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அழகு பெருகி விளங்கும் பெருமையைப் பெற்றுத் திகழும் தோணியப்பருடைய திருக்கோயிலைச் சுற்றி வலமாக வந்தருளி அந்த அழகிய தோணியப்பருடைய சந்நிதியில் நின்று கொண்டு அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளால் தம்முடைய திருவுள்ளத்தில் பெருகி எழுந்த ஒரு திருப்பதிகத்தை எட்டுச் சீர்களை ஒரு கணக்காக அமைத்து அந்தக் கட்டளைக்குள் ஒன்றை விருப்பத்தைப் பெற்ற தங்கத்தைப் பதித்திருக்கும் சீகாழியில் பிரமபுரீசர் திருக்கோயிலில் உள்ள கட்டுமலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில் அமர்ந்திருந்தவராகிய தோணியப்பரைப் பாடியருளியதற் காக உண்டாகிய விருப்பம் பொருத்தமாக அமைய அந்தத் தோணியப்பரை வாழ்த்தி விட்டு, ''பூவார் கொன்றை'' என்னும் தொடக்கத்தைக் கொண்ட ஒரு திருப்பதிகத்தைத் தொடங்கியருளினார்.' பாடல் வருமாறு:

"திருப்பெருகு பெருங்கோயில் சூழவலம்
கொண்டருளித் திருமுன் நின்றே
அருட்பெருகு திருப்பதிகம் எட்டொருகட்
டளையாக்கி அவற்றுள் ஒன்று
விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார்
தமைப்பாட மேவு காதல்
பொருத்தம்உற அருள்பெற்றுப் போற்றிஎடுத்
தருளினார். 'பூவார் கொன்றை.'"

திரு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அழகு. ப்: சந்தி. பெருகு - பெருகி விளங்கும். பெரும் -

பெருமையைப் பெற்றுத் திகழும். கோயில் - தோணியப்பர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை. சூழ - சுற்றி. வலம் கொண்டருளி - வலமாக வந்தருளி. த்: சந்தி. திரு - அழகிய. முன் - அந்தத் தோணியப்பருடைய சந்நிதியில். நின்று - நின்றுகொண்டு. ஏ: அசைநிலை. அருள் - அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளால். பெருகு - தம்முடைய திருவுள்ளத்தில் பெருகி எழுந்த. திருப்பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. எட்டு - எட்டுச் சீர்களை; ஆகுபெயர். ஒரு கட்டளை ஆக்கி - ஒரு கணக்காக அமைத்து. அவற்றுள் - அந்தக் கட்டளைக்குள். ஒன்று - ஒரு கட்டளையை. விருப்புறு - தம்முடைய விருப்பத்தைப் பெற்ற. பொன் - தங்கத்தைப் பதித்திருக்கும். திரு - அழகிய. த்: சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில். வீற்றிருந்தார் தமை - அமர்ந்திருந்தவராகிய தோணியப்பரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. பாட - பாடியருளுவதற்காக. மேவு - தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய. காதல் - விருப்பம். பொருத்தம் உற - பொருத்தமாக அமைய. அருள் - அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளை. பெற்று - அந்த நாயனார் பெற்றுக் கொண்டு. ப்: சந்தி. போற்றி - அந்தத் தோணியப்பரை வாழ்த்திவிட்டு. 'பூவார் கொன்றை' - 'பூவார்கொன்றை' என்னும் தொடக்கத்தைக் கொண்ட ஒரு திருப்பதிகத்தை. எடுத்தருளினார் - பாடத் தொடங்கி யருளினார்.

அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தக்கராகப் பண்ணில் பாடியருளிய பாசுரம் வருமாறு:

"பூவார் கொன்றைப் புரிபுன் சடையீச
காவாய் எனநின் றேத்தும் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போவாம்
பாவார் இன்சொற் பயிலும் பரமரே."

இந்தத் திருப்பதிகத்தில் வரும் இறுதிப் பாசுரம் வருமாறு:

"சாரார் வயல்சூழ் காழிக்கோன் தன்னைச்
சீரார் ஞான சம்பந்தன் சொன்ன
பாரார் புகழப் பாட வல்லவர்
ஏரார் வானத் தினிதாய் இருப்பரே."

*அடுத்து வரும் 108-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'ஒரு குறைவும் இல்லாமல் நிறைந்த சிவஞானத்தைப் பெற்று விளங்கும் மேகத்தைப் போன்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் பாடத் தொடங்கிய திருப்பதிகத்தில் தக்கராகப் பண்ணைத் தம்முடைய கைகளில் வைத்திருந்த அழகிய தங்கத் தாளத்தினால் பொருந்துமாறு தட்டி அடுத்தபடி உள்ள செய்யுள் நடை அமையப் பாடியருளி பேராவல் உண்டாக அந்தத் தோணியப்பரைப் பணிந்துவிட்டு அப்பால் எழுந்தருளி அலைகள் வீசும் புனல் ஓடும் பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு பாய்ந்து சேரும் வயல்களைப் பெற்று விளங்கும் பூந்தராய் ஆகிய சீகாழியில் வாழும் பக்தர்கள் நல்ல வாழ்வைப் பெற்றுத் திகழ இளமையை மிகுதியாகப் பெற்ற திருக்கோலத்தோடு அந்த நாயனார் தம்முடைய காட்சியை வழங்கியருளிச் சீகாழியில் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"எடுத்ததிருப் பதிகத்தின் இசைத்திருத்
தாளத்தினால் இசைய ஒத்தி
அடுத்தநடை பெறப்பாடி ஆர்வமுற
வணங்கிப்போந் தலைநீர்ப் பொன்னி
மடுத்தவயற் பூந்தரா யவர்வாழ
மழவிளங் கோலத்துக் காட்சி

கொடுத்தருளி வைகினார் குறைவிலா
நிறைஞானக் கொண்ட லார்தாம்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. குறைவு - ஒரு குறைவும். இலா - இல்லாமல்; இடைக்குறை. நிறை - நிறைந்த. ஞான - சிவஞானத்தைப் பெற்று விளங்கும். க்: சந்தி. கொண்டலார் தாம் - மேகத்தைப் போன்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகுபெயர். தாம்: அசை நிலை. எடுத்த - தாம் பாடத் தொடங்கிய. திருப்பதிகத்தின் - திருப்பதிகத்தில். இசை - தக்கராகப் பண்ணினை. திருத்தாளத்தினால் - தம்முடைய கைகளில் வைத்திருந்த அழகிய தங்கத்தாளத்தினால். இசைய - பொருந்துமாறு. ஒத்தி - தட்டி. அடுத்த - அடுத்தபடி உள்ள. நடை - செய்யுள் நடை. பெற - அமைய. ப்: சந்தி. பாடி - அந்தத் திருப்பதிகத்தைப் பாடியருளி. ஆர்வம் - பேராவல். உற - உண்டாக. வணங்கி - அந்தத் தோணியப்பரைப் பணிந்து விட்டு. ப்: சந்தி. போந்து - அப்பால் எழுந்தருளி. அலை - அலைகளைப் பெற்று விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். நீர் - புனல் ஓடும். ப்: சந்தி. பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு. மடுத்த - பாய்ந்து சேர்ந்துள்ள. வயல் - பலவகையாகிய வயல்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பூந்தராயவர் - பூந்தராய் ஆகிய சீகாழியில் வாழும் பக்தர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாழ - நல்ல வாழ்வைப் பெற்றுத் திகழ. மழவிளம் - இளமையை மிகுதியாகப் பெற்ற. கோலத்து - திருக்கோலத்தோடு. க்: சந்தி. காட்சி கொடுத்தருளி - தம்முடைய காட்சியை வழங்கியருளி. வைகினார் - சீகாழியில் தங்கிக் கொண்டிருந்தார்.

பின்பு வரும் 109-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு சீகாழியில் தங்கிக் கொண்டிருந்த அந்த நிலையில் ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை முன்பு பெற்று வழங்கிய அன்னையாராகிய பகவதியார் முன்னால் பிறப்பதற்காகத் தம்முடைய பெற்றோர்கள் முயன்று புரிந்த தவத்தைச் செய்த அழகிய நன்னிபள்ளி முதலாக உள்ள சிவத்தலங்களில் வாழும் வேதியர்கள் எல்லாரும் நிலை பெற்ற பெருமையைப் பெற்று விளங்கும் மகிழ்ச்சியோடு மங்கல வாத்தியங்கள் முழங்க இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களில் உள்ள மந்திரங்களை ஓதிக் கொண்டு பகைவர்கள் ஏறாத கன்னித் தன்மையைப் பெற்ற திருமதில் சுற்றியிருக்கும் சண்பை நகரமாகிய சீகாழி மாநகரத்திற்கு வந்து சேர்ந்து, கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களுக்கு அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளைத் தரையில் விழுந்து வணங்கினார்.' பாடல் வருமாறு:

"அந்நிலையில் ஆளுடைய பிள்ளையார்
தமைமுன்னம் அளித்த தாயார்
முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி
பள்ளிமுதல் மறையோர் எல்லாம்
மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ
ரியம்துவைப்ப மறைகள் ஓதிக்
கன்னிமதிற் சண்பைநகர் வந்தணைந்து
கவுணியர்கோன் கழலில் தாழ்ந்தார்."

அந்நிலையில் - அவ்வாறு சீகாழியில் தாம் தங்கிக் கொண்டிருந்த அந்த நிலையில். ஆளுடைய பிள்ளையார் தமை - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த

மூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. முன்னம் - முன்பு. அளித்த - பெற்றெடுத்து வழங்கிய. தாயார் - அன்னையாராகிய பகவதியார். முன் - முன்னால். உதிக்க - பிறப்பதற்காக. முயன்ற - தம்முடைய பெற்றோர்கள் முயன்று புரிந்த. தவ - தவத்தைச் செய்த. த்: சந்தி. திருநன்னி பள்ளிமுதல் - திருநன்னிப் பள்ளி முதலாக உள்ள. திருநள்ளி பள்ளி - செய்யுள் ஓசையை நோக்கி னகர ஒற்று மிக்கது. மறையோர் - சிவத்தலங்களில் வாழும் வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாரும். மன்னு - நிலை பெற்ற. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். மகிழ்ச்சியுடன் - ஆனந்தத்தோடு. மங்கலதூரியம் - மங்கல வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். துவைப்ப - முழங்க. மறைகள் - இருக்கு வேதம், யஜுர் வேம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களில் உள்ள மந்திரங்களை; ஆகுபெயர். ஓதி - வேதியர்கள் ஓதிக் கொண்டு. க்: சந்தி. கன்னி - பகைவர்கள் ஏறாத கன்னித் தன்மையைப் பெற்றுள்ள. மதில் - திருமதில் சுற்றியிருக்கும். சண்பைநகர் - சண்பை நகரமாகிய சீகாழி மாநகரத்திற்கு. நகரம் - பெரிய சிவத்தலம். வந்து அணைந்து - வந்து சேர்ந்து. கவுணியர் - கவுண்டின்ய கோத்திரத்திற் பிறந்த அந்தணர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். கோன் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. கோன்: ஒருமை பன்மை மயக்கம். கழலில் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். கழலில்: உருபு மயக்கம். தாழ்ந்தார் - தரையில் விழுந்து வணங்கினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 110-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'மங்கலகரமாகிய உண்மையாகிய சிவஞானத்தை இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் களிப்பை

அடையுமாறு பெற்றுக் கொண்ட பெருமையைப் பெற்று விளங்கும் மொழிகளால் எல்லாத் திசைகளிலும் உள்ள உயரமான மாடங்களைப் பெற்ற சிவத்தலங்களினுடைய பக்கங்களில் வாழும் இருபிறப்பாளர் என்னும் துவிஜர்களாகிய அந்தணர்களும், மற்றச் சாதி மக்களும், மகிழ்ச்சி பொங்கி எழும் பிரமபுரீசருடைய திருத் தொண்டர்களும் வியப்பை அடைந்து கூட்டமாகக் கூடிக்கொண்டு புகலியாகிய சீகாழியில் வாழும் அந்தணர் களுடைய ஆண் சிங்கக் குட்டியைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம் வந்து சேர்ந்து அந்த நாயனாருடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை வணங்கும் சிறப்பில் மிகுதியாக விளங்கினார்கள்.' பாடல் வருமாறு:

"மங்கலமா மெய்ஞ்ஞானம் மண்களிப்பப்
பெற்றபெரு வார்த்தை யாலே
எங்கணும்நீள் பதிமருங்கில் இருபிறப்பா
ளரும்அல்லா ஒனை யோரும்
பொங்குதிருத் தொண்டர்களும் அதிசயித்துக்
குழாம்கொண்டு புகலி யார்தம்
சிங்கஇள ஏற்றின்பால் வந்தணைந்து
கழல்பணியும் சிறப்பின் மிக்கார்."

மங்கல மா - மங்கலகரமாகிய. மெய் - உண்மையா கிய. ஞ்: சந்தி. ஞானம் - சிவஞானத்தை ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துக் குழைத்துப் பெரிய நாயகியார் வழங்கிய பாலை. மண் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இடஆகு பெயர். களிப்ப - களிப்பை யடையுமாறு. ப்: சந்தி. பெற்ற - பெற்றுக் குடித்தருளிய. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். வார்த்தையால் - மொழிகளால்; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை.

எங்கணும் - எந்தத் திசைகளிலும்; ஒருமை பன்மை மயக்கம். நீள் - உயரமான மாடங்களைப் பெற்ற. பதி - சிவத்தலங்களி னுடைய; ஒருமை பன்மை மயக்கம். மருங்கில் - பக்கங் களில் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். இருபிறப்பாள ரும் - உபநயனத்திற்கு முன்பு ஒரு பிறப்பையும் பிறகு மற்றொரு பிறப்பையும் பெற்றவர்களுக்கு; துவிஜர்களும் ஆகிய அந்தணர்களும். பிறப்பு: ஒருமை பன்மை மயக்கம். அல்லா - அந்தணர்கள் அல்லாத. ஏனையோரும் - மற்றச் சாதிகளில் பிறந்த க்ஷத்திரியர்களும், வைசியர்களும், வேளாளர்களும், பள்ளர்களும், பள்ளிகளும், பறையர் களும், பறைச்சிகளும், வலையர்களும், வலைச்சியர் களும், மரமேறிகளும், அவர்களுடைய மனைவிமார் களும், சக்கிலியர்களும் ஆகியவர்களும். பொங்கு - மகிழ்ச்சி பொங்கி எழும். திருத்தொண்டர்களும் - பிரமபுரீசருடைய திருத்தொண்டர்களும். அதிசயித்து - வியப்பை அடைந்து. க்: சந்தி. குழாம் கொண்டு - கூட்டமாகக் கூடிக் கொண்டு. புகலியார் தம் - புகலியாகிய சீகாழியில் வாழும் அந்தணர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. சிங்க இள ஏற்றின் பால் - இளைய ஆண் சிங்கக் குட்டியைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரிடம்; உவம ஆகுபெயர். வந்து அணைந்து - வந்து சேர்ந்து. கழல் - அந்த நாயனாருடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகு பெயர். பணியும் - வணங்கும். சிறப்பின் - சிறந்த நிலையில். மிக்கார் - மிகுதியாக விளங்கினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குச் சிங்கம் உவமை: ''பரசமய கோளரி வந்தான்.'', ''கவுணியர் தம் போரேற்றை.'', ''புகலி வந்த பூசுரர் சிங்கமும்.'', ''தனிக் கானம் சின்னமெல்லாம் பரசமய கோளரிவந்தா னென்றூத.''

என்று சேக்கிழாரும், ''தென்னாட்டமண் அட்டசிங்கத்தினை.'', ''புகலித் தாளரிக்கும் அரியான் அருள் பெற்ற பரசம கோளேரி.'', ''முத்தமிழின் செஞ்சொற் பொருள் பயந்த சிங்கத்தை.'', ''பரசமய வென்றி அரி.'', ''செழுமலயத் தமிழ் கேசரி.'', ''பரமகுரு நாதன்மிகு பரசமய கோளரியே.'', ''காழி முதல்வன் கவுணியதம் போறேறு.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

*பிறகு வரும் 111-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமாளிகைக்கு வந்த திருத்தொண்டர் களுக்கும், மிகுதியாக வந்த செல்வச் செழிப்பைப் பெற்ற வேதியர்களுக்கும், வேறாக உள்ள க்ஷத்திரியர்களுக்கும், வைசியர்களுக்கும் அவர்களுடைய திருவுள்ளங்கள் மகிழ்ச்சியை அடையுமாறு அந்த நாயனார் தம்முடைய முகம் மலர்ச்சியை அடைந்து திருவமுது முதலான உணவு வகைகளை சிறப்பைப் பெற்ற செயலை அவர்கள் தங்கள் தங்களுடைய அளவுகளுக்கேற்ற வகையில் விருப்பத்தை அடையும் தகுதியான பான்மையால் தம்முடைய கடமையைப் புரியும் உண்மையாகிய சீகாழி என்னும் பழமையான சிவத்தலம் அடியேங்களுடைய தலைவனாகிய கைலாசபதி எழுந்தருளியிருக்கும் சிவலோகம் என்று கூறுமாறு திகழ்ந்துள்ள அந்தச் சீகாழி மாநகரத்தை எந்த உலகங்களில் வாழ்பவர்களும் துதித்துப் பாராட்டும் காலத்தில்.' பாடல் வருமாறு:

''வந்ததிருத் தொண்டர்க்கும் மல்குசெழு
மறையவர்க்கும் மற்று ளோர்க்கும்
சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது
முதலான சிறப்பின் செய்கை

தந்தம்அள வினில்விரும்பும் தகைமையினால்
கடனாற்றும் சண்பை மூதூர்
எந்தைபிரான் சிவலோகம் எனவிளங்கி
எவ்வுலகும் ஏத்தும் நாளில்.''

இந்தப் பாடல் குளகம். வந்த - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருமாளிகைக்கு வந்த. திருத்தொண்டர்க்கும் - திருத்தொண்டர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மல்கு - மிகுதியாக வந்த. செழு - செல்வச் செழிப்பைப் பெற்ற. மறையவர்க்கும் - வேதியர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மற்றுளோர்க்கும் - வேறாக உள்ள க்ஷத்திரியர்களுக்கும், வைசியர்களுக்கும், வேளாளர் களுக்கும், பிற சாதிகளில் பிறந்தவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். உளோர்: இடைக்குறை. சிந்தை - அவர்களுடைய திருவுள்ளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மகிழ்வுற - மகிழ்ச்சியை அடையுமாறு. மலர்ந்து - அந்த நாயனார் தம்முடைய முகம் மலர்ச்சியை அடைந்து. திருவமுது முதலான - திருவமுது முதலாக உள்ள. சிறப்பின் - சிறப்பைப் பெற்ற. செய்கை - செயலை. திருவமுது முதலாக உள்ளவை என்றது உண்ணும் சோற்றையும், வேக வைத்த வாழைக் காய்க்கறி, வெண்டைக்காய்க்கறி, கொத்தவரங் காய்க்கறி, பொறித்த கூட்டு, தயிர்ப் பச்சிடி, பருப்பு உசிலி, மற்றும் பருப்புச் சுண்டல், வேக வைத்த துவரம்பருப்பு, குழம்பு, மோர்க் குழம்பு, ரசம், வடை, அதிரசம், குஞ்சாலாடு, பதிர்ப்பேணி, ரவாகேசரி, மைசூர்ப்பாகு, பாயசம், தயிர்வடை, தயிர், காய்வகைகள் முதலியவை. தந்தம் அளவினில் - அவர்கள் தங்கள் தங்களுடைய அளவுகளுக்கு ஏற்ற வகையில். அளவு: ஒருமை பன்மை மயக்கம். விரும்பும் - அவர்கள் விழையும். தகைமையினால் - தகுதியான பான்மையினால். கடன் - தம்முடைய கடமையை. ஆற்றும் - புரியும். சண்பை மூதூர்

- சண்பையாகிய சீகாழி என்னும் பழமையான சிவத்தலம். எந்தை பிரான் - அடியேங்களுடைய தலைவனாகிய கைலாசபதி. 'அடியேங்கள்' என்றது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. சிவலோகம் என - எழுந்தருளியிருக்கும் சிவலோகம் என்று கூறுமாறு. என: இடைக்குறை. விளங்கி - திகழ்ந்து. எவ்வுலகும் - எந்த உலகங்களில் வாழ்பவர்களும்; இடஆகு பெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். ஏத்தும் - துதித்துப் பாராட்டும்; சீகாழியைத் துதித்துப் பாராட்டும். நாளில் - காலத்தில்.

பிறகு வரும் 112-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'செழிப்பைப் பெற்று விளங்கும் முத்துக்களைத் தன்னுடைய அலைகளால் வாரிக் கரையில் வீசும் பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு சுற்றி ஓடும் அழகிய நனிபள்ளியில் வாழும் மக்கள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கி, "பிறைச் சந்திரனுடைய கொழுந்தைப் புனைந்திருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய நற்றுணையப்பரை அடியேங் களுடைய ஊராகிய நனிபள்ளியில் கும்பிட்டருளியதற்காக அந்த நனிபள்ளிக்குத் தேவரீர் எழுந்தருள வேண்டும்." என்று அந்த மக்கள் வேண்டிக் கொள்ள அந்த வேண்டுகோளுக்குத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இணங்கியருளிச் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில் அமர்ந்திருந்தவராகிய தோணியப்பருடைய திருவடிகளை அந்த நாயனார் வணங்கும் தகுதியாகிய பான்மையோடு வணங்கிவிட்டு அந்தத் தோணியப்பர் அருளும் விடையை அந்த நாயனார் பெற்றுக் கொண்டு வேறு சிவத்தலங்களுக்கும் எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்

சிவபெருமான்களை வணங்கும் பொருட்டு முன்னால் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"செழுந்தரளப் பொன்னிசூழ் திருநன்னி
பள்ளியுள்ளோர் தொழுது 'திங்கட்
கொழுந்தணியும் சடையாரை எங்கள்பதி
யினிற்கும்பிட் டருள அங்கே
எழுந்தருள வேண்டும்'என இசைந்தருளித்
தோணிவீற் றிருந்தார் பாதம்
தொழுந்தகைமை யாலிறைஞ்சி அருள்பெற்றுப்
பிறபதியும் தொழமுன் செல்வார்."

செழும் - செழிப்பைப் பெற்று விளங்கும். தரளம் - முத்துக்களைத் தன்னுடைய அலைகளால் வாரிக் கரையில் வீசும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு. சூழ் - சுற்றி ஓடும். திரு - அழகிய; 'செல்வர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். நள்ளிபள்ளி - திருநளிபள்ளியில். னகர ஒற்று செய்யுளின் ஓசை நோக்கி மிக்கது. உள்ளோர் - வாழும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கி. திங்கள் - பிறைச் சந்திரனுடைய. கொழுந்து அணியும் - கொழுந்தைப் புனைந்து கொண்டிருக்கும். சடையாரை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற வராகிய நற்றுணையப்பரை. எங்கள் - அடியேங்களுடைய; இது நனிபள்ளியில் வாழும் மக்கள் கூறியது. பதியினில் - ஊராகிய நனிபள்ளியில். கும்பிட்டருள - நற்றுணையப் பரைக் கும்பிட்டருள. அங்கு - அந்தத் திருநனிபள்ளிக்கு. ஏ: அசைநிலை. எழுந்தருள வேண்டும் - தேவரீர் எழுந்தருள வேண்டும். என - என்று அந்த மக்கள் வேண்டிக் கொள்ள; இடைக்குறை. இசைந்தருளி - திருஞான சம்பந்த மூர்த்தி

நாயனார் அந்த வேண்டுகோளுக்கு இணங்கியருளி. த்: சந்தி. தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில். வீற்றிருந்தார் - அமர்ந்திருந்தவராகிய தோணியப்பருடைய. பாதம் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழும் - வணங்கும். தகைமையால் - பான்மையோடு; உருபு மயக்கம். இறைஞ்சி - வணங்கிவிட்டு. அருள் பெற்று - அருளும் விடையைப் பெற்றுக் கொண்டு. ப்: சந்தி. பிற - வேறாக உள்ள. பதியும் - சிவத்தலங்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். தொழ - எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவ பெருமான்களை வணங்கும் பொருட்டு. முன் - முன்னால். செல்வார் - அந்த நாயனார் எழுந்தருளுவாரானார்.

அடுத்து வரும் 113-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய திருக்கோயிலில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து அளித்த சிவஞானப் பாலைக் குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய மகரந்தப் பொடிகள் விரிந்து நறுமணம் கமழும் செந்தாமரை மலரில் உள்ள அக இதழ்களைப் போன்ற சிறிய திருவடிகள் தரையின் மேல் எழுந்தருளுவதையும், வேறு ஒருவர் அந்தத் திருவடிகளைச் சுமப்பதையும், சகிக்காத வாத்சல்யத்தைக் கொண்ட திருவுள்ளத்தையும், பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தைப் புரிந்த இயல்பையும் பெற்ற தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் அந்த இடத்திற்கு வந்து தம்மை எடுத்துத் தம்முடைய தோள்களின்

மேல் அமருமாறு வைத்துக் கொள்ள தம்முடைய தலைவராகிய பிரமபுரீசருடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கொண்ட எண்ணத்தோடு அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"தாதவிழ்செந் தாமரையின் அகவிதழ்போற்
சீறடிகள் தரையின் மீது
போதுவதும் பிறர்ஒருவர் பொறுப்பதுவும்
பொறாஅன்பு புரிந்த சிந்தை
மாதவம்செய் தாதையார் வந்தெடுத்துத்
தோளின்மேல் வைத்துக் கொள்ள
நாதர்கழல் தம்முடிமேற் கொண்டகருத்
துடன்போந்தார் ஞானம் உண்டார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. ஞானம் - சீகாழியில் உள்ள பிரமபுரீ சருடைய திருக்கோயிலில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கை களிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து அளித்த சிவஞானப் பாலை. உண்டார் - குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. தாது - மகரந்தப் பொடிகள்; ஒருமை பன்மை மயக்கம். .அவிழ் - விரிந்து நறுமணம் கமழும். செந்தாமரையின் - செந்தாமரை மலரில் உள்ள. அகஇதழ்போல் - அகஇதழ்களைப் போன்ற. இதழ்: ஒருமை பன்மை மயக்கம். சீறடிகள் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய சிறிய திருவடிகள். தரையின் மீது - தரையின் மேல். போதுவதும் - எழுந்தருளுவதையும். பிறர் - வேறாக உள்ளவராகிய. ஒருவர் - ஒரு மனிதர். பொறுப்பதுவும் - அந்தத் திருவடிகளைச் சுமப்பதையும். பொறா - சகிக்காத.

அன்புபுரிந்த - வாத்சல்யத்தைக் கொண்ட. சிந்தை - திருவுள்ளத்தையும். மா - பெருமையைப் பெற்று விளங்கும். தவம் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாராகிய ஆண் குழந்தையைப் பெறுவதற்காக தவத்தை. செய் - புரிந்த. தாதையார் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர். வந்து - அந்த இடத்திற்கு வந்து. எடுத்து - தம்மை எடுத்து. த்: சந்தி. தோளின் மேல் - தம்முடைய தோள்களின் மேல் அமருமாறு. தோள்: ஒருமை பன்மை மயக்கம். வைத்துக் கொள்ள - தம்முடைய புதல்வரை வைத்துக் கொள்ள. நாதர் - தம்முடைய தலைவராகிய பிரமபுரீசருடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். தம் - தம்முடைய. முடிமேல் - தலையின் மேல். கொண்ட - வைத்துக்கொண்ட. கருத்துடன் - எண்ணத்தோடு. போந்தார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பின்பு வரும் 114-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தேன் மலரும் கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டிருப்பவராகிய நற்றுணையப்பர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருநனிபள்ளியை அடைவதற்காக எழுந்தருள்பவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''ஆகாயத்தை அளாவும் மலர்கள் மலர்ந்த பல வகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம்பொழில் எனக்கு முன்னால் காட்சியளிப்பது எந்தச் சிவத்தலம்?'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் கேட்டருள மகிழ்ச்சியை அடைந்து, ''நீலோற்பல மலர்கள் மலரும் வயல்களைப் பெற்ற திருநனிபள்ளி'' என்று தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் கூற அதனைக் கேட்டருளிச் சிவஞானமாகிய விருந்தை உண்டவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நற்றுணையப்பரை

வணங்கிவிட்டு நல்ல செந்தமிழ் மொழியில் அமைந்த செய்யுட் சொற்களைப் பெற்ற தொடுத்தலைக் கொண்ட மாலையாகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளத் தொடங்கினார்.' பாடல் வருமாறு:

"தேனலரும் கொன்றையினார் திருநன்னி
 பள்ளியினைச் சாரச் செல்வார்
'வானணையும் மலர்ச்சோலை தோன்றுவதெப்
 பதி?'என்ன மகிழ்ச்சி எய்திப்
'பாலைவயல் திருநன்னி பள்ளி'எனத்
 தாதையார் பணிப்பக் கேட்டு
ஞானபோ னகர்தொழுது நற்றமிழ்ச்சொல்
 தொடைமாலை நவில லுற்றார்."

தேன் அலரும் - தேன் மலரும். கொன்றையினார் - கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டிருப் பவராகிய நற்றுணையப்பர். கொன்றை: ஆகு பெயர். திருநனிபள்ளியினை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் திருநனி பள்ளியை. னகர ஒற்றுச் செய்யுள் ஓசையை நோக்கி மிக்கது. ச்: சந்தி. சார - அடைவதற்காக. ச்: சந்தி. செல்வார் - எழுந்தருள்பவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வான் - ஆகாயத்தை. அணையும் - அளாவும். மலர் - மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சோலை - பல வகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம்பொழில். தோன்றுவது - எனக்கு முன்னால் காட்சி அளிப்பது. எப்பதி - எந்தச் சிவத்தலம். என்ன - என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வினவியருள. மகிழ்ச்சி - மகிழ்ச்சியை. எய்தி - அடைந்து. ப்: சந்தி. பாலை - நீலோற்பல மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வயல் - வயல்களைப் பெற்ற. திருநன்னி பள்ளி - திருநனிபள்ளி. என - என்று; இடைக்குறை. த்: சந்தி. தாதையார் - தம்முடைய

தந்தையாராகிய சிவபாத இருதயர். பணிப்ப - கூற. க்: சந்தி. கேட்டு - அதனைக் கேட்டருளி. ஞான போனகர் - சிவஞானமாகிய விருந்தை உண்டவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தொழுது - நற்றுணையப்பரை வணங்கி விட்டு. நல் - நல்ல. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ச்: சந்தி. சொல் - செய்யுட் சொற்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். தொடை - தொடுத்தலைக் கொண்ட. மாலை - மாலையாகிய பின் வரும் ஒரு திருப்பதிகத்தை. நவிலலுற்றார் - அந்த நாயனார் பாடியருளத் தொடங்கினார்.

திருநனிப்பள்ளி: இது சோழ நாட்டில் உள்ள சிவத் தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் நற்றுணையப்பர். அம்பிகையின் திருநாமங்கள் பர்வதராஜபுத்திரி, மலையான் மடந்தை என்பவை. இதற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர் புஞ்சை என்பது. இது மாயூரத்திற்கு வடகிழக்குத் திசையில் 8-மைல் தூரத்தில் உள்ளது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய அன்னையாராகிய பகவதியார் திருவவதாரம் செய்தருளிய தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பியந்தைக் காந்தாரப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சடையிடை புக்கொடுங்கி உளதங்கு
வெள்ளம் வளர்திங்கள் கண்ணியயலே
இடையிடை வைத்ததொக்கும் மலர்தொத்து
மாலையிறை வன்னிடம்கொள் பதிதான்
மடையிடை வாளைபாய முகிழ்வாய்
நெரிந்து மணம்நாறு நீலமலரும்
நடையுடை அன்னம் வைகுபுனலம்
படப்பைநனி பள்ளிபோலும் நமர்காள்."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"முற்றுணை யாமி னானை
மூவர்க்கும் முதல்வன் தன்னைச்
சொற்றுணை யாமி னானைச்
சோதியை ஆத ரித்து
உற்றுணர்ந் துருகி ஊறி
உள்கசி வுடைய வர்க்கு
நற்றுணை யாவர் போலும்
நனிபள்ளி அடிக ளாரே."

இந்தத் தலத்தைப் பற்றிச் செந்துருத்திப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"ஏன மருப்பினொடும் எழில்ஆமையும் பூண்டுகந்து
வான மதிள்அரணம் மலையேசிலை யாவளைத்தான்
ஊனமில் காழிதன்னுள் உமிர்ஞானசம் பந்தர்க்கன்று
ஞானம் அருள்புரிந்தான் நண்ணும்ஊர் நனிபள்ளியதே."

*பிறகு வரும் 115-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், "காரைகள் கூகை முல்லை" என்று தொடங்கி நடக்கும் கலைத் தன்மையைச் சேர்ந்திருக்கும் உண்மையைப் புலப்படுத்தும் செய்யுட்களுக்கு உரிய சீர்களைப் பெற்ற இயல்பைக் கொண்ட ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி அந்தத் திருப்பதிகத்திலுள்ள இறுதிப் பாசுரமாகிய திருக்கடைக் காப்பில், "நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளி உள்குவார் தம் பேரிடர் கெடுதற் காணை நமது" என்னும் பெருமையை வைத்து அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"'காரைகள் கூகை முல்லை'
எனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித்
திருக்கடைக் காப்புத் தன்னில்

'நாரியோர் பாகம் வைகும்
நனிபள்ளி உள்கு வார்தம்
பேரிடர் கெடுதற் காணை
நம'தெனும் பெருமை வைத்தார்.''

'காரைகள் கூகை முல்லை' என - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் 'காரைகள் கூகை முல்லை' என்று தொடங்கி; இடைக்குறை. நிகழ் - நடக்கும். கலை - கலைத் தன்மையை. சேர் - சேர்ந்திருக்கும். வாய்மை - உண்மையைப் புலப்படுத்தும். ச்: சந்தி. சீர் - செய்யுட்களுக்கு உரிய சீர்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். இயல் - இயல்பைக் கொண்ட. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடி - பாடியருளி. த்: சந்தி. திருக்கடைக் காப்புத் தன்னில் - அந்தத் திருப்பதிகத்தில் உள்ள இறுதிப் பாசுரமாகிய திருக்கடைக் காப்பில். தன்: அசைநிலை. 'நாரியோர் பாகம் வைகும் நனிபள்ளி உள்குவார் தம் பேரிடர் கெடுதற்காணை நம' தெனும் - 'நாரியோர் பாகம் வைகும் நனிபள்ளி உள்குவார் தம் பேரிடர் கெடுதற் காணை நமது' என்னும். எனும்: இடைக்குறை. பெருமை - பெருமையை. வைத்தார் - வைத்து அந்த நாயனார் பாடியருளினார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட பாசுரம் பியந்தைக் காந்தாரப் பண் அமைந்தது. அது வருமாறு:

''காரைகள் கூகை முல்லை களவாகை
ஈகைபடர் தொடரி கள்ளிசலினிச்
சூரைகள் பம்மி விம்முசுடுகாட மர்ந்தசிவன்
மேல் சோலை நகர்தான்
தேரைக ளாரை சாயமிதி கொள்ள
வாளை குதிகொள்ள வள்ளைதுவன
காரைக ளாரல்வாரி வயல் மேதி
வைகும்நனி பள்ளிபோலும் நமர்காள்.''

இந்தத் திருப்பதிகத்தில் வரும் இறுதிப் பாசுரம் வருமாறு:

"கடல்வரை ஓதம்மல்கு கழிகானல் பானல்
கமழ் காழி என்று கருதப்
படுபொருள் ஆறும் நாலும் உளதாக
வைத்த பதியான ஞான முனிவன்
இடுபறை ஒன்ற அத்தர் பியல்மேல்
இருந்தி னிசையால் உரைத்த பனுவல்
நடுவிருள் ஆடும் எந்தை நனிபள்ளி
உள்க வினை கெடுதல் ஆணைநமதே."

அடுத்து வரும் 116-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'முதல்வராகிய நற்றுணையப்பர் எழுந்தருளி யிருக்கும் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுரத்திற்கு முன்னால் உள்ள வாசலை அடைந்து திருக்கோயிலுக்குள் நுழைந்து தம்முடைய திருவுள்ளத்தில் பக்தி மிகுதியாக உண்டாக நியாய முறைப்படி அந்த நற்றுணையப்பரை வணங்கி வாழ்த்திப் பிறகு நெடுங்கால மாக இருக்கத் தக்கதாகிய அந்த நற்றுணையப்பர் வழங்கிய திருவருளை முன்னால் தாம்பெற்றுக் கொண்டு எழுந்தருளுபவரைச் சுற்றிக் கொண்டு பூசுரர்களாகிய அந்தணர்களுடைய கூட்டங்கள் தம்மை வாழ்த்தும் விருப்பத்தை நோக்கி கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களுக்குத் தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தத் திருநனிபள்ளியில் தங்கிக் கொண்டிருந் தார்.' பாடல் வருமாறு:

"ஆதியார் கோயில் வாயில்
அணைந்துபுக் கன்பு கூர
நீதியால் பணிந்து போற்றி
நீடிய அருள்முன் பெற்றுப்

போதுவார் தம்மைச் சூழ்ந்து
பூசுரர் குழாங்கள் போற்றும்
காதல்கண் டங்க மர்ந்தார்
கவுணியர் தலைவ னார்தாம்.''

ஆதியார் - முதல்வராகிய நற்றுணையப்பர். கோயில் - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு. வாயில் - முன்னால் உயரமாக நிற்கும் கோபுரத்திற்கு முன்பு உள்ள வாசலை. அணைந்து - அடைந்து. புக்கு - திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்து. அன்பு - பக்தி. கூர - மிகுதியாக உண்டாக. நீதியால் - நியாய முறையோடு; உருபு மயக்கம். பணிந்து - அந்த நற்றுணையப்பரை வணங்கி. போற்றி - வாழ்த்தி. நீடிய - பிறகு நெடுங்காலமாக இருக்கத் தக்கதாகிய. அருள் - அந்த நற்றுணையப்பர் வழங்கிய திருவருளை. முன் - முன்னால். பெற்று - தாம் பெற்றுக் கொண்டு. ப்: சந்தி. போதுவார் தம்மை - எழுந்தருளுபவரை. தாம்: அசைநிலை. ச்: சந்தி. சூழ்ந்து - சுற்றிக் கொண்டு. பூசுரர் - பூமியில் தேவர்களாக விளங்கும் அந்தணர்களுடைய. சுரர்: ஒருமை பன்மை மயக்கம். குழாங்கள் - கூட்டங்கள். போற்றும் - தம்மை வாழ்த்தும். காதல் - விருப்பத்தை. கண்டு - நோக்கி. கவுணியர் - சீகாழியில் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த அந்தணர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். தலைவனார்தாம் - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தாம்: அசைநிலை. அங்கு - அந்தத் திருநனிபள்ளியில். அமர்ந்தார் - தங்கிக் கொண்டிருந்தார்.

பிறகு வரும் 117-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில் அமர்ந்திருக்கும் அம்பிகையாகிய பெரிய நாயகி தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில்

வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கியருளிய சிவஞானப்பாலை எல்லா உலகங்களில் வாழ்பவர்களும் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் குடித்தருளிய அடியேங்களுடைய பெருமையையும் தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அவருடைய எதிரில் சென்று வரவேற்று வருவதற்கு விரும்பி தேவர்களும் பணியும் உண்மையான உயர்ச்சியைப் பெற்ற தவத்தைப் புரிந்த திருத்தொண்டர் களோடு தங்களுடைய பெருமையைப் பெற்ற விருப்பத்தோடு தலைச்சங்காட்டில் வாழும் வேதியர்கள் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள்.' பாடல் வருமாறு:

"அம்பிகை அளித்த ஞானம்
அகிலமும் உய்ய உண்ட
நம்பெரும் தகையார் தம்மை
எதிர்கொண்டு நண்ண வேண்டி
உம்பரும் வணங்கும் மெய்ம்மை
உயர்தவத் தொண்ட ரோடு
தம்பெரு விருப்பால் வந்தார்
தலைசை அந்தணர்கள் எல்லாம்."

அம்பிகை - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் தோணியில் அமர்ந்திருக்கும் அம்பிகையாகிய பெரிய நாயகி. அளித்த - தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கியருளிய. ஞானம் - சிவஞானப் பாலை. அகிலமும் - எல்லா உலகங்களில் வாழ்பவர்களும்; இடஆகு பெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். உண்ட - குடித்தருளிய. நம் - அடியேங் களுடைய; இது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர் களையும் சேர்த்துக் கூறியது.

பெரும் - பெருமையையும். தகையார் தம்மை - தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தம்: அசைநிலை. எதிர் கொண்டு - அவருடைய எதிரில் சென்று வரவேற்று. நண்ண - வருவதற்கு. வேண்டி - விரும்பி. உம்பரும் - தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். வணங்கும் - பணியும். மெய்ம்மை - உண்மையான. உயர் - உயர்ச்சியைப் பெற்ற; முதல் நிலைத் தொழிற் பெயர். தவ - தவத்தைப் புரிந்த. த்: சந்தி. தொண்டரோடு - திருத்தொண்டர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். தம் - தங்களுடைய. பெரு - பெருமையைப் பெற்ற. விருப்பால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். தலைசை - தலைச்சங்காட்டில் வாழும். அந்தணர்கள் - வேதியர்கள் எல்லாம் - எல்லாரும். வந்தார் - வந்து சேர்ந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 118-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தலைச்சங்காட்டில் வாழும் அந்தணர்கள் எல்லாரும் தங்களுடைய ஊரில் பந்தல்களை எந்த இடங்களிலும் கட்டி வைத்துப் பாக்கு மரங்களோடு வாழை மரங்களை யும் நட்டு வைத்து மலர்கள் சேர்ந்த மாலைகளைத் தொங்கவிட்டு பூர்ணகும்பங்களையும் தங்களுடைய கைகளில் எடுத்துக் கொண்டு கடைத்தெரு முழுவதும் அலங்காரங்களைச் செய்து தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை மாமரங்கள் அடைந்து வளர்ந்து நிற்கும் மலர்கள் மலர்ந்த பலவகை மரங்கள் வளர்ந்து நிற்கும் மென்மையான பூம்பொழிலையும் நீர் வளம், நில வளம், செல்வ வளம், நன்மக்கள் வளம், ஆலய வளம், விருந்தினரை ஓம்பும் வளம் முதலிய வளங்களைப் பெற்ற தங்களுடைய ஊராகிய தலைச்சங்காட்டுக்கு அந்த நாயனாரை அழைத்துக் கொண்டு அந்த ஊருக்குள் நுழைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"காவணம் எங்கும் இட்டுக்
கமுகொடு கதலி நாட்டிப்
பூவணை தாமம் தூக்கிப்
பூரண கும்பம் ஏந்தி
ஆவண வீதி எல்லாம்
அலங்கரித் தண்ண லாரை
மாவணை மலர்மென் சோலை
வளம்பதி கொண்டு புக்கார்."

காவணம் - தலைச்சங்காட்டில் வாழும் அந்தணர்கள் எல்லாரும் தங்களுடைய ஊரில் பந்தல்களை; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். இட்டு - கட்டி வைத்து. க்: சந்தி. கமுகொடு - பாக்கு மரங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கதலி - வாழை மரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். நாட்டி - நட்டு வைத்து. ப்: சந்தி. பூ - மலர்கள்: ஒருமை பன்மை மயக்கம். அணை - சேர்ந்த. தாமம் - மாலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். தூக்கி - தொங்கவிட்டு. ப்: சந்தி. பூரண கும்பம் - பூரண கும்பங்களை; ஒருமை பன்மை மயக்கம். பூரண கும்பம் - நீர் நிறைந்த குடம். ஏந்தி - தங்களுடைய கைகளில் எடுத்துக் கொண்டு. ஆவணவீதி - கடைத்தெரு. எல்லாம் - முழுவதும். அலங்கரித்து - பூக்களாலும் தோரணங்களாலும் அலங்காரத்தைச் செய்து. அண்ணலாரை - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. 'அண்ணலார் - பெருமையைப் பெற்றவர்' எனலும் ஆம். மா - மாமரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். 'மா - வண்டுகள்' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். அணை - அடைந்து வளர்ந்து நிற்கும். மலர்மென்சோலை - பல வகையான மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்கள் நிறைந்திருக்கும் மென்மையான பூம்பொழிலையும். வளம் - நீர் வளம், நில வளம், செல்வ

வளம், நன்மக்கள் வளம், ஆலய வளம், விருந்தினரை ஓம்பும் வளம் முதலிய வளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பதி - தங்களுடைய நகரமாகிய தலைச்சங்காட்டுக்கு. கொண்டு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அழைத்துக் கொண்டு. புக்கார் - அந்த ஊருக்குள் நுழைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

*பிறகு வரும் 119-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'தலைச்சங்காட்டில் வாழும் அழகிய வேதியர்கள் சுற்றியிருந்த தங்களுடைய திருவுள்ளங்களில் மகிழ்ச்சி பொங்கி எழ பெருமையைப் பெற்ற இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களினுடைய இனிய கானம் நிறைந்திருக்க பெருமையையும் அழகையும் பெற்ற நற்றுணையப் பருடைய திருக்கோயிலை அடைந்து பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள வேதங்களினுடைய அர்த்தமாக விளங்குபவராகிய அந்த நற்றுணையப்பரை வணங்கி அழகைப் பெற்ற நல்லவர் கூடிய சங்கத்தில் வழங்கும் முறை வழியில் அந்தத் திருக்கோயிலை அடைந்த பான்மையை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"திருமறை யோர்கள் சூழ்ந்து
சிந்தையில் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை ஓசை மல்கப்
பெருந்திருக் கோயில் எய்தி
அருமறைப் பொருளா னாரைப்
பணிந்தணி நற்சங் கத்தின்
தருமுறை நெறியக் கோயில்
சார்ந்தமை அருளிச் செய்தார்."

திரு - தலைச்சங்காட்டில் வாழும் அழகிய. 'திரு - செல்வத்தைப் படைத்த' எனலும் ஆம். மறையோர்கள் - வேதியர்கள். சூழ்ந்து - சுற்றியிருந்து. சிந்தையில் - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். மகிழ்ச்சி - ஆனந்தம். பொங்க - பொங்கி எழ. ப்: சந்தி. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஓசை - இனிய கானம். மல்க - நிறைந்திருக்க. ப்: சந்தி. பெரும் - பெருமையையும். திரு - அழகையும் பெற்ற. க்: சந்தி. கோயில் - நற்றுணையப்பர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை. எய்தி - அடைந்து. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொருள் ஆனாரை - அர்த்தமாக விளங்குபவராகிய அந்த நற்றுணையப்பரை. ப்: சந்தி. பணிந்து - வணங்கி. அணி - அழகைப் பெற்ற. நல் - நல்லவர்கள் கூடிய; வினையாலணையும் பெயர். சங்கத்தின் - சங்கத்தில். தரு - வழங்கும். முறை நெறி - முறையான வழியில். அக்கோயில் - அந்தத் திருக்கோயிலை. சார்ந்தமை - அடைந்த பான்மையை. அருளிச் செய்தார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 120-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'ஆலகாலவிடத்தின் கறையை அணிந்திருக்கும் திருக்கழுத்தைப் பெற்றவராகிய நற்றுணையப்பர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலில் விருப்பத்தோடு அந்த நற்றுணையப்பரை வணங்கி ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி வேதியர்கள் வாழ்த்துக்களைக் கூற எழுந்தருளி திருவலம்புரம் என்னும் சிவத்தலத்தில் நிலைபெற்றுத்

திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறை வராகிய வலம்புரி நாதேசுவரரை வணங்கி விட்டுத் தாம் பாடியருளும், ''கொடியுடை'' என்னும் தொடக்கத்தைப் பெற்ற திருப்பதிகத்தால் அந்த வலம்புரி நாதேசுவரரைத் துதித்துவிட்டு மேலே எழுந்தருளி நிரம்பிய நீர் வளத்தைப் பெற்ற அழகிய சாய்க்காட்டுக்குத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருளிச் சாயாவனேசுவரரை வணங்குவதற்கு எண்ணி அந்தச் சாய்க்காட்டுக்கு எழுந்தருளுபவரானார்.' பாடல் வருமாறு:

''கறையணி கண்டர் கோயில்
காதலால் பணிந்து பாடி
மறையவர் போற்ற வந்து
திருவலம் புரத்து மன்னும்
இறைவரைத் தொழுது பாடும்
'கொடியுடை' ஏத்திப் போந்து
நிறைபுனல் திருச்சாய்க் காடு
தொழுதற்கு நினைந்து செல்வார்.''

கறை - ஆலகால விடத்தை விழுங்கியமையால் அமைந்த கறையை. அணி - புனைந்து கொண்டிருக்கும். கண்டர் - திருக்கழுத்தைப் பெற்றவராகிய நற்றுணையப்பர். கோயில் - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலில். காதலால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். பணிந்து - அந்த நற்றுணையப்பரை வணங்கி. பாடி - ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி. மறையவர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்ற - வாழ்த்துக்களைக் கூற. வந்து - எழுந்தருளி. திருவலம்புரத்து - திருவலம்புரம் என்னும் சிவத்தலத்தில். மன்னும் - நிலை பெற்றுத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். இறைவரை - எங்கும் நிறைந்திருப்பவராகிய வலம்புரி நாததேசுவரரை. த்: சந்தி.

தொழுது - வணங்கி விட்டு. பாடும் - தாம் பாடியருளும். 'கொடியுடை' ஏத்தி - 'கொடியுடை' என்னும் தொடக்கத்தைப் பெற்ற திருப்பதிகத்தால் அந்த வலம்புரி நாதேசுவரரைத் துதித்து விட்டு. ப்: சந்தி. போந்து - மேலே எழுந்தருளி. நிறை - நிரம்பிய. புனல் - நீர்வளத்தைப் பெற்ற. திருச்சாய்க்காடு - அழகிய சாய்க்காட்டுக்கு. தொழுதற்கு - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருளிச் சாயாவனேசுவரரை வணங்குவதற்கு. நினைந்து - எண்ணி. செல்வார் - அந்தச் சாய்க்காட்டுக்கு எழுந்தருளுவாரானார்.

திருவலம்புரம்: இது சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் வலம்புரிநாதேசுவரர். அம்பிகை வருவகிர்க்கண் அம்மை. இதற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர் பெரும்பள்ளம் என்பது. இது திருவெண்காட்டிலிருந்து தென்கிழக்குத் திசையில் கால்மைல் தூரத்தில் உள்ளது. இது திருமால் வழிபட்டு வலம்புரிச் சங்கைப் பெற்ற தலம். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு திருநாவுக்கரசு நாயனார் ஒவ்வொரு சிவத்தலத்திற்கும் எழுந்தருளி அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைத் தரிசித்து விட்டு எழுந்தருளிய சமயத்தில் வலம்புரி நாதேசுவரர் திருநாவுக்கரசு நாயனாரைத் தாமே இந்தத் தலத்துக்கு வருவித்துத் தம்முடைய திவ்ய தரிசனத்தை வழங்கியருளிய தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றி பழம் பஞ்சுரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கொடையுடை மும்மதில் ஊடுருவக்
குனிவெஞ் சிலைதாங்கி
இடபடஎய்த அமரர்பிரான் அடியார்
இசைந் தேத்தத்

துடையிடை யாளை ஓர்பாகமாகத்
துதைந்தார் இடம்போலும்
வடிவுடை மேதி வயல்படியும்
வலம்புர நன்னகரே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடிய ஒரு திருநேரிசை வருமாறு:

"தெண்டிரை தேங்கி ஓதம்
சென்றடி வீழும் காலைத்
தொண்டிரைத் தண்டர் கோனைத்
தொழுதடி வணங்கி எங்கும்
வண்டுகள் மதுக்கள் மாந்தும்
வலம்புரத் தடிகள் தம்மைக்
கொண்டுநற் கீதம் பாடக்
குழகர்தாம் இருந்த வாறே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"மண்ணளந்த மணிவண்ணர் தாமும் மற்றை
மறையவனும் வானவரும் சூழ நின்று
கண்மலிந்த திருநெற்றி உடையார் ஒற்றைக்
கதநாகம் கையுடையார் காணீ ரன்றே
பண்மலிந்த மொழியவரும் யானும் எல்லாம்
பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல
மண்மலிந்த வயல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி னாரே."

இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்

எனக்கினி யவன்தமர்க் கினியவன் எழுமையும்
மனக்கினி யவன்றன் திடம்வலம் புரமே.''

திருச்சாய்க்காடு : இது சோழ நாட்டில் காவிரியாற் றின் கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண் டிருப்பவர் சாயாவனேசுவரர். அம்பிகை குயிலினும் நன்மொழி அம்மை. இது சாயாவனம் எனவும் வழங்கும். இது சீகாழிக்குத் தென்கிழக்குத் திசையில் 9-மைல் தூரத்தில் உள்ளது. இது உபமன்யு முனிவர் வழிபட்ட தலம். காசிக்கு நிகராகக் கூறும் ஆறு தலங்களில் இதுவும் ஒன்று. இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய பாசுரம் வருமாறு:

''நித்தலும் நியமம் செய்து நீலமலர் தூவிச்
சித்தம் ஒன்றவல் லார்க்கருளும் சிவன் கோயில்
மத்த யானையின் கோடும்வண் பீலியும் வாரித்
தத்து நீர்ப்பொன்னி சாகரம் மேவு சாய்க்காடே.''

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

''தோடுலாம் மலர்கள் தூவித்
தொழுதெழு மார்க்கண் டேயன்
வீடுநாள் அணுகிற் றென்று
மெய்கொள்வான் வந்த காலன்
பாடுதான் செல்லும் அஞ்சிப்
பாதமே சரண மென்னச்
சாடினார் காலன் மாளச்
சாய்க்காடு மேவி னாரே.''

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"வானத் திளமதியும் பாம்பும் தன்னில்
வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார் போலும்
தேனைத் திளைத்துண்டு வண்டு பாடும்
தில்லை நடமாடும் தேவர் போலும்
ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
நன்மையும் தீமையும் ஆனார் போலும்
தேனொத் தடியார்க் கினியார் போலும்
திருச்சாய்க்காட் டினிதுறையும் செல்வர் தாமே."

இந்தத் தலத்தைப் பற்றிய மற்றொரு பாசுரம் வருமாறு:

"நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாமம் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே."

*பிறகு வரும் 121-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'பாம்புகளாகிய அணிகலன்களை அணிபவராகிய பல்லவனேசுவரரைக் காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச் சுரத்தில் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய தலையை வளைத்துப் பணிந்து அந்தப் பல்லவனேசுவரரைத் துதித்து திருத்தமாக அமைந்திருக்கும் பண்ணினைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளிய பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு சுற்றி ஓடும் பூம்புகாராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் நெடுங்காலமாகத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பரிசுத்தராகிய சாயாவனேசுவரர் எழுந்தருளியிருக்கும் அழகிய சாய்க்காட்டில் நிலை பெற்று வாழும் சீர்த்தியைப் பெற்ற சாயாவனேசுவரருடைய திருத்தொண்டர்கள் எல்லாரும் மகிழ்ச்சியை அடைந்து அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி*

நாயனாரை அவருடைய எதிரிற் சென்று வரவேற்பதற்காகச் சென்றார்கள்.' பாடல் வருமாறு:

"பன்னகப் பூணி னாரைப்
பல்லவ னீச்ச ரத்துச்
சென்னியால் வணங்கி ஏத்தித்
திருந்திசைப் பதிகம் பாடிப்
பொன்னிசூழ் புகாரில் நீடு
புனிதர்தம் திருச்சாய்க் காட்டு
மன்னுசீர்த் தொண்டர் எல்லாம்
மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்கார்."

பன்னக - பாம்புகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். பூணினாரை - அணிகலங்களை அணிபவராகிய பல்லவ னேசுவரரை. பூண்: ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பல்லவனீச்சரத்து - காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சுரத்தில். ச்: சந்தி. சென்னியால் - தம்முடைய தலையை; உருபு மயக்கம். வணங்கி - வளைத்துப் பணிந்து. ஏத்தி - அந்தப் பல்லவனீச்சுரரைத் துதித்து. த்: சந்தி. திருந்து - திருத்தமாக அமைந்திருக்கும். இசை - பண்ணினைப் பெற்ற. ப்: சந்தி. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடி - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளி. ப்: சந்தி. பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரி ஆறு. சூழ் - சுற்றி ஓடும். புகாரில் - பூம்புகாராகிய காவிரிப் பூம்பட்டினத்தில். நீடு - நெடுங்கால மாகத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். புனிதர் தம் - பரிசுத்தராகிய சாயாவனேசுவரர். தம்: அசை நிலை. திரு - அழகிய. ச்: சந்தி. சாய்க்காட்டு - சாய்க் காட்டில். மன்னு - நிலைபெற்று வாழும். சீர் - சீர்த்தியைப் பெற்ற. த்: சந்தி. தொண்டர் - சாயாவனேசுவரருடைய திருத்தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாரும். மகிழ்ந்து -

மகிழ்ச்சியை அடைந்து. எதிர் கொள்ள - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அவருடைய எதிரிற் சென்று வரவேற்பதற்காக. ப்: சந்தி. புக்கார் - சென்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"அடையார்தம் புரங்கள் மூன்றும்
ஆரழ லிலழுந்த
விடையார் மேனியராய்ச் சீறும்
வித்தகர் மேயஇடம்
கடையார் மாடம் நீடிஎங்கும்
கங்குல் புறம்தடவப்
படையார் புரிசைப் பட்டினம்சேர்
பல்லவ னீச்சரமே."

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடிய ஒரு பாசுரம் வருமாறு:

"நாறு கூவிள நாகிள வெண்மதியத் தோ
டாறு சூடும் மமரர்பிரா னுறை கோயில்
ஊறு தேங்கனி மாங்கனி ஓங்கிய சோலைத்
தாறு தண்கத லிப்புதல் மேவுசாய்க் காடே."

அந்த நாயனார் சீகாமரப் பண்ணில் இந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மண்புகார் வான்புகுவார் மனமிளையார் பசியாலும்
கண்புகார் பிணியறியார் சுற்றாரும் கேட்டாரும்
விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெம் தலைவன்தாள் சார்ந்தாரே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"அரணிலா வெளிய நாவல்
அருநிழ லாக ஈசன்
வரணிய வாகித் தன்வாய்
நூலினாற் பந்தர் செய்ய
முரணிலாச் சிலந்தி தன்னை
முடியுடை மன்ன னாக்கித்
தரணிதான் ஆள வைத்தார்
சாய்க்காடு மேவி னாரே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"விண்ணோர் பரவநஞ் சுண்டார் போலும்
வியன்துருத்தி வேள்விக் குடியார் போலும்
அண்ணா மலையுறைஎம் அண்ணல் போலும்
அதியரைய மங்கை அமர்ந்தார் போலும்
பண்ணார் களிவண்டு பாடி ஆடும்
பராய்த்துறையுள் மேய பரமர் போலும்
திண்ணார் புகார்முத் தலைக்கும் தெண்ணீர்த்
திருச்சாய்க்காட் டினிதுறையும் செல்வர் தாமே."

பிறகு வரும் 122-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஆகாயத்தின் அளவும் உயரமாக உள்ள சாயாவனேசு வரருடைய ஆலயத்திற்கு முன்னால் உயரமாக விளங்கும் கோபுரத்திற்கு முன்பு இருக்கும் வாசலுக்குள் எழுந்தருளி அந்தத் திருக்கோயிலை வலமாக வந்து திருக்கோயிலுக்குள் நுழைந்து தேன் மலரும் கொன்றை மலர் மாலையை அணிந்தவராகிய அந்தச் சாயாவனேசுவரருடைய அழகிய

சந்நிதிக்கு எழுந்தருளி அந்த ஈசுவரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தம்முடைய இடக்கரத்தில் மான் குட்டியை ஏந்தியவராகிய அந்த ஈசுவரரை வாழ்த்துவாராகி ''மண்புகார்'' என்று ஒரு திருப்பதிகத்தைத் தொடங்கித் தம்முடைய திருமேனியில் உள்ள மாமிசங்கள் எல்லாம் உருக்கத்தை அடையுமாறு அந்த ஈசுவரரைத் துதித்து விட்டுத் தம்முடைய தலையின் மேல் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருக்கரங்களை வைத்துக் குவித்துக் கும்பிட்டார்.' பாடல் வருமாறு:

"வானள வுயர்ந்த வாயி
லுள்வலம் கொண்டு புக்குத்
தேனலர் கொன்றை யார்தம்
திருமுன்பு சென்று தாழ்ந்து
மானிடம் தரித்தார் தம்மைப்
போற்றுவார், 'மண்புகார்' என்
றூனெலாம் உருக ஏத்தி
உச்சிமேற் குவித்தார் செங்கை."

வான் அளவு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஆகாயம் வரையிலும். உயர்ந்த - உயரமாக உள்ள. வாயிலுள் - சாயாவனேசுவரருடைய ஆலயத்திற்கு முன்னால் உயரமாக விளங்கும் கோபுரத்திற்கு முன்பு இருக்கும் திருவாசலுக்கு உள்ளே. வலம் கொண்டு - எழுந்தருளி அந்தத் திருக்கோயிலை வலமாக வந்து. புக்கு - அந்த ஆலயத்துக்குள் நுழைந்து. த்: சந்தி. தேன் அலர் - தேன் மலரும். கொன்றை யார்தம் - கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டிருப்பவராகிய அந்தச் சாயாவனேசுவரருடைய. கொன்றை: ஆகுபெயர். தம்: அசைநிலை. திரு - அழகிய. முன்பு - சந்நிதிக்கு. சென்று -

எழுந்தருளி. தாழ்ந்து - அந்த ஈசுவரரைத் தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. மான் இடம் - தம்முடைய இடக்கரத்தில் மான்குட்டியை. தரித்தார் தம்மை - ஏந்தியவராகிய அந்தச் சாயாவனேசுவரரை. தம்: அசைநிலை. ப்: சந்தி. போற்றுவார் - வாழ்த்துவாராகி; முற்றெச்சம். 'மண்புகார்' என்று - 'மண்புகார்' என ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளத் தொடங்கி. ஊன் - தம்முடைய திருமேனியில் உள்ள மாமிசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - யாவும்; இடைக்குறை. உருக - பக்தியினால் உருக்கத்தை அடையுமாறு. ஏத்தி - அந்த ஈசுவரரைத் துதித்து விட்டு. உச்சிமேல் - தம்முடைய தலையின்மேல். செங்கை - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருக்கரங்களை வைத்து. கை: ஒருமை பன்மை மயக்கம். குவித்தார் - குவித்துக் கும்பிட்டார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட பாசுரம் சீகாமரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியது. அது வருமாறு:

"மண்புகார் வான்புகுவர் மனம்இளையார் பசியாலும்
கண்புகார் பிணிஅறியார் கற்றாரும் கேட்டாரும்
விண்புகார் எனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெம் தலைவன்தாள் சார்ந்தாரே."

பிறகு உள்ள 123-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செய்யுட்களுக்கு உரிய சீர்களோடு விளங்கிய இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்த திருக்கடைக் காப்பைப் பாடியருளி அந்தச் சாயாவனேசுவரரை வாழ்த்தி விட்டு இந்தப் பூமண்டலத்தில் பல்வேறு சிவத்தலங்களில்

வாழும் திருத்தொண்டர்கள் தம்மை வாழ்த்தி வணங்குமாறு நடப்பவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிறகும் அழகைப் பெற்றதும், உரிய பண் அமைந்ததும் ஆகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி அந்த ஈசுவரரைத் துதித்து விட்டு மேலே எழுந்தருளி எங்கும் நிறைந்திருப்பவராகிய வேதாரணியேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவெண் காட்டிற்குத் தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பியிருக்கும் உண்மையான விருப்பத்தோடும் அந்த வேதாரணியேசு வரரை வணங்குவதற்காக அந்த நாயனார் வேதாரணி யத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"சீரினில் திகழ்ந்த பாட்டில்
திருக்கடைக் காப்புப் போற்றிப்
பாரினிற் பொலிந்த தொண்டர்
போற்றிடப் பயில்வார் பின்னும்
ஏரிசைப் பதிகம் பாடி
ஏத்திப்போந் திறைவர் வெண்கா
டாருமெய்க் காத லோடும்
பணிவதற் கணைந்தார் அன்றே."

*சீரினில்* - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செய்யுட்களுக்கு உரிய சீர்களோடு; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். திகழ்ந்த - விளங்கிய. பாட்டில் - இறுதிப் பாசுரத்தில். திருக்கடைக் காப்பு - தம்முடைய திருநாமத்தை வைத்த திருக்கடைக் காப்பை. ப்: சந்தி. போற்றி - வாழ்த்திப் பாடியருளி. ப்: சந்தி. பாரினில் - இந்தப் பூமண்டலத்தில் பல் வேறு சிவத்தலங்களில். பொலிந்த - விளங்கி வாழும். தொண்டர் - திருத்தொண்டர் கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்றிட - தம்மை வாழ்த்தி வணங்குமாறு. ப்: சந்தி. பயில்வார் - ஒழுகு பவராகிய

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பின்னும் - பிறகும். ஏர் - அழகைப் பெற்றதும்; வினையாலணையும் பெயர். இசை - உரிய பண் அமைந்ததும்; வினையாலணை யும் பெயர் ப்: சந்தி. பதிகம் - ஆகிய ஒரு திருப்பதிகத்தை. பாடி - பாடியருளி. ஏத்தி - ஈசுவரரைத் துதித்துவிட்டு. ப்: சந்தி. போந்து - அப்பால் எழுந்தருளி. இறைவர் - எங்கும் நிறைந்திருப்பவராகிய வேதாரணியேசுவரர். வெண்காடு - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவெண் காட்டிற்கு. ஆரும் - தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பி யிருக்கும். மெய் - உண்மையான. க்: சந்தி. காதலோடும் - விருப்பத்தோடும். பணிவதற்கு - அந்த வேதாரணியேசு வரரை வணங்குவதற்காக. அணைந்தார் - அந்த நாயனார் வேதாரணியத்தை அடைந்தார். அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

பிறகு வரும் 124-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தங்கத்தைப் போன்ற இதழ்களைப் பெற்ற கொன்றை மலர் மாலையும், வன்னி பத்திரமும், கங்கையாற்றின் நீரும், இளம் பருவத்தைப் பெற்ற பிறைச்சந்திரனும் நெடுங்காலமாகத் தங்கியுள்ள தலையைப் பெற்றவராகிய வேதாரணியேசுவரர் திருக்கோ யில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவெண்காட்டில் வாழும் திருத்தொண்டர்கள் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில் போய் அந்த இடத்தில் இத்தகைய மனப்பான்மையை உடைய தங்களுடைய திருவுள்ளங்களில் பொங்கி எழ நிலைபெற்று விளங்கும் சீர்த்தியைக் கொண்ட சண்பையாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அந்தத் தொண்டர்கள் அழைத்துக் கொண்டு வேதாரணியேசுவரருடைய திருக்கோயிலுக்குள் நுழைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"பொன்னிதழிக் கொன்றை வன்னி
புனல்இள மதியம் நீடு
சென்னியர் திருவெண் காட்டுத்
திருத்தொண்டர் எதிரே சென்றங்
கின்னதன் மையர்க ளானார்
எனவொணா மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர்ச் சண்பை ஆளும்
மன்னரைக் கொண்டு புக்கார்."

பொன் - தங்கத்தைப் போன்ற; உவம ஆகுபெயர். இதழி - இதழ்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொன்றை - கொன்றை மலர் மாலையும்; ஆகு பெயர். வன்னி - வன்னி பத்திரமும். பத்திரம் - இலை. புனல் - கங்கையாற்றின் நீரும். இள - இளம்பருவத்தைக் கொண்ட. மதியம் - பிறைச் சந்திரனும். நீடு - நெடுங்காலமாகத் தங்கியுள்ள. சென்னியர் - தலையைப் பெற்றவராகிய வேதாரணியேசுவரர். திருவெண்காட்டு - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவெண் காட்டில். த்: சந்தி. திருத்தொண்டர் - வாழும் திருத் தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எதிர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில். ஏ: அசைநிலை. சென்று - போய். அங்கு - அந்த இடத்தில். இன்ன - இத்தகைய. தன்மையர்கள் - மனப்பான்மையை உடையவர்கள். ஆனார் - ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று கூற; இடைக்குறை. ஒணா - முடியாத; இடைக்குறை. மகிழ்ச்சி - பேரானந்தம். பொங்க - தங்களுடைய திருவுள்ளங்களில் பொங்கி எழ. மன்னு - நிலைபெற்று விளங்கும். சீர் - சீர்த்தியைக் கொண்ட. ச்: சந்தி. சண்பை - சண்பையாகிய சீகாழியை. ஆளும் - ஆட்சி புரிந்தருளும். மன்னரை - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. க்: சந்தி. கொண்டு - அழைத்துக் கொண்டு. புக்கார் -

வேதாரணியேசுவரருடைய திருக் கோயிலுக்குள் நுழைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து உள்ள 125-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'முத்தமிழ் விரகராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய வேதாரணியேசுவரருடைய திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுரத்துக்கு முன்னால் தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய மகிழ்ச்சியோடும் எழுந் தருளித் தரையில் விழுந்து வேதாரணியேசுவரரை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்து வேதாரணியேசு வரருடைய பக்தர்களாக விளங்கும் அடியேர்கள் தம்மைச் சுற்றி வரப் பரமேசுவரராகிய வேதாரணியேசுவரருடைய திருக்கோயிலைச் சுற்றி வலமாக வந்து என்றும் அழியாமல் இருப்பவராகிய அந்த ஈசுவரருடைய சந்நிதியை அடைந்து தரையிற் படியுமாறு விழுந்து அந்த ஈசுவரரை வணங்கித் தரையின் மேல் விழுந்தார்.' பாடல் வருமாறு:

"முத்தமிழ் விரகர் தாமும்
முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தம்நீ டுவகை யோடும்
சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்
பத்தராம் அடியார் சூழப்
பரமர்கோ யிலைச்சூழ் வந்து
நித்தனார் தம்முன் பெய்தி
நிலமுறத் தொழுது வீழ்ந்தார்."

முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்னும் மூன்று பகுதிகளைப் பெற்ற செந்தமிழ் மொழியில். விரகர் தாமும் - வல்ல வித்தகராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும்.

தாம்: அசைநிலை. முதல்வர் - எல்லாத் தேவர்களுக்கும் மேலான முதல் தேவராகிய வேதாரணியேசுவரருடைய. கோபுரத்து - திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுரத்திற்கு. முன்னர் - முன்னால். ச்: சந்தி. சித்தம் - தம்முடைய திருவுள்ளத்தில். நீடு - உண்டாகிய. உவகையோடும் - ஆனந்தத்தோடும். சென்று - எழுந்தருளி. தாழ்ந்து - தரையில் விழுந்து வேதாரணியேச்வரரை வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. புக்கு - திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்து. ப்: சந்தி. பத்தராம் - வேதாரணியேசுவரருடைய பக்தர்களாக விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். சூழ - தம்மைச் சுற்றி வர. ப்: சந்தி. பரமர் - பரமேசுவரராகிய வேதாரணியேசு வரருடைய. கோயிலை - திருக்கோயிலை. ச்: சந்தி. சூழ் வந்து - சுற்றி வலமாக வந்து. நித்தனார் தம்முன்பு - என்றும் அழியாமல் இருப்பவராகிய அந்த வேதாரணியேசு வரருடைய சந்நிதியை. தம்: அசை நிலை. எய்தி - அடைந்து. நிலம்உற - தரையில் படியுமாறு. த்: சந்தி. தொழுது - அந்த ஈசுவரரை வணங்கி. வீழ்ந்தார் - தரையின் மேல் விழுந்தார்.

பிறகு வரும் 126-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் உண்மையான பரம் பொருளாக விளங்குபவரும், திருவெண்காட்டில் விரும்பி எழுந்தருளியிருப்பவரும் ஆகிய வேதாரணியேசுவரரைப் பிறரால் பாடுவதற்கு அருமையாகத் திகழும் ஒரு திருப்பதிகமாகிய மாலையை, ''கண்காட்டு நுதல்'' என்ற முதற் பகுதியை முன்னால் சேர்த்து அமைத்துத் தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டை களாகிய மூன்று புரங்களையும் அழித்தவராகிய

வேதாரணியேசுவரருடைய திருவடிகளைச் சார்ந்து விளங்குபவையாகிய அந்த வேதாரணியேசுவரருடைய சந்திரன், சூரியன், அக்கினி என்னும் மூன்று திருக்கண் களிலிருந்து தோன்றிய துளிகளின் வடிவமாகிய மூன்று திருக்குளங்களையும் பாடியருளி ஒப்புக் கூறுவதற்கு அருமையாக இருக்கும் சிவஞானப் பாலைச் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டு மலையின்மேல் வீற்றிருக்கும் பெரியநாயகியார் தம் முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத் தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானப் பாலைக் குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து அந்த வேதாரணியேசுவரரைத் துதித்துப் பேரானந்தத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"மெய்ப்பொரு ளாயி னாரை
வெண்காடு மேவி னாரைச்
செப்பரும் பதிக மாலை
"கண்காட்டு நுதல்"முன் சேர்த்தி
முப்புரம் செற்றார் பாதம்
சேரும்முக் குளமும் பாடி
ஒப்பரும் ஞானம் உண்டார்
உளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார்."

மெய்ப் பொருள் ஆயினாரை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் உண்மையான பரம்பொருளாக விளங்குபவரும். வெண்காடு - திருவெண்காட்டில். மேவினாரை - விரும்பி எழுந்தருளியிருப்பவரும் ஆகிய வேதாரணியேசுவரரை. ச்: சந்தி. செப்பரும் - பிறரால் பாடுவதற்கு அருமையாகத் திகழும். செப்பு : முதல் நிலைத் தொழிற் பெயர். பதிகம் - ஒரு திருப்பதிகமாகிய. மாலை - மாலையை. "கண்காட்டு நுதல்" முன் - 'கண் காட்டு நுதல்'

என்ற முதற் பகுதியை. சேர்த்தி - முன்னால் சேர வைத்து. முப்புரம் - தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை; ஒருமை பன்மை மயக்கம். செற்றார் - அழித்தவராகிய வேதாரணியேசு வரருடைய. பாதம் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். சேரும் - சார்ந்து விளங்கும். முக்குளமும் - அந்த வேதாரணியேசுவரருடைய திருக் கண்களாகிய சந்திரன், சூரியன், அக்கினி என்னும் மூன்றிலிருந்து தோன்றிய துளிகள் சேர்ந்த வடிவமாகிய சந்திர தீர்த்தம், சூரிய தீர்த்தம், அக்கினி தீர்த்தம் என்னும் மூன்று திருக்குளங்களையும். குளம்: ஒருமை பன்மை மயக்கம். பாடி - பாடியருளி. ஒப்பரும் - ஒப்புக் கூறுவதற்கு அருமையாக இருக்கும். ஞானம் - சிவ ஞானப் பாலை. உண்டார் - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டுமலையின்மேல் வீற்றிருக்கும் பெரியநாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவ ஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானப் பாலைக் குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். உளம் - தம்முடைய திருவுள்ளத்தில்; இடைக்குறை. மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. ஏத்தி - அந்த வேதாரணியேசுவரரைத் துதித்து. வாழ்ந்தார் - பேரானந்தத்தை அடைந்தார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்டுள்ள, ''கண்காட்டு நுதல்'' என்னும் சொற்றொடர் வரும் பாசுரம் வருமாறு:

''கண்காட்டும் நுதலானும் கனல்காட்டும் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டும் சடையானும்
மண்காட்டும் இசையானும் பயில்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டும் கொடியானே.''

இந்தப் பாசுரம் சீகாமரப்பண் அமைந்தது.

திருவெண்காடு: இது சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் சுவேதாரணியேசுவரர். அம்பிகை பிரம்மவித்யாநாயகி. தீர்த்தங்கள் சோம தீர்த்தம், சூரிய தீர்த்தம், அக்கினி தீர்த்தம் என்னும் மூன்று திருக்குளங்கள். இது சீகாழிக்குத் தென்கிழக்குத் திசையில் ஏழு மைல் தூரத்தில் உள்ளது. இந்திரனுடைய வாகனமான ஐராவதம் என்னும் வெள்ளை யானை வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது. தேவர்களினுடைய அரசனாகிய இந்திரன் வழிப்பட்ட தலம் இது.

''காழுற்ற தந்தம் அறஏகி வெண்காட்டில் ஈசன்
கேழுற்ற தாளர்ச் சனைசெய்து கிடைத்து வைகும் வேழம்''

என்று கந்த புராணத்தில் திருவிளையாட்டுப் படலத்தில் வருவதைக் காண்க.

இந்தத் தலத்தில் உள்ள மூன்று குளங்களிலும் நீராடுபவர்களுக்கு நினைத்த காரியம் தவறாமல் நிறை வேறும் என்று ஆன்றோர் கூறுவர். இந்தச் செய்தியைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய பின்வரும் பாசுரத்தால் தெரிந்து கொள்ளலாம்.

''பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளம்நினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோயவினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே.''

அந்த நாயனார் சீகாமரப் பண்ணில் பாடியருளிய பின் வரும் பாசுரத்தில் ஐராவதம் பணிந்த செய்தியைக் காணலாம். அந்தப் பாசுரம் வருமாறு:

"சக்கரம்மாள சீந்தானும் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமேல் அசைத்தானும் அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம்நன் குடையானும் முக்கணுடை இறையவனே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"கொள்ளி வெந்தழல் வீசிநின் றாடுவார்
ஒள்ளி யகணம் சூழுமை பங்கனார்
வெள்ளி யன்கரி யன்பசு ஏறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடைநெஞ்சே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச்
சூலம்கை ஏந்தியோர் சுழல்வாய் நாகம்
பூண்டு பொறியரவம் காதிற் பெய்து
பொற்சடைகள் அவைதாழப் புரிவெண் ணூலர்
நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி
நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சம் கொண்டார்
வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே."

இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"படம்கொள் நாகம் சென்னி சேர்த்திப்
பாய்பு லித்தோல் அரையில் வீக்கி
அடங்க லார்ஊர் எரியச் சீறி
அன்று மூவர்க் கருள்பு ரிந்தீர்
மடங்க லானைச் செற்று கந்தீர்
மனைகள் தோறும் தலைகை ஏந்தி

விடங்க ராகித் திரிவ தென்னே
வேலை சூழ்வெண் காட னீரே."

பிறகு வரும் 127-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரிவதற்கு அருமையாக உள்ள இயல்போடு சுவேதவனேசு வரருடைய திருக்கோயிலுக்கு வெளியில் எழுந்தருளி அந்தச் சுவேதவனேசுவரரைப் பணிந்து விட்டு அந்தத் திருவெண்காட்டில் தாம் தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் தென் திருமுல்லைவாயிலை அடைந்து முல்லைவன நாதருக்குச் செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை அணிந்து விட்டுச் செந்தமிழ் நாட்டில் விளங்கிய வேறு சிவத்தலங்களுக்கும் எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைப் பணிபவராகி வேதியர்கள் தம்மைத் துதிக்க பல வகை மரங்கள் மிகுதியாக வளர்ந்து நிற்கும் புகலியாகிய சீகாழிக்குத் திருவெண்காட்டிலிருந்து எழுந்தருளி வந்து சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"அருமையாற் புறம்பு போந்து
வணங்கிஅங் கமரும் நாளில்
திருமுல்லை வாயில் எய்திச்
செந்தமிழ் மாலை சாத்தி
மருவிய பதிகள் மற்றும்
வணங்குவார் மறையோர் ஏத்தத்
தருமலி புகலி வந்து
சம் பந்தர் சார்ந்தார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. சம்பந்தர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி

நாயனார். அருமையால் - பிரிவதற்கு அருமையாக உள்ள இயல்போடு; உருபு மயக்கம். புறம்பு - சுவேதவனேசுவரருடைய திருக்கோயிலுக்கு வெளியில். போந்து - எழுந்தருளி. வணங்கி - அந்தச் சுவேதவனேசு வரைப் பணிந்து விட்டு. அங்கு - அந்தத் திருவெண் காட்டில். அமரும் - தாம் தங்கிக் கொண்டிருக்கும். நாளில் - காலத்தில். திருமுல்லைவாயில் - தென்திரு முல்லை வாயிலை. எய்தி - அடைந்து. ச்: சந்தி. செந்தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. சாத்தி - முல்லைவனநாதருக்கு அணிந்துவிட்டு. மருவிய - செந்தமிழ் நாட்டில் விளங்கிய. பதிகள் மற்றும் - வேறாக உள்ள சிவத்தலங்களுக்கும். வணங்குவார் - எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் களைப் பணிபவராகி; முற்றெச்சம். மறையோர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஏத்த - தம்மைத் துதிக்க. த்: சந்தி. தரு - பலவகை மரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மலி - மிகுதியாக வளர்ந்து நிற்கும். புகலி - புகலியாகிய சீகாழிக்கு. வந்து - திருவெண்காட்டிலிருந்து எழுந்தருளி வந்து. சார்ந்தார் - சேர்ந்தார்.

தென்திருமுல்லைவாயில்: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் முல்லை வன நாதர். அம்பிகை கோதை அம்மை. இந்தத் தலம் சீகாழிக்குக் கிழக்குத் திசையில் ஐந்து மைல் தூரத்தில் கடற்கரையில் உள்ளது. இது தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனும் சுதர்மன் என்பவனும் வழிபட்ட தலம். இந்தத் தலத்தைப் பற்றிப் பியந்தைக் காந்தாரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"வரைவந் தெடுத்த வலிவாள் அரக்கன்
முடிபத்தும் இற்று நெரிய
உரைவந்த பொன்னின் உருவந்த மேனி
உமைபங்கன் எங்கள் அரனூர்
வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து
மிளிர்கின்ற பொன்னி வடபால்
திரைவந்து வந்து செறிதேறல் ஆடு
திருமுல்லை வாயில் இதுவே."

*பிறகு வரும் 128-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டுமலையின் மேல் இருக்கும் தோணியில் அமர்ந் திருந்தவராகிய தோணியப்பரை வணங்கிவிட்டு அந்தத் தோணியப்பருடைய சந்நிதியில் நின்று கொண்டு பரிசுத்தமாக உள்ள உரையாணியாக விளங்கும் ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி திருவருளால் தாம் பெற்றிருக்கும் பெருமையைப் பெற்று விளங்கும் நல்ல வாழ்வு மிகுதியான சிறப்போடு அமைய ஆகாயத்தளவும் உயரமாக நிற்கும் மாடங்கள் சிறந்து ஓங்கித் திகழும் அழகிய சிவத்தலமாகிய அந்தச் சீகாழியில் சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய தோணியப்பரை ஒவ்வொரு தினமும் வாழ்த்தி வணங்கிய விருப்பத்தில் மிக்க சிறப்போடு அந்த நாயனார் விளங்கினார்.' பாடல் வருமாறு:*

"தோணிவீற் றிருந்தார் தம்மைத்
தொழுதுமுன் நின்று தூய
ஆணியாம் பதிகம் பாடி
அருட்பெரு வாழ்வு கூரச்
சேணுயர் மாடம் ஓங்கும்
திருப்பதி அதனிற் செய்ய

வேணியார் தம்மை நாளும்
போற்றிய விருப்பின் மிக்கார்."

தோணி - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் விளங்கும் கட்டுமலையின்மேல் இருக்கும் தோணியில். வீற்றிருந்தார் தம்மை - அமர்ந்திருந்தவராகிய தோணியப்பரை. தம்: அசை நிலை. த்: சந்தி. தொழுது - வணங்கி விட்டு. முன் - அந்தத் தோணியப்பருடைய சந்நிதியில். நின்று - நின்று கொண்டு. தூய - பரிசுத்தமாக உள்ள. ஆணியாம் - மற்றத் திருப்பதிகங்களாகிய பொன்னின் மாற்றை உரைத்துப் பார்க்கும் உரையாணியாக விளங்கும். பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடி - அந்த நாயனார் பாடியருளி. அருள் - திருவருளால். பெரு வாழ்வு - தாம் பெற்றிருக்கும் பெருமையைப் பெற்று விளங்கும் நல்ல வாழ்வு. கூர - மிகுதியான சிறப்போடு அமைய. ச்: சந்தி. சேண்டு - ஆகாயத்தளவும். உயர் - உயரமாக நிற்கும். மாடம் - மாடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஓங்கும் - சிறந்து ஓங்கித் திகழும். திருப்பதி - அழகிய சிவத்தலமாகிய. அதனில் - அந்தச் சீகாழியில். செய்ய - சிவந்த. வேணியார் தம்மை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய தோணியப்பரை. தம்: அசைநிலை. நாளும் - ஒவ்வொரு தினமும். போற்றிய - வாழ்த்தி வணங்கிய. விருப்பில் - விருப்பத்தில். மிக்கார் - மிக்க சிறப்போடு அந்த நாயனார் விளங்கினார்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருத்தோணி புரத்தைப் பற்றிப் பழந்தக்கராகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே ஒளிமதியத்

துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்நிலைமை பரிந்தொருகாற் பகராயே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருவிராகப் பாசுரம் வருமாறு:

"சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி
அங்கமுடன் மேலுற அணிந்துபிணி தீரஅருள் செய்யும்
எங்கள்பெரு மானிடமெனத் தகுமுனைக் கடலின் முத்தம்
துங்கமணி இப்பிகள் கரைக்குவரு தோணிபுர மாமே."

அந்த நாயனார் அந்தத் தலத்தைப் பற்றிப் பழம் பஞ்சுரப் பண்ணில் பாடியருளிய மற்றொரு பாசுரம் வருமாறு:

"மெய்யார் வில்லியைக் காய்ந்து சாதற்
காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்மால் மகிழ்ந்த
அற்புதம் செப்பரிதால்
பெரும்பக லேவந்தென் பெண்மை கொண்டு
பேரித்தவர் சேர்ந்தஇடம்
சுரும்பமரம் சோலைகள் சூழ்ந்த செம்மைத்
தோணிபுரம் தானே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"மாதி யன்று மனைக்கிரு என்றங்கால்
நீதி தான்சொல் நீஎனக் காரெனும்
சோதி யார்தரு தோணி புரவர்க்குத்
தாதி ஆவன்நான் என்னுமென் னைதயலே."

பிறகு உள்ள 129-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவ்வாறு சீகாழியில் தங்கிக் கொண்டிருக்கும் அந்தக் காலத்தில்

கிழக்குத் திசையில் இருக்கும் மயேந்திரப் பள்ளியும் நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்திருக்கும் பல வகையான மரங்கள் வளர்ந்து நிற்கும் பூஞ்சோலையைப் பெற்ற திருக்கோவூரும், திருமுல்லைவாயிலும் அடங்கத் தாம் எழுந்தருளிய சிவத்தலங்கள் எல்லாவற்றிலும் இன்பம் உண்டாகுமாறு அந்தச் சிவத்தலங்களில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான்களை வணங்கித் துதித்துத் தையலாளாகிய உமாதேவியைத் தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்தவராகிய சிவ பெருமானாரை அந்த நாயனார் செந்தமிழ் மொழியில் அமைந்த சொற்கள் அடங்கிய மாலையாகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"வைகும்அந் நாளிற் கீழ்பால்
மயேந்திரப் பள்ளி வாசம்
செய்பொழிற் குருகா வூரும்
திருமுல்லை வாயில் உள்ளிட்
டெய்திய பதிகள் எல்லாம்
இன்புற இறைஞ்சி ஏத்தித்
தையலாள் பாகர் தம்மைப்
பாடினார் தமிழ்ச்சொல் மாலை."

வைகும் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவ்வாறு சீகாழியில் தங்கிக் கொண்டிருக்கும். அந்நாளில் - அந்தக் காலத்தில். கீழ்பால் - சீகாழிக்குத் கிழக்குத் திசைப் பக்கத்தில் உள்ள. மயேந்திரப் பள்ளி - மயேந்திரப் பள்ளியும்: வாசம் - நறுமணம். செய் - கமழும். பொழில் - மலர்கள் மலர்ந்திருக்கும் பலவகையான மரங்கள் வளர்ந்து நிற்கும் பூஞ்சோலையைப் பெற்ற. குருகாவூரும் - திருக்குருகாவூம். திருமுல்லைவாயில் - தென்திருமுல்லை வாயில். உள்ளிட்டு - அடங்கியிருக்க. எய்திய - தாம் எழுந்தருளிய. பதிகள் -

சிவத்தலங்கள். எல்லாம் - எல்லாவற்றிலும். இன்புற - இன்பம் உண்டாகுமாறு. இறைஞ்சி - அந்தச் சிவத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கி. ஏத்தி - துதித்து. த்: சந்தி. தையலாள் - இளமையைப் பெற்றவளாகிய உமாதேவியை. பாகர் தம்மை - தம்முடைய வாம பாகத்தில் எழுந்தருளச் செய்தவராகிய சிவபெருமானாரை. தம்: அசை நிலை. ப்: சந்தி. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. சொல் - சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். மாலை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. பாடினார் - அந்த நாயனார் பாடியருளினார்.

திருமயேந்திரப்பள்ளி: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் திருமேனி அழகர். அம்பிகை வடிவாம்பிகை. இது ஆச்சாபுரத்தி லிருந்து வடகிழக்குத் திசையில் நான்கு மைல் தூரத்தில் உள்ளது. சந்திரன். சூரியன், பிரமதேவன், இந்திரன் ஆகியவர்கள் வழிபட்ட தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றிக் கொல்லிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"திரைதரு பவளமும் சீர்திகழ் வயிரமும்
கரைதரும் அகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலா எயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவவரை அழகனை அடியிணை பணிமினே."

திருக்குருகாவூர்: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் வெள்ளிடை ஈசுவரர். அம்பிகை காவியங்கண்ணி அம்மை. இந்தச் சிவத்தலம் இந்தக் காலத்தில் திருக்கடாவூர் என வழங்குகிறது. இது சீகாழிக்குக் கிழக்குத் திசையில் நான்கு மைல் தூரத்தில் உள்ளது. சீகாழியிலிருந்து இந்தத் தலத்திற்கு

எழுந்தருளிய சுந்தர மூர்த்தி நாயனாருக்கும் அவருடன் வந்த பரிவார மக்களுக்கும் வெள்ளிடை ஈசுவரர் கட்டுச் சோறும் தண்ணீரும் வழங்கியருளிய தலம் இது. இந்தச் சிவத்தலம் திருக்குருகாவூர் வெள்ளடை எனவும் வழங்கும். இதைப் பற்றி அந்தாளிக் குறிஞ்சிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சுண்ணவெண் ணீறணி மார்பில் தோல்புனைநீ
தெண்ணரும் பலகணம் ஏத்தநின் றாடுவர்
விண்ணமா பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனிஎம் பிஞ்ஞக னாரே."

இந்தத் தலத்தைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"இத்தனை யாமற்றை அறிந்திலேன் எம்பெருமான்
பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே."

பின்பு வரும் 130-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'உண்மையான முறையில் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானப் பாலைக் குடித்தருளிய மறையவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்த முறையில் பக்கத்தில் சுற்றியுள்ள சிவத்தலங்களுக்கு எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஹரனார்களுடைய தங்கத்தைப் போன்ற திருவடிகளை அந்தச் சிவத்தலங்களில் வாழும் பக்தர்களோடு சேர்ந்து

கொண்டு அந்தச் சிவபெருமான்களை வாழ்த்தி வணங்கி விட்டு இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்களுக்கு உஜ்ஜீவனத்தை அடையும் விதத்தை உதவும் பான்மையைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளி எந்த வகையான சாதிகளில் பிறந்த மக்களும் துதிக்க எங்கும் நிறைந்தவராகிய சிவபெருமானாரைத் துதித்து வணங்கும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"அவ்வகை மருங்கு சூழ்ந்த பதிகளில் அரனார் பொற்றாள்
மெய்வகை ஞானம் பெற்ற வேதியர் விரவிப் போற்றி
உய்வகை மண்ணு ளோருக் குதவிய பதிகம் பாடி
எவ்வகை யோரும் எத்த இறைவரை ஏத்தும் நாளில்."

இந்தப் பாடல் குளகம். மெய்வகை - உண்மையான முறையில். ஞானம் - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்து வழங்கிய சிவஞானப் பாலை. பெற்ற - குடித்தருளப் பெற்ற. வேதியர் - மறையவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அவ்வகை - அந்த முறையில். மருங்கு - திருக்குருகாவூர் வெள்ளடைக்குப் பக்கத்தில். சூழ்ந்த - சுற்றியுள்ள. பதிகளில் - சிவத்தலங்களுக்கு எழுந்தருளி; உருபு மயக்கம். அரனார் - அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் ஹரனார்களாகிய சிவபெருமான்களுடைய. பொன் - தங்கத்தைப் போன்ற: உவம ஆகுபெயர். தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். விரவி - அந்தச் சிவத்தலங்களில் வாழும் பக்தர்களோடு தாமும் சேர்ந்து கொண்டு. ப்: சந்தி. போற்றி - அந்தச் சிவபெருமான்களை வாழ்த்தி வணங்கி விட்டு. மண் - இந்த மண்ணுலகத்தில். உளோருக்கு - வாழும் மக்களுக்கு; ஒருமை பன்மை

மயக்கம்; இடைக்குறை. உய்வகை - உஜ்ஜீவனத்தை அடையும் விதத்தை. உதவிய - உதவும் பான்மையைப் பெற்ற. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடி - அந்த நாயனார் பாடியருளி. எவ்வகையோரும் - எந்த வகையான சாதிகளில் பிறந்த மக்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஏத்த - துதிக்குமாறு. இறைவரை - எங்கும் நிறைந்தவர்களாகிய அந்தச் சிவபெருமான்களை; ஒருமை பன்மை மயக்கம். ஏத்தும் - தாம் துதிக்கும். நாளில் - காலத்தில்.

*பின்பு உள்ள 131-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

'திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தெளிவாக உள்ள அமிர்தத்தைப் போலத் தம்மிடம் எழுந்து வரும் பான்மையைப் பெற்ற இசைப் பாடல்களைப் பாடும் அந்தப் பெரும்பாணருடைய தர்மபத்தினியாராகிய மதங்க சூளாமணியார் என்ற திருநாமத்தைக் கொண்ட மாதரசியார் ஒருமைப்பாட்டைக் கொண்ட திருவுள்ளப் பான்மையோடு ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய வெற்றிக்கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளைப் பணிவதற்காக இனிமையாகிய இசைப் பாடல்களை வழங்கும் பான்மையைப் பெற்ற தம்முடைய யாழினை எடுத்துக் கொண்டு சண்பையாகிய சீகாழிக்கு வந்து சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை இசைப்பாட்டு மதங்கசூ ளாமணியார்
ஒருநீர்மை யுடன்உடைய பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார்."

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் - திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார். தெள் - தெளிவாக உள்ள. அமுதின் - அமிர்தத்தைப் போல. வரு - தம்மிடம் எழுந்து

வரும். நீர்மை - பான்மையைப் பெற்ற. இசைப் பாட்டு - சங்கீதத்துக்குரிய பாடல்களைப் பாடும்; ஒருமை பன்மை மயக்கம். மதங்கசூளாமணியார் - அந்தப் பெரும் பாணருடைய தர்மபத்தினியாராகிய மதங்கசூளாமணியார் என்ற திருநாமத்தைக் கொண்ட மாதரசியார். ஒருநீர்மை யுடன் - ஒருமைப்பாட்டைக் கொண்ட திருவுள்ளப் பான்மையோடு. உடையபிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகு பெயர். வணங்க - பணிவதற்காக. த்: சந்தி. தரு - இனிமையாகிய இசைப் பாடல்களை வழங்கும். நீர்மை - பான்மையைப் பெற்ற. யாழ் - தம்முடைய பெரிய யாழினை. கொண்டு - எடுத்துக் கொண்டு. சண்பையில் - சண்பையாகிய சீகாழிக்கு; உருபு மயக்கம். ஏ: அசைநிலை. வந்து அணைந்தார் - வந்து சேர்ந்தார்.

அடுத்து வரும் 132-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார் சீகாழிக்கு வந்த வருகையைத் தெரிந்து கொண்டு தம்மை ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தப் பெரும்பாணருக்கு எதிரில் சென்று வரவேற்க அந்தப் பெரும்பாணர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய வண்டுகள் படிந்து மொய்க்கும் இரண்டு செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தாம் விழையும் பேராவலோடு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் துதித்து உண்மையான வார்த்தைகளால்

தோத்திரங்களைப் புரிந்து தம்மிடம் வரும் தன்மையை வழங்கும் நல்ல வாழ்வு வந்து தம்மை அடைய மகிழ்ச்சியில் தலை சிறந்து நின்றார்.' பாடல் வருமாறு:

"பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையார் எதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதம் தொழு தெழுந்து
விரும்பார்வத் தொடும்ஏத்தி மெய்ம்மொழிக ளால்துதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார்."

பெரும் பாணர் - அவ்வாறு அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார். வரவு - சீகாழிக்கு வந்த வருகையை. அறிந்து - தெரிந்து கொண்டு. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எதிர் கொள்ள - அந்தப் பெரும்பாணருக்கு எதிரில் சென்று வரவேற்க. ச்: சந்தி. சுரும்பு - அந்தப் பெரும்பாணர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர் - படிந்து மொய்க்கும். செங்கமல மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம்; உவம ஆகுபெயர். த்: சந்தி. துணை - இரண்டு. ப்: சந்தி. பாதம் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தரையில் விழுந்து வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. விரும்பு - தாம் விழையும். ஆர்வத்தொடும் - பேராவலோடு. ஏத்தி - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் துதித்து. மெய் - உண்மையான. ம்: சந்தி. மொழிகளால் - வார்த்தைகளால். துதித்து - தோத்திரங்களைப் புரிந்து. வரும் - தம்மிடம் வரும். பான்மை - தன்மையை. தரு - வழங்கும். வாழ்வு - நல்ல வாழ்வு. வந்து எய்த - வந்து தம்மை அடைய. மகிழ் - மகிழ்ச்சியில். சிறந்தார் - தலை சிறந்து நின்றார்.

பின்பு வரும் 133-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அளவு இல்லாத மகிழ்ச்சியை அடைந்தவராகிய திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பார்த்து, "ஐயரே, நீங்கள் உங்களுடைய திருவுள்ளம் மகிழ்ச்சியை அடையுமாறு இந்தச் சீகாழிக்கு வந்து சேர்ந்த உறுதியான செயலை அடியேங்கள் பெற்றிருக்கிறோம்" எனக் கூறி இளம் பருவத்தைப் பெற்ற நிலாவை வீசும் சந்திரனைப் போன்ற சிரிப்புத் தம்மிடம் அரும்ப அவ்வாறு கூறியவராகிய அந்தப் பெரும்பாணரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு தம்முடைய திருக்கழுத்தில் மேவும் ஆலகால விடத்தைப் புனைந்து கொண்டவராகிய பிரமபுரீசரிடம் எழுந்தருளி அடையும் கவுண்டின்ய கோத்திரத்தில் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.' பாடல் வருமாறு:

"அளவிலா மகிழ்ச்சியினால் தமைநோக்கி, 'ஐயர்நீர்
உளம்மகிழ இங்கணைந்த உறுதியுடை யோம்'என்றே
இளநிலா நகைமுகிழ்ப்ப இசைத்தவரை உடன்கொண்டு
களம்நிலவு நஞ்சணிந்தார் பாலணையும் கவுணியனார்."

இந்தப் பாடல் குளகம். அளவு - அவ்வாறு அளவு. இலா - இல்லாத; இடைக்குறை. மகிழ்ச்சியினால் தமை - மகிழ்ச்சியை அடைந்தவராகிய திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. நோக்கி - திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பார்த்து. ஐயர் - ஐயரே; விளி. நீர் - தேவரீர். உளம் - தேவரீருடைய திருவுள்ளம்; இடைக்குறை. மகிழ - மகிழ்ச்சியை அடையுமாறு. இங்கு - இந்தச் சீகாழிக்கு. அணைந்த - வந்து சேர்ந்த. உறுதி உடையோம் - உறுதியான செயலை அடியேங்கள் பெற்றிருக்கிறோம்; இது சீகாழியில் வாழும் மக்கள் கூறியது. என்று - எனக் கூறி. ஏ: அசைநிலை.

இள - இளம் பருவத்தைப் பெற்ற. நிலா - நிலாவை வீசும் சந்திரனைப் போன்ற; உவம ஆகு பெயர். நகை - சிரிப்பு. முகிழ்ப்ப - தம்மிடம் அரும்ப. இசைத்த வரை - அவ்வாறு கூறியவராகிய அந்தப் பெரும்பாணரை. உடன் - தம்மோடு. கொண்டு - அழைத்துக் கொண்டு. களம் - தம்முடைய திருக்கழுத்தில். நிலவு - மேவும். நஞ்சு - ஆலகாலவிடத்தை. அணிந்தார்பால் - புனைந்து கொண்டவராகிய பிரமபுரீசரிடம். அணையும் - எழுந்தருளி அடையும். கவுணியனார் - அந்தணர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

பின்பு உள்ள 134-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரம புரீசர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலினுடைய வெளி யிடத்தில் உள்ள முற்றத்திற்கு அந்தத் திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரை அழைத்துக் கொண்டு திருக்கோயிலுக்குள் நுழைந்து பிரமபுரீசரைக் கும்பிடுமாறு செய்தருளி, ''உங்களிடம் மேவியிருக்கும் இசைப் பாடல்களைப் பாடுவதற்கு உரிய யாழை உங்களுடைய தலைவராகிய பிரமபுரீசருக்கு இந்தத் திருக்கோயிலில் மீட்டி வாசிப்பீராக'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய தம்மிடம் அமைந்த பெரும் புகழைப் பெற்ற ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வழங்கிய திருவருளைப் பெற்றதாகிய அந்தப் பாக்கியத்திற்காக அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கி மேவிய கட்டுதலைப் பெற்ற நரம்புகளைக் கொண்ட தம்முடைய யாழை இறுகக் கட்டி இசைப் பாடல்களை விரிவாக அந்தத் திருநீல

கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் பாடுபவரானார்.' பாடல் வருமாறு:

"கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்
'தேயும்இசை யாழ்உங்கள் இறைவருக்கிங் கியற்றும்'என
ஆயபுகழ்ப் பிள்ளையார் அருள்பெற்ற அதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கிஇசை விரிக்கின்றார்."

கோயிலினில் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பிரமபுரீசர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலி னுடைய; உருபு மயக்கம். புற - வெளியிடத்தில் உள்ள. முன்றில் - முற்றத்திற்கு. முன்றில் - இல்முன்; பின் முன்னாகத் தொக்க தொகை. கொடு - அந்தத் திருநீல கண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனாரை அழைத்துக் கொண்டு. புக்கு - திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்து. க்: சந்தி. கும்பிடுவித்து - அந்தப் பெரும்பாணரைப் பிரம புரீசரைக் கும்பிடுமாறு செய்தருளி. ஏயும் - உங்களிடம் மேவியிருக்கும். இசை - இசைப் பாடல்களைப் பாடு வதற்கு உரிய; ஒருமை பன்மை மயக்கம். யாழ் - யாழை. உங்கள் - உங்களுடைய. இறைவருக்கு - தலைவராகிய பிரமபுரீசருக்கு. இங்கு - இந்தத் திருக்கோயிலில். இயற்றும் - மீட்டி வாசிப்பீராக. என - என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய; இடைக்குறை. ஆய - தம்மிடம் அமைந்த. புகழ் - பெரும் புகழைப் பெற்ற. ப்: சந்தி. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அருள் - 'நீர் உம்முடைய யாழை இந்தத் திருக்கோயிலில் வாசிப்பீராக' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்த திருவருளை. பெற்ற - அடைந்த. அதற்கு - அந்தப் பாக்கியத்திற்காக. இறைஞ்சி - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அந்தப் பெரும் பாணர் வணங்கி. மேய - மேவிய. தொடை - கட்டுதலைப்

பெற்ற. த்: சந்தி. தந்திரி - நரம்புகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். யாழ் - தம்முடைய யாழை. வீக்கி - இறுகக் கட்டி. இசை - இசைப் பாடல்களை; ஒருமை பன்மை மயக்கம். விரிக்கின்றார் - அந்தத் திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் விரிவாகப் பாடுபவரானார்.

அடுத்து வரும் 135-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் சுவரஸ்தானங்களினுடைய நிலைக்கு ஏற்றபடி தம்முடைய யாழில் உள்ள தண்டினை வடிவமுறை அமைத்து வெவ்வேறு சுவ்ரஸ்தானங்களினுடைய முறைமையைப் பெற்ற தகுதியோடு அமைந்த சங்கீதத்தை ஆராய்ச்சியைச் செய்து அழகிய கண்களைப் பெற்றவராகிய பிரமபுரீசருக்கு ஏற்ற தாளத்தை பெருமையைப் பெற்ற வரும் முறையாகத் திருமணம் செய்து கொள்ளப் பெற்றவரும் விறலியரும் ஆகிய மதங்கசூளாமணியா ரோடு தாமும் பாடல்களைப் பாடித் தம்முடைய யாழை மீட்டி வாசிக்க அந்தப் பாடல்களைக் கேட்டருளிச் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானப் பாலாகிய விருந்தை நுகர்ந்தருளிய வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் மகிழ்ச்சியை அடைந்தார்; சீகாழியில் வாழும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறை வேற்றியவர்களாகிய வேதியர்கள் வியப்பை அடைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"தானநிலைக் கோல்வடித்துப் ்படிமுறைமைத் தகுதியினால்
ஆனஇசை ஆராய்வுற் றங்கணர்தம் பாணியினை
மானமுறப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபோ னகர்மகிழ்ந்தார்; நான்மறையோர் அதிசயித்தார்."

தான - அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் சுவரஸ்தானங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிலை - நிலைக்கு ஏற்றபடி. க்: சந்தி. கோல் - தம்முடைய யாழில் உள்ள தண்டினை. வடித்து - அழகிய வடிவமுற அமைத்து. ப்: சந்தி. படி - பல்வேறு ஸ்தானங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். முறைமை - முறைமையைப் பெற்ற. த்: சந்தி. தகுதியினால் - தகுதியோடு; உருபு மயக்கம். ஆன - அமைந்த. இசை - சங்கிதத்தை. ஆராய்வுற்று - ஆராய்ச்சியைச் செய்து. அம் - அழகிய. கணர்தம் - கண்களைப் பெற்றவராகிய பிரமபுரீசருக்கு ஏற்ற. கணர்: இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. பாணியினை - தாளத்தை. மானம் - பெருமையைப் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். 'மானம் - அளவு' எனலும் ஆம். உற - முறைமைத் திருமணம் செய்து கொள்ளப் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். ப்: சந்தி. பாடினியாருடன் - விறலியரும் ஆகிய மதங்கசூளா மணியாரோடு. பாடினி - பாணனுடைய மனைவி. விறலி - சத்துவம் பாட ஆடிப் பாடுபவள். பாடி - தாமும் பாடல்களைப் பாடி. 'தாமும்' என்றது திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரை. வாசிக்க - தம்முடைய யாழை மீட்டி வாசிக்க. ஞானபோனகர் - கேட்டருளிச் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் விளங்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்

கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானமாகிய விருந்தை நுகர்ந்தருளிய வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். மகிழ்ந்தார் - மகிழ்ச்சியை அடைந்தார். நான்மறையோர் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர்களும், சீகாழியில் வாழ்பவர் களுமாகிய வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மறை: ஒருமை பன்மை மயக்கம். அதிசயித்தார் - வியப்பை அடைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 136-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்முடைய யாழை மீட்டி வாசித்துப் பாடும் போது அந்த யாழிலிருந்து எழும் இனிய நாதத்தோடு அந்தப் பெரும்பாணருடைய இசைப் பாடலும், அவருடைய தர்மபத்தினியாராகிய மதங்கசூளா மணியாருடைய தொண்டையினால் பாடும் இசைப் பாடல் களும் ஒன்றாகச் சேர்ந்து சீகாழியில் உள்ள பிரமபுரீ சருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின்மேல் விளங்கும் அழகிய தோணியில் வீற்றிருப்பவராகிய தோணியப்பருக்குப் பக்கத்தைச் சென்று சேரும் பெருமையை தொங்கும் இரண்டு சிறகுகளைப் பெற்ற பருந்து, கருடன், கழுகு, காக்கை, கொக்கு, நாரை, மைனாக்குருவி, கிளி, மரங்கொத்திப் பறவை, மீன் கொத்திப் பறவை, சிட்டுக்குருவி, குருவி, செம்போத்து, தூக்கணாங் குருவி முதலிய பறவைகள் படிந்துள்ள ஒப்பற்ற ஆகாயத்தில் நின்று கொண்டு ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற சங்கீதத்தைப் பற்றிய சாத்திரத்தில் தேர்ச்சி பெற்றவர்களாகிய கந்தருவர்களும், வித்தியாதரர்களும் திருஞான சம்பந்த

மூர்த்தி நாயனாருடைய புகழை எடுத்துப் பாடினார்கள்.' பாடல் வருமாறு:

"யாழில்எழும் ஓசையுடன் இருவர்மிடற் றிசைஒன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையும் மாட்சியினைத்
தாழும்இரு சிறைப்பறவை படிந்ததனி விசும்படைநின்
றேழிசைநூற் கந்தருவர் விஞ்சையரும் எடுத்திசைத்தார்."

யாழில் - அவ்வாறு அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார் தம்முடைய யாழை மீட்டி வாசித்துப் பாடும்போது; உருபு மயக்கம். எழும் - அந்த யாழிலிருந்து எழும். ஓசையுடன் - இனிய நாதத்தோடு. இருவர் - அந்தப் பெரும்பாணர், அவருடைய தர்மபத்தினியாராகிய மதங்கசூளாமணியார் ஆகிய இருவர்களும் பாடும். மிடற்று - அவர்களுடைய தொண்டைகளிலிருந்து எழும்; ஒருமை பன்மை மயக்கம். இசை - இசைப்பாடல்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஒன்றி - ஒன்றாகச் சேர்ந்து. வாழி: அசை நிலை. திருத் தோணி உளார் - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில் வீற்றிருப்பவராகிய தோணியப் பருக்கு. உளார்: இடைக்குறை. மருங்கு - பக்கத்தை. அணையும் - சென்று சேரும். மாட்சியினை - பெருமையை. த்: சந்தி. தாழும் - தொங்கும். இரு - இரண்டு. சிறை - சிறகுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பறவை - பருந்துகளுடன், கழுகு, காக்கை, கொக்கு, நாரை, மைனாக்குருவி, கிளி, பஞ்சவர்ணக்கிளி, மரங்கொத்திப் பறவை, மீன் கொத்திப்பறவை, சிட்டுக் குருவி, ஊர்க்குருவி, செம்போத்து, தூக்கணாங்குருவி முதலிய பறவைகள்; ஒருமை பன்மை மயக்கம். படிந்த - படிந்துள்ள. தனி - ஒப்பற்ற. விசும்பிடை - ஆகாயத்தில். நின்று - நின்று கொண்டு. ஏழிசை - ச, ரி, க, ம, ப, த, நி:ச

என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற சங்கீதத்தைப் பற்றிய. நூல் - சாத்திரத்தில் தேர்ச்சி பெற்ற. கந்தருவர் - கந்தருவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். விஞ்சையரும் - வித்தியாதரர்களும்; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய புகழை விரிவாக எடுத்து. இசைத்தார் - பாடினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 137-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'எண்ணுவதற்கு அருமையாக விளங்கும் சீர்த்தியைப் பெற்றவரும், சீகாழியில் உள்ள பிரமபுரீசர் ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் விளங்கும் அழகிய தோணியில் வீற்றிருக்கும் அடியேங்களுடைய தலைவனாகிய தோணியப்பனுடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளைப் புகழ்ந்து பண்கள் அமைந்த தம்முடைய யாழில் சங்கீதம் சேர்ந்து அமைய அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்முடைய யாழை மீட்டிப் பாடல்களைப் பாடியபிறகு நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய தோணியப்பர் வழங்கிய திருவருளால் சீகாழியில் வாழும் அந்தணர்களினுடைய அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தப் பெரும் பாணரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு எழுந்தருளி அந்தப் பெரும்பாணர் சென்று தங்கும் இடத்தை அமைத்து நல்ல ஆறு சுவைகளைப் பெற்ற விருந்து உணவையும் சிறப்பாக இருந்து அந்தப் பெரும்பாணருக்கு வழங்கியருள.' பாடல் வருமாறு:

"எண்ணரும்சீர்த் திருத்தோணி எம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையாழ் இசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலார் அருளினாற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணிஉறை யிடம்சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப."

இந்தப் பாடல் குளகம். எண் - எண்ணுவதற்கு; முதல் நிலைத் தொழிற்பெயர். அரும் - அருமையாக விளங்கும். சீர் - சீர்த்தியைப் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். த்: சந்தி. திருத்தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் விளங்கும் அழகிய தோணியில். எம்பெருமான் - வீற்றிருக்கும் அடியேங்களுடைய தலைவனாகிய தோணியப்பனுடைய. 'அடியேங்கள்' என்றது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்தக் கூறியது. கழல் - வெற்றிக்கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். பரவி - புகழ்ந்து. ப்: சந்தி. பண் - பண்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: நட்டபாடை, தக்கராகம், பழந்தக்க ராகம், இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி, காந்தாரப் பஞ்சமம், கொல்லி, கொல்லிக்கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி, செந்துருத்தி, சாரைபாணி முதலியவை. அமை - அமைந்த. யாழ் - தம்முடைய யாழில். இசை - சங்கீதம். கூட - சேர்ந்து அமைய. ப்: சந்தி. பெரும்பாணர் - திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார். பாடியபின் - தம்முடைய யாழை மீட்டி இசைப் பாடல்களைப் பாடிய பிறகு. கண்ணுதலார் - தம்முடைய நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய தோணியப்பர். அருளினால் - வழங்கிய திருவருளால். காழியர் - சீகாழியில் வாழும் அந்தணர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். கோன் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; ஒருமை பன்மை மயக்கம். கொடு - அந்தப் பெரும்பாணரைத் தம்மோடு அழைத்துக் கொண்டு. போந்து - எழுந்தருளி. நண்ணி - அந்தப் பெரும்பாணர் சென்று. உறை இடம் - தங்கும் இடத்தை. சமைத்து -

அமைத்து வழங்கி. நல் - நல்ல ஆறு சுவைகளைப் பெற்ற. விருந்து - விருந்து உணவையும்; ஆகுபெயர். சிறந்து - சிறப்பாக இருந்து. அளிப்ப - அந்தப் பெரும்பாணருக்கு வழங்கியருள.

பின்பு வரும் 138-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வழங்கிய திருவருளைப் பெற்றுக் கொண்ட அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் பிறைச் சந்திரனைப் புனைந்து கொண்டிருந்த கங்கை யாற்றினுடைய நீர் வெள்ளத்தைத் தங்க வைத்திருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய தோணியப்பருக்கு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய உண்மைகளைக் கூறும் ஒரு திருப்பதிகத்தை உள்ளவாறு கேட்டவுடன் பக்தியினால் உருக்கத்தை அடையும் பெருமையைப் பெற்று விளங்கும் மகிழ்ச்சியைக் கொண்டவராகித் தெளிவாக உள்ள அமிர்தத்தைப் பருகியவரைப் போல அந்தத் திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் ஆனந்தம் அடையும் வண்ணம் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"பிள்ளையார் அருள்பெற்ற பெரும்பாணர் பிறைஅணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை அவர்மொழிந்த மெய்ப்பதிகம்
உள்ளபடி கேட்டலுமே உருகுபெரு மகிழ்ச்சியராய்த்
தெள்ளமிர்தம் அருந்தினர்போல் சிந்தைகளிப் புறத்தொழுதார்."

பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அருள் - வழங்கிய திருவருளை. பெற்ற - பெற்றுக் கொண்ட. பெரும்பாணர் - திருநீல

கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார். பிறை - பிறைச் சந்திரனை. அணிந்த - புனைந்து கொண்டிருந்த. வெள்ள நீர் - கங்கையாற்றினுடைய நீர் வெள்ளத்தை. ச்: சந்தி. சடையாரை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய தோணியப்பருக்கு; உருபு மயக்கம். அவர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். மொழிந்த - பாடியருளிய. மெய் - உண்மைகளை எடுத்துக் கூறும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. உள்ளபடி - உள்ளவாறு. கேட்டலும் - கேட்டவுடன் ஏ: அசைநிலை. உருகு - பக்தியினால் உருக்கத்தை அடையும். ஏ: அசைநிலை. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். மகிழ்ச்சியராய் - மகிழ்ச்சியை அடைந்தவராகி. த்: சந்தி. தெள் - தெளிவாக உள்ள. அமிர்தம் - அமிர்தத்தை. அருந்தினர் போல் - பருகியவரைப் போல. சிந்தை - அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில். களிப்பு உற - ஆனந்தத்தை அடையும் வண்ணம். த்: சந்தி. தொழுதார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கினார்.

திருத்தோணிபுரத்தைப் பற்றிப் பழந்தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"காண்டகைய செங்காலொண் கழிநாராய் காதலாற்
பூண்டகைய முலைமெலிந்து பொன்பயந்தாள் என்றுவளர்
சேண்டகைய மணிமாடத் திருத்தோணி புரத்துறையும்
ஆண்டகையாற் கின்றேசென் றடியறிய உணர்த்தாயே."

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிச் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி
அங்கமுடன் மேலுற அணிந்துபிணி தீரஅருள் செய்யும்
எங்கள்பெரு மானிட மெனத்தகு முனைக்கடலின் முத்தம்
துங்கமணி இப்பிகள் கரைக்குவரு தோணிபுர மாமே."

*பிறகு வரும் 139-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

*'சீகாழியில் வாழும் வேதியர்கள் முன்பிறவியில் செய்த தவத்தினுடைய பிரயோசனமாக விளங்கும் வேதியர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்த வராகிய சிவபாத இருதயருடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருமால் பள்ளி கொண்டருளி யிருக்கும் பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சினை விழுங்கியவராகிய பிரமபுரீசருடைய திருவடிகளை வாழ்த்தித் தாம் பாடியருளும் திருப்பதிகத்தில் அமைந் திருக்கும் சங்கீதத்துக்கு உரிய பண்ணினைத் திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்முடைய யாழில் முறைப்படி வைத்து ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களும் அடங்கிய சங்கீதத்தைத் தம்முடைய ஏவலாளாகப் பெற்ற திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார் எல்லா வகையான உயிர்களையும் மகிழ்ச்சியை அடையுமாறு புரிந்தார்.'* பாடல் வருமாறு:

"காழியார் தவப்பயனாம் கவுணியர்தம் தோன்றலார்
ஆழிவிடம் உண்டவர்தம் அடிபோற்றும் பதிகஇசை
யாழில்முறை மையில்இட்டே எவ்வுயிரும் மகிழ்வித்தார்
ஏழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர்."

*காழியார் - சீகாழியில் வாழும் வேதியர்கள்;* ஒருமை பன்மை மயக்கம். தவ - *முன்பிறவியிற் செய்த தவத்தி னுடைய.* பயனாம் - *பிரயோசனமாக விளங்கும்.* கவுணியர் தம் - *வேதியர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில்*

பிறந்தவராகிய சிவபாத இருதயருடைய. தம்: அசைநிலை. தோன்றலார் - புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். ஆழி - திருமால் பள்ளி கொண்டருளி இருக்கும் பாற்கடலில் தோன்றிய. விடம் - ஆலகால நஞ்சினை. உண்டவர்தம் - விழுங்கியவராகிய பிரமபுரீசருடைய. தம்: அசைநிலை. அடி - திருவடிகளை. போற்றும் - தாம் பாடியருளும். பதிக - திருப்பதிகத்தில். இசை - அமைந்திருக்கும் சங்கீதத்துக்கு உரிய. யாழில் - தம்முடைய யாழில். முறைமையில் - முறைப்படி. இட்டு - வைத்து. ஏ: அசைநிலை. ஏழ்இசையும் - ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களும் அடங்கிய சங்கீதத்தை. பணி - தம்முடைய ஏவலாளாக; திணை மயக்கம். கொண்ட - பெற்ற. நீலகண்ட யாழ்ப்பாணர் - திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார். எவ்வுயிரும் - எல்லா வகையான உயிர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மகிழ்வித்தார் - மகிழ்ச்சியை அடையுமாறு புரிந்தார்.

திருப்பிரமபுரத்தைப் பற்றி நட்டபாடைப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"விண்மக ிழ்ந்தமதில் எய்தது மன்றி விளங்கு தலையோட்டில்
உண்மக ிழ்ந்துபலி தேரிய வந்தென துள்ளம் கவர்கள்வன்
மண்மக ிழ்ந்த அரவம் மலர்க்கொன்றை மலிந்த வரைமார்பிற்
பெண்மக ிழ்ந்தபிர மாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே."

அந்த நாயனார் இந்த தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"எரியார் மழுவொன் றேந்தி யங்கை இடுதலை யேகலனா
வரியார் வளையார் ஐயம் வவ்வாய் மாநலம் வவ்வுதியே
சரியா நாவின் வேத கீதன் தாமரை நான்முகத்தான்

பெரியான் பிரமன் பேணி ஆண்ட பிரம புரத்தானே.''

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிக் குறிஞ்சிப் பண்ணில் பாடிபருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''அரனை உள்குவீர் - பிரமன் ஊருளெம்
பரனை யேமனம் - பரவி உய்ம்மினே.''

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றி வியாழக் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''காடதணி கலங்கா ரரவம் பதிகாலதனில்
தோடதணி குவர்சுந்தரக் காதினிற்றூச் சிலம்பர்
வேடதணி வர்விசயற் குருவம்வில்லும் கொடுப்பர்
பீடதணி மணிமாடப் பிரம புரத்தாரே.''

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றி வியாழக் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஏகபாதப் பாசுரம் ஒன்று வருமாறு:

''பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புரத்துறை பெம்மான் எம்மான்
பிரம புத்துறை பெம்மான் எம்மான்.''

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிச் சீகாமரப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''எம்பிரான் எனக்கமுதம் ஆனானும் தன்னடைந்தார்
தம்பிரான் ஆவானும் தழலேந்தி கையானும்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே.''

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கறையணி வேலிலர் போலும் கபாலம் தரித்திலர் போலும்
மறையும் நவின்றிலர் போலும் மாகணம் ஆர்த்திலர் போலும்
பறையும் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையும் சடைக்கிலர் போலும் பிரமபுரம் அமர்ந் தாரே."

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிக் கொல்லிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சுரமுனம் மலராற் புனல்மலர் தூவியே கலந்தேத்துமின்
பரமனூர் பலபேரினாற் பொலிபத்தர் சித்தர்கள் தாம்பயில்
வரமுன்னவ் வருள்செய்ய வல்லஎம்மையன் நாள்தொறும்
மேயசீர்ப்
பிரமனூர் பிரமா புரத்துறை பிஞ்ஞகனருள் பேணியே."

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிக் கௌசிகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"இறைவன் ஈசன் எந்தை இமையோர் தொழுதேத்த நின்ற
கறையணி கண்டன் வெண்தோடணி காதினன் காலத் தன்று
மறைமொழி வாய்மையினான் மலையா ளொடு மன்னு சென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிரமாபுரம் பேணுமினே."

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிப் பஞ்சமப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சுரருலகு நரர்கள்பயில் தரணிதலம் முரணழிய அரண
மதில்முப்
புரமெரிய விரவுவகை சரவிகைகொள் சரமுடைய பரம
னிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள் வருசுருதி
சிரவுரை யினாற்
பிரமனுய ரானெழில் கொள்சரண விணைபரவவளர்
பிரமபுரமே."

அந்த நாயனார் இந்தத் தலத்தைப் பற்றிப் பழம் பஞ்சுரப் பண்ணில் பாடியருளிய ஓர் ஈரடிப் பாசுரம் வருமாறு:

"வரமதே கொளா வுரம தேசெயும், புரமெரித்தவன் பிரமநற்புரத்
தரனனாமமே பரவுலார்கள்சீர், விரவு நீள்புவியே."

பின்பு வரும் 140-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிறுவராகிய வேதியர்களினுடைய கன்றுக்குட்டியைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளி வழங்கிய திருப்பதிகத்தில் அமைந்த சங்கீதத்தைத் தம்முடைய யாழில் வழிப்படி அமைக்கும் திரு நீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் பிறகும், "தேவரீர் பாடி அருள் புரியும் பொருள் தெரிவதற்கு அருமையாக உள்ள திருப்பதிகத்தை மீட்டிப் பாடும் பாடல்களை வாசிக்கும் யாழில் வைத்து அடியேன் தேவரீரைப் பிரிதல் இல்லாமல் வணங்கும் பாக்கியத்தைப் பெற வேண்டும்" என்று கூறி விட்டு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"சிறியமறைக் கன்றளித்த திருப்பதிக இசையாழின்
நெறியிலிடும் பெரும்பாணர் 'பின்னும்நீர் அருள்செய்யும்
அறிவரிய திருப்பதிக இசையாழில் இட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும்' எனத்தொழுதார்."

சிறிய - சிறியவராகிய; வினையாலணையும் பெயர். மறை - வேதியர்களினுடைய; திணை மயக்கம். க்: சந்தி. கன்று - கன்றுக் குட்டியைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகுபெயர். அளித்த - பாடியருளி வழங்கிய. திருப்பதிக - திருப்பதிகத்தில் அமைந்த. இசை - சங்கீதத்தை. யாழின் - தம்முடைய

யாழில். நெறியில் - வழிப்படி. இடும் - அமைக்கும். பெரும்பாணர் - திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார். பின்னும் - பிறகும். நீர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பார்த்து, 'தேவரீர்.' அருள் செய்யும் - பாடி அருள் புரியும். அறிவரிய - பொருள்தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. திருப்பதிக - திருப்பதிகத்தை. இசை - மீட்டிப் பாடும் பாடல்களை வாசிக்கும்; ஒருமை பன்மை மயக்கம். யாழில் - அடியேனுடைய யாழில். இட்டு அடியேன் - வைத்து அடியேன். பிறிவு - தேவரீரைப் பிரிதல். 'றி' செய்யுளில் எதுகையை நோக்கி வல்லின உயிர் மெய்யெழுத்து ஆயிற்று. இன்றி - இல்லாமல். ச்: சந்தி. சேவிக்க - வணங்கும் பாக்கியத்தை. ப்: சந்தி. பெற வேண்டும் - அடியேன் அடைய வேண்டும். என - என்று கூறிவிட்டு; இடைக்குறை. த்: சந்தி. தொழுதார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை அந்தப் பெரும்பாணர் வணங்கினார்.

*பின்பு வரும் 141-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் வேண்டிக் கொண்ட வேண்டுகோளுக்கு ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து சம்மதித்தருள அந்தச் சம்மதத்தைப் பெற்றவராகிய அந்தப் பெரும்பாணர், ''அடியேங் களுடைய தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வழங்கிய திருவருள் இதுதான்'' என்று எண்ணி அதை விரும்பிச் செய்யுட் சொற்கள் அமைந்த செந்தமிழ் மொழியில் உள்ள மாலையாகிய திருப்பதிகத்தில் உள்ள சங்கீதப் பாடல்களைச் சுருதியோடு பொருந்தி வாசிக்கும் தம்முடைய யாழில் முறைப்படி அந்தத் திருப்பதிகத்தை அமைத்து அன்றைத்

தினத்தைப் போல என்றைக்கும் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை விட்டுப் பிரியாத நட்புடன் சீகாழியில் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"மற்றதற்குப் பிள்ளையார் மனம்மகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாம், 'நம்பிரான் அருளிதுவே' எனப்பேணிச்
சொற்றமிழ்மா லையின்இசைகள் சுருதியாழ் முறைதொடுத்தே
அற்றைநாட் போல்என்றும் அகலாநண் புடன்அமர்ந்தார்."

மற்று: அசைநிலை. அதற்கு - அந்தத் திருநீல கண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்மிடம் வேண்டிக் கொண்ட அந்த வேண்டுகோளுக்கு. ப்: சந்தி. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். மகிழ்வுற்று - மகிழ்ச்சியை அடைந்து. இசைந்தருள - சம்மதித்தருள. ப்: சந்தி. பெற்றவர்தாம் - அந்தச் சம்மதத்தைப் பெற்றவராகிய அந்தப் பெரும்பாணர். தாம்: அசைநிலை. நம் - அடியேங் களுடைய; இது திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் தம்மையும் பிறதொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. பிரான் - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; ஒருமை பன்மை மயக்கம். அருள் - வழங்கிய திருவருள். இதுவே - இதுதான். என - என்று எண்ணி; இடைக்குறை. ப்: சந்தி. பேணி - அந்தத் திருவருளை விரும்பி. ச்: சந்தி. சொல் - செய்யுளுக்குரிய சொற்கள் அமைந்த; ஒருமை பன்மை மயக்கம். தமிழ் - செந்தமிழ் மொழியில் உள்ள. மாலையின் - மாலையாகிய திருப்பதிகத்தில் உள்ள. இசைகள் - சங்கீதப் பாடல்களை. சுருதி - சுருதியோடு பொருந்தியிருக்கும். யாழ் - தம்முடைய யாழில். முறை - முறைப்படி. தொடுத்து - அந்தத் திருப்பதிகத்தை அமைத்து. ஏ: அசைநிலை. அற்றை நாட்போல் - அன்றைத் தினத்தைப் போல. என்றும் -

என்றைக்கும். அகலா - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை விட்டுப் பிரியாத. நண்புடன் - கேண்மை யோடு. அமர்ந்தார் - சீகாழியில் தங்கிக் கொண்டிருந்தார்.

அடுத்து வரும் 142-அம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சிரபுரமாகிய சீகாழியில் தங்கிக் கொண்டிருந் தருளும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பக்தர்கள் புகழும் அழகிய தில்லையாகிய சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளுபவராகிய நடராஜப் பெருமானாரை வணங்கித் துதிப்பதற்காகத் தம்முடைய திருவுள்ளத்தில் மேவிப் பொங்கி எழும் பெருமையைப் பெற்று விளங்கும் விருப்பமாகிய வெள்ளத்தைத் தம்முடைய திருவுள்ளத்தில் வழங்க இணங்கும் குறித்த எண்ணத்தைத் தெரிந்து கொள்ளுமாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பெறும் பொருட்டு தவத்தைப் புரிந்த சிவபாத இருதயருக்கு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"சிரபுரத்தில் அமர்ந்தருளும் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவிஎழும் பெருங்காதல் வெள்ளத்தை உள்ளத்தில்
தரஇசையும் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார்."

சிரபுரத்தில் - சிரபுரமாகிய சீகாழியில். அமர்ந்தருளும் - தங்கிக் கொண்டிருந்தருளும். திருஞான சம்பந்தர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பரவு - பக்தர்கள் புகழும். பக்தர்கள்: தோன்றா எழுவாய். திரு - அழகிய. த்: சந்தி. தில்லை - தில்லையாகிய சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருசிற்றம்பலத்தில்; இடஆகுபெயர்.

நடம் - திருநடனம். பயில்வாரை - புரிந்தருளுபவராகிய நடராஜப் பெருமானாரை. ப்: சந்தி. பணிந்து - வணங்கி. ஏத்த - துதிப்பதற்காக. விரவி - தம்முடைய திருவுள்ளத்தில் மேவி. எழும் - பொங்கி எழும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். காதல் - விருப்பமாகிய. வெள்ளத்தை - நீர் வெள்ளத்தை. உள்ளத்தில் - தம்முடைய திருவுள்ளத்தில். தர - வழங்க. இசையும் - இணங்கும். குறிப்பு - குறித்த எண்ணத்தை. அறிய - தெரிந்து கொள்ளுமாறு. த்: சந்தி. தவம் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தம்முடைய புதல்வராகப் பெறும் பொருட்டுத் தவத்தை. முனிவர்க்கு - புரிந்த அந்தணராகிய சிவபாத இருதயருக்கு. அருள் செய்தார் - அவருடைய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 143-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்யப் பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தின் பயனாக அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை ஈன்றெடுத்த வள்ளலாராகிய சிவபாத இருதயரும் தம்முடைய புதல்வரோடு போவதற்குத் தம்முடைய திருவுள்ளத்தில் களிப்பை அடைய பெருமையைப் பெற்று விளங்கும் வெள்ளி மலையாகிய கயிலாய மலை என்று கூறுமாறு விளங்குவதும், சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில் அமர்ந்திருந்த புள்ளிகளைப் பெற்ற மான் தோலை உடுத்தவராகிய தோணியப்பரை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வணங்கி விட்டு அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளோடு சீகாழியை விட்டுப் புறப்பட்டு அப்பால் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"பிள்ளையார் அருள்செய்யப் பெருந்தவத்தால் பெற்றெடுத்த
வள்ளலார் தாமும்உடன் செல்வதற்கு மனம்களிப்ப
வெள்ளிமால் வரைஎன்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமான் உரியாரைத் தொழுதருளாற் புறப்பட்டார்."

பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அருள் செய்ய - அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. ப்: சந்தி. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தவத்தால் - தவத்தின் பயனால்; ஆகு பெயர். பெற்றெடுத்த - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை ஈன்றெடுத்த. வள்ளலார்தாமும் - வள்ளலாராகிய சிவபாத இருதயரும். தாம்: அசைநிலை. வள்ளலார் - அரும்பெரும் செல்வத்தைப் போன்ற திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை ஈன்றெடுத்து வழங்கிய உண்மையை உடைய சிவபாத இருதயர். உடன் - தம்முடைய புதல்வரோடு. செல்வதற்கு - போவதற்கு. மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். களிப்ப - களிப்பை அடைய. வெள்ளி மால்வரை - பெருமையைப் பெற்று விளங்கும் வெள்ளிமலையாகிய கயிலாய மலை. என்ன - என்று கூறுமாறு விளங்குவதும்; வினையாலணையும் பெயர். த்: சந்தி. திருத்தோணி - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டு மலையின் மேல் விளங்கும் அழகிய தோணியில். வீற்றிருந்த - அமர்ந்திருந்தவரும் ஆகிய; வினையாலணையும் பெயர். புள்ளி - புள்ளிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மான் உரியாரை - மான்தோலை உடுத்தவராகிய தோணியப்பரை. த்: சந்தி. தொழுது - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வணங்கி விட்டு. அருளால் - அந்தத் தோணியப்பர் வழங்கிய திருவருளோடு; உருபு மயக்கம். புறப்பட்டார் - சீகாழியை விட்டுப் புறப்பட்டு அப்பால் எழுந்தருளினார்.

பிறகு வரும் 144-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வெங்குருவாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் கேடு இல்லாத புகழைப் பெற்ற திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனாரோடும் தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரோடும் தம்மோடு சேர்ந்து வந்த சீர்த்தியைப் பெற்ற நடரர்ஜப் பெருமானாருடைய அடியவர்கள் தம்முடைய பக்கத்தில் வர தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பிரமதேவன் வாழ்த்தி வணங்கும் புகலியாகிய சீகாழியைத் தாண்டி மேலே எழுந்தருளி எல்லாத் தேவர்களுக்கும் மேலாக விளங்கும் பெருமையைப் பெற்றுத் திகழும் மகா தேவராகிய நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அழகிய தில்லையாகிய சிதம்பரத் தின் வழியாக அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருள்பவரானார்.' பாடல் வருமாறு:

"தாவில்யாழ்ப் பாணரொடும் தாதையார் தம்மோடும்
மேவியசீர் அடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்
பூவின்மேல் அயன்போற்றும் புகலியினைக் கடந்துபோய்த்
தேவர்கள்தம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார்."

வெங்குரு - வெங்குருவாகிய சீகாழியை ஆட்சி புருந்தருளும். வேந்தர் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தா - கேடு. இல் - இல்லாத புகழைப் பெற்ற. யாழ்ப்பாணரொடும் - திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண் நாயனாரோடும். தாதையார் தம்மோடும் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரோடும். தம்: அசைநிலை. மேவிய - தம்மோடு சேர்ந்து வந்த. சீர் - சீர்த்தியைப் பெற்ற. அடியார்கள் - நடராஜப் பெருமானாருடைய அடியவர்கள். புடைவர - தம்முடைய

பக்கத்தில் வர. பூவின்மேல் - தாமரை மலரின் மேல் வீற்றிருக்கும். அயன் - பிரமதேவன். போற்றும் - வாழ்த்தி வணங்கும். புகலியினை - புகலியாகிய சீகாழியை. க்: சந்தி. கடந்து - தாண்டி. போய் - அப்பால் எழுந்தருளி. த்: சந்தி. தேவர்கள் தம் - எல்லாத் தேவர்களுக்கும் மேலாக விளங்கும். தம்: அசை நிலை. பெரும் - பெருமையைப் பெற்றுத் திகழும். தேவர் - மகாதேவராகிய நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். திரு - அழகிய. த்: சந்தி. தில்லை - தில்லையாகிய சிதம்பரத்தின். வழி - வழியாக. ச்: சந்தி. செல்வார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருள்பவரானார்.

பூவின்மேல் அயன் போற்றும் புகலி: ''ஏடுடைய மலரான் முனைநான் பணிந்தேத்த அருள்செய்த பீடுடைய பிரமாபுரம்.'' என்று தேவாரத்தில் வருவதைக் காண்க.

பிறகு உள்ள 145-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சீகாழியில் வாழும் அந்தணர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்தவர்களுடைய குடும்பத்தில் திரு விளக்கைப் போலத் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சர்வப்பிரளய காலமாகிய நடுஇரவில் நின்று கொண்டு திருநடனம் புரிந்தருளுப வராகிய நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் தலங்களை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளும்போது இடையில் தாம் பார்த்த சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வாழ்த்தி வணங்கிவிட்டு முட்களுக்கு நடுவில் வெளியில் உள்ள வெண்மையான மடல்களைப் பெற்ற தாழம்பூ மலர்ந் திருக்கும் தாழை மரத்தில் அரும்புகள் மலரும் மலர்களில்

கமழும் நறுமணம் 'அற்றிப் பரவப் பலவகையான பறவைகள் தங்கப் பெற்ற விசாலமான வயல்களும் தடாகங்களும் பக்கத்தில் அகல அப்பால் எழுந்தருளி அழகிய கொள்ளிட ஆற்றினுடைய கரையை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"நள்ளிருட்கண் ஆடுவார் உறைபதி
நடுவுகண் டன்போற்றி
முள்ளிடைப்புற வெள்ளிதழ்க் கேதகை
முகிழ்விரி மணம்சூழப்
புள்ளுடைத் தடம்பழனமும் படுகளும்
புடைகழிந் திடப்போந்து
கொள்ளிடத்திரு நதிக்கரை அணைந்தனர்
கவுணியர் குலதீபர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. கவுணியர் - சீகாழியில் வாழும் அந்தணர்களுக்குள் கவுண்டின்ய கோத்திரத்தில் பிறந்தவர் களுடைய; ஒருமை பன்மை மயக்கம். குல - குடும்பத்தில். தீபர் - திருவிளக்கைப் போலத் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகுபெயர். நள்ளிருட்கண் - சர்வப்பிரளய காலமாகிய நடுஇரவில். ஆடுவார் - நின்று கொண்டு திருநடனம் புரிந்தருளு பவராகிய நடராஜப் பெருமானார். உறை - எழுந்தருளி யிருக்கும். பதி - சிவத்தலங்களை; ஒருமை பன்மை மயக்கம். நடுவு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளும் போது இடையில். கண்டன் - தாம் பார்த்த சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை; ஆகுபெயர். போற்றி - வாழ்த்தி வணங்கி விட்டு. முள் - முட்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். இடை - நடுவில். ப்: சந்தி. புற

- வெளியில் உள்ள. வெள் - வெண்மையான. இதழ் - மடல்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கேதகை - தாழம்பூ மலர்ந்திருக்கும் தாழை மரத்தில். முகிழ் - அரும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். விரி - மலரும் மலர்களில். மணம் - நறுமணம். சூழ - சுற்றிப் பரவ. ப்: சந்தி. புள் - பலவகையான பறவைகள்; ஒருமை பன்மை மயக்கம். உடை - தங்கப் பெற்ற. த்: சந்தி. தடம் - விசாலமாக உள்ள. பழனமும் - வயல்களும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த வயல்களாவன: சம்பா நெற்பயிர் விளையும் வயல், குறுவை நெற்பயிர் விளையும் வயல், மணக்கத்தை நெற்பயிர் வளர்ந்து நிற்கும் வயல், கரும்புத் தோட்டம் முதலியவை. படுகளும் - தடாகங்களும்; ஒருமை பன்மை மயக்கம். புடை - பக்கத்தில். கழிந்திட - அகலுமாறு. ப்: சந்தி. போந்து - அப்பால் எழுந்தருளி. கொள்ளிடத்திருநதி - அழகிய கொள்ளிடமாகிய ஆற்றி னுடைய. க்: சந்தி. கரை - கரையை. அணைந்தனர் - அந்த நாயனார் அடைந்தார்.

ஆடவர்க்குத் திருவிளக்கு உவமை: ''துளக்கமிலாத விளக்காய வித்தினை.'', ''விண்களார் தொழும் விளக்கினை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''வானோர்கள் வேண்டித் தேடும் விளக்கினை.'', ''விண்ணுளார் தொழுதேத்தும் விளக்கினை.'', ''புந்திக்கு விளக்காய புராணனை.'', ''மெய்கிளரும் ஞான விளக்குக் கண்டாய்.'', ''தேசவிளக்கெலாம் ஆனாய் நீயே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''தூண்டா விளக்கின் நற்சோதீ.'', ''ஞான விளக்கொளியாம் ஊன்உயிரை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''சோதியே சுடரே சூழொளி விளக்கே.'', ''தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ.'' என்று மாணிக்க வாசகரும், ''ஒளிவளர் விளக்கே உவப்பிலா ஒன்றே.'' என்று திருமாளிகைத் தேவரும், ''மதிப்பவர்

மனமணி விளக்கை.'' என்று சேந்தனாரும், ''தூண்டு விளக்கேய்ப்ப.'' என்று பூந்துருத்தி நம்பிகாட நம்பியும், ''ஞானச் சுடர் விளக்கை.'', ''எழிலாரும் கவுணியர் பேண்.'', ''கவுணியர்கள் குலதீப சுபசரிதன்.'', ''தவமெய்க்குல தீபன்.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை.'' என்று ஆண்டாளும், ''நந்தா விளக்கே அளத்தற் கரியாய்.'', ''அமரர்க்கருள் விளக்கினை.'', ''விளக்கினை விதியிற் காண்பார்.'' என்று திருமங்கையாழ்வாரும், ''என் விளக்கை என் ஆவியை.'' என்று நம்மாழ்வாரும், ''ஞான மணி விளக்கெழுந்து வருவதென.'' என்று சேக்கிழாரும், ''நந்தா விளக்கனைய நாயகனே.'' என்று கம்பரும் பாடியருளியவற்றையும் காண்க.

பிறகு வரும் 146-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்து எழுகின்ற செழுமையைப் பெற்ற பலவகையான மலர்கள் குவிந்திருக்கும் மலையையும், மாணிக்கங்களையும் சந்தனமரத்தையும் தள்ளிக் கொண்டு சோலையில் உள்ள பலவாக இருக்கும் மலர்கள், காய்கள், கனிகள் முதலிய வளங்களோடும் ஓடி வருகின்ற நீர் தங்கித் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை வருடத் தெளிவைப் பெற்ற அலைகளை வீசும் சமுத்திரத்தில் தோன்றும் பவளங்களையும், சங்குப்பூச்சி களையும், செழிப்பைப் பெற்ற மாணிக்கங்களையும், திரண்டிருக்கும் முத்துக்களையும் வாரிக் கொண்டு ஒலித்துக் கொண்டு தள்ளும் அலைகள் அந்த இடத்தில் தம்மை எதிர் கொண்டு வரவேற்கக் கொள்ளிட ஆற்றைத் தாண்டி அதன் கரையின் மேல் ஏறி.' பாடல் வருமாறு:

"வண்டி ரைத்தெழு செழுமலர்ப் பிறங்கலும்
மணியும்ஆ ரமும்உந்தித்
தண்ட லைப்பல வளத்தொடும் வருபுனல்
தாழ்ந்துசே வடிதாழத்
தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமும்
செழுமணித் திரள்முத்தும்
கொண்டி ரட்டியுந் தோதமங் கெதிர்கொளக்
கொள்ளிடம் கடந்தேறி."

இந்தப் பாடல் குளகம். வண்டு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். இரைத்து - மொய்த்துக் கொண்டு ரீங்காரம் செய்து. எழு - மேலே எழுகின்ற. செழு - நிறச் செழிப்பைப் பெற்ற. மலர் - பல வகையான மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: மல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், அல்லி மலர், ஆம்பல்மலர், குமுத மலர், செங்கழு நீர் மலர், நீலோற்பல மலர், பவளமல்லிகை மலர், வில்வ மலர், மா மலர், வேப்ப மலர், சூரியகாந்தி மலர், வாகை மலர், வேங்கை மலர், சண்பக மலர், அரளி மலர், மஞ்சட் செவ்வந்தி மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், தாழம்பூ, நுணா மலர், நந்தியாவட்டை மலர் முதலியவை. ப்: சந்தி. பிறங்கலும் - குவிந்திருக்கும் மலையையும். மணியும் - மாணிக்கங் களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஆரமும் - சந்தன மரத்தையும். உந்தி - தள்ளிக் கொண்டு. த்: சந்தி. தண்டலை - பூம்பொழிலில் உள்ள. ப்: சந்தி. பல - பலவாகிய. வளத்தொடும் - மலர்கள், காய்கள், கனிகள், விதைகள் முதலிய வளங்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். வரு - ஓடி வரும். புனல் - கொள்ளிட ஆற்றின் நீர். தாழ்ந்து - தங்கி. சேவடி - தம்முடைய செந்தாமரை

மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகளை. அடி: ஒருமை பன்மை மயக்கம். தாழ - சேர்ந்து வருட. த்: சந்தி. தெண் - தெளிவைப் பெற்ற. திரை - அலைகளை வீசும்; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கடல் - சமுத்திரத்தில் தோன்றும். பவளமும் - பவளங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பணிலமும் - சங்குப் பூச்சிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செழு - செழிப்பைப் பெற்ற. மணி - மாணிக்கங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. திரள் - திரட்சியாக உள்ள. முத்தும் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கொண்டு - வாரிக் கொண்டு. இரட்டி - மாறி மாறி ஒலித்து. உந்து - தள்ளும். ஓதம் - கடலில் வீசும் அலைகள்; ஒருமை பன்மை மயக்கம். அங்கு - அந்த இடத்தில். எதிர் கொள - தம்மை எதிர் கொண்டு வரவேற்க. கொள: இடைக்குறை. க்: சந்தி. கொள்ளிடம் - கொள்ளிட ஆற்றை. கடந்து - தாண்டி. ஏறி - அதன் கரையின் மேல் ஏறி.

அடுத்து வரும் 147-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானமாகிய அருமையாக உள்ள அமுதத்தைப் போன்ற பாலைக் குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பலராகக் கூடியுள்ள பிரமபுரீசருடைய திருத்தொண்டர்கள் கூடியுள்ள கூட்டத்தோடும் தம்மோடு கூட வரும் தம்மோடு பழகிய வேதியர்கள் தம்மைச் சுற்றிவரத் தாம் போகும் நல்ல கதியினுடைய பிரயோசனத்தைப் பார்ப்பவரைப் போல மகிழ்ச்சி தம்முடைய திருவுள்ளத்தில் மிகுதியாகப் பொங்கி வருமாறு

பார்த்து மிகுதியாகக் கூடியுள்ள தேவர்கள் முதலாக உள்ள எல்லா வகையாகிய உயிர்களும் நடராஜப் பெருமானாரைப் பணிய அந்த உயிர்கள் வேண்டிய வரங்கள் எல்லா வற்றையும் வழங்கியருளும் நடராஜப் பெருமானார் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தைச் சுற்றியிருக்கும் அழகிய எல்லையில் அந்த நாயனார் நடராஜப் பெருமானாரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"மல்கு தொண்டர்தம் குழாத்தொடும் உடன்வரும்
பயில்மறை யவர்சூழச்
செல்க திப்பயன் காண்பவர் போற்களி
சிந்தைகூர் தரக்கண்டு
மல்கு தேவரே முதலனைத் துயிர்களும்
வணங்கவேண் டினவெல்லாம்
நல்கு தில்லைசூழ் திருஎல்லை பணிந்தனர்
ஞானஆ ரமுதுண்டார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. ஞான - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருக்கும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவ ஞானமாகிய. ஆரமுது - அருமையாக உள்ள அமுதத்தைப் போன்ற பாலை; உவம ஆகுபெயர். உண்டார் - குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். மல்கு - பலராகக் கூடியுள்ள. தொண்டர்தம் - பிரமபுரீ சருடைய தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. குழாத்தொடும் - கூடியுள்ள கூட்டத்தோடும். உடன் வரும் - தம்மோடும் கூட வரும். பயில் - தம்மோடும் பழகிய. மறையவர் - வேதியர்கள்; ஒருமை பன்மை

மயக்கம். சூழ - தம்மைச் சுற்றி வர. ச்: சந்தி. செல் - தாம் போகும். கதி - நல்ல கதியினுடைய. ப்: சந்தி. பயன் - பிரயோசனத்தை. காண்பவர் போல் - பார்ப்பவரைப் போல. களி - ஆனந்தம். சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். கூர்தரு - மிகுதியாகப் பொங்கி வருமாறு. க்: சந்தி. கண்டு - பார்த்து. மல்கு - மிகுதியாகக் கூடியுள்ள. தேவர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசை நிலை. முதல் - முதலாக உள்ள. அனைத்து உயிர்களும் - எல்லா வகையான உயிர்களும். வணங்க - நடராஜப் பெருமானாரைப் பணிய. வேண்டின - அந்த உயிர்கள் வேண்டியவை. எல்லாம் - எல்லாவற்றையும். நல்கு - வழங்கியருளும். தில்லை - நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தை. சூழ் - சுற்றியிருக்கும். திரு - அழகிய. எல்லை - எல்லையில். பணிந்தனர் - அந்த நாயனார் நடராஜப் பெருமானாரை வணங்கினார்.

பிறகு உள்ள 148-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சிவப்பாக விளங்கும் கண்களைப் பெற்ற இடப வாகனத்தை ஓட்டுபவராகிய நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தையே பார்த்து, இந்தத் திருத்தமாக அமைந்த உலகத்தில் வாழும் மக்கள் எல்லாருக்கும் மங்கலத்தை வழங்கியருளும் மிக்க இளம்பருவத்தைப் பெற்ற யானையைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் எழுந்தருளும் இரண்டு பக்கங்கள் ஆகிய எல்லா இடங்களிலும் தங்கிக் கொண்டிருக்கும் பலவகையாகிய பறவைகள் கூவும் சத்தங்கள் தம்மை வாழ்த்தும் வார்த்தைகளை எடுத்துக் கூற, தமக்கு முன்னால் உள்ள நீர் நிரம்பிய பொய்கையில் வளர்ந்திருக்கும்

செந்தாமரை மலர்களில் உள்ள தேனினுடைய நறுமணம் பொங்கி எழும் சிவப்பாக இருக்கும் அரும்புகளாகிய கைகளைக் குவித்துக் கும்பிட்டு மலர்ச்சியைப் பெற்ற முகத்தைத் தோற்றுமாறு செய்தன அந்தச் செந்தாமரை மலர்கள்.' பாடல் வருமாறு:

"செங்கண் ஏற்றவர் தில்லையே நோக்கிஇத்
திருந்துல கினிற்கெல்லாம்
மங்க லம்தரு மழவிளம் போதகம்
வரும்இரு மருங்கெங்கும்
தங்கு புள்ளொலி வாழ்த்துரை எடுத்துமுன்
தாமரை மதுவாசப்
பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகம்
காட்டின புனற்பொய்கை."

செம் - சிவப்பாக விளங்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஏற்றவர் - இடபவாகனத்தை ஓட்டுபவராகிய நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். தில்லையே - தில்லையாகிய சிதம்பரத்தையே. நோக்கி - பார்த்து. இத்திருந்து - இந்தத் திருத்தமாக அமைந்துள்ள. உலகினிற்கு எல்லாம் - உலகத்தில் வாழும் மக்கள் எல்லாருக்கும்; இட ஆகுபெயர். மங்கலம் - மங்கலத்தை. தரு - வழங்கியருளும். மழஇளம் - மிக்க இளம் பருவத்தைப் பெற்ற. போதகம் - யானையைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகு பெயர். வரும் - எழுந்தருளும். இரு - இரண்டு. மருங்கு - பக்கங்கள் ஆகிய; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். தங்கு - தங்கிக் கொண்டிருக்கும். புள் - பலவகையாகிய பறவைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஒலி - கூவும் சத்தங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாழ்த்துரை

- தம்மை வாழ்த்தும் வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து - எடுத்துக் கூற. முன் - தமக்கு முன்னால் உள்ள. புனல் - நீர் நிரம்பிய. பொய்கை - பொய்கையில்; மனிதர் ஆக்காத நீர் நிலை. தாமரை - வளர்ந்திருக்கும் செந்தாமரை மலர்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். மது - தேனினுடைய. வாச - நறுமணம். ப்: சந்தி. பொங்கு - பொங்கி எழும். செம் - சிவப்பாக இருக்கும். முகை - அரும்புகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். கரம் - கைகளை; ஒருமை பன்மை மயக்கம். குவித்து - கூப்பிக் கும்பிட்டு. அலர் - மலர்ச்சியைப் பெற்ற. முகம் - முகத்தை. காட்டின - தோற்றுமாறு செய்தன அந்தச் செந்தாமரை மலர்கள். செந்தாமரை மலர்கள்: தோன்றா எழுவாய்.

பிறகு வரும் 149-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளும் சமயத்தில் தோகைகளைப் பெற்ற மயிற் கூட்டம் களிப்பைப் பெற்றுத் தம்மை வரவேற்று அழைக்க, மிக்க நறுமணம் கமழும் குளிர்ச்சியைப் பெற்ற தென்றற் காற்று வந்து உலாவித் தமக்கு முன்னால் தம்மை வணங்கி எதிர் கொண்டு வரவேற்க, கிளர்ச்சியை அடைந்து மேலே பறந்து எழுந்து தம்மோடு வரும் வண்டுகள் ரீங்காரம் செய்ய மரங்களில் விளங்கும் சிவந்த தளிர்களினுடைய பிரகாசத்தைப் பெற்ற நிறம் பொலிய இரண்டு மகரக்குழைகளும் தம்முடைய திருச்செவிகளினுடைய பக்கங்களில் அசைந்து ஆட, செந்தாமரை மலரைப் போன்ற தம்முடைய திருமுகம் விளங்கி அசைய, மென்மையான மரக்கிளைகள் பல வகையான மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்கள் ஓங்கி நிற்கும் பூம்பொழிலில் நின்று கொண்டு அந்த மயில்கள் நடனமாடுபவைகளாக இருக்கும்.' பாடல் வருமாறு:

"கலவ மென்மயில் இனம்களித் தழைத்திடக்
கடிமணக் குளிர்கால்வந்
துலவி முன்பணிந் தெதிர்கொளக் கிளர்ந்தெழுந்
துடன்வரும் சுரும்பார்ப்ப
இலகு செந்தளிர் ஒளிநிறம் திகழ்தர
இருகுழை புடையாட
மலர்மு கம்பொலிந் தசையமென் கொம்பர்நின்
றாடும் மலர்ச்சோலை."

கலவ - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளிய சமயத்தில் தோகையைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையான. மயில் - மயில்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இனம் - கூட்டம். களித்து - களிப்பைப் பெற்று. அழைத்திட - தம்மை வரவேற்று அழைக்க. க்: சந்தி. கடிமண - மிக்க நறுமணம் கமழும். க்: சந்தி. குளிர் - குளிர்ச்சியைப் பெற்ற. கால் - தென்றற் காற்று. வந்து உலவி - வீசி வந்து உலாவி. முன் - தமக்கு முன்னால். பணிந்து - தம்மை வணங்கி. எதிர் கொள - எதிர் கொண்டு வரவேற்க. கொள: இடைக்குறை. க்: சந்தி. கிளர்ந்து - கிளர்ச்சியை அடைந்து. எழுந்து - மேலே பறந்து எழுந்து. உடன் வரும் - தம்மோடு வரும். சுரும்பு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்ப்ப - ரீங்காரம் செய்ய. இலகு - விளங்கும். செந்தளிர் - பல வகையான மரங்களில் விளங்கும் சிவந்திருக்கும் தளிர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தளிர் - முற்றாத இலை. ஒளி - பிரகாசத்தைப் பெற்ற. நிறம் - வர்ணம். திகழ்தர - பொலிய. இரு - இரண்டு. குழை - மகரக் குழைகள்; ஒருமை பன்மை மயக்கம். புடை - தம்முடைய இரண்டு திருச்செவி களினுடைய பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ஆட - அசைந்து அசைந்து ஆட. மலர் - செந்தாமரை மலரைப் போன்ற; உவம ஆகுபெயர். முகம் - தம்முடைய திருமுகம்.

பொலிந்து - தோற்றப் பொலிவை அடைந்து. அசைய - அசைந்திருக்க. மென் - மென்மையான. கொம்பர் - மரக்கிளைகள்; ஒருமை பன்மை மயக்கம். மலர் - பல வகையான மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சோலை - பூம்பொழிலில். நின்று - நின்று கொண்டு. ஆடும் - அந்த மயில்கள் நடனமாடுபவைகளாக விளங்கும்.

பின்பு உள்ள 150-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அணிகலன்களை அணிந்து கொண்டிருக்கும் விசாலமான கொங்கைகளைப் பெற்ற இமய மலை அரசனுடைய பெருமையைப் பெற்று விளங்கும் புதல்வியும், பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பெரிய நாயகி இனிய சுவையைப் பெற்ற அமிர்தம் என்று கூறுமாறு சிவஞானத்தை ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துக் குழைத்து வழங்கியருள அந்தச் சிவஞானப் பாலைத் திருவமுது செய்தருளிய குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருள அதைப் பார்த்து மழையைப் போலக் குளிர்ச்சியைப் பெற்ற மந்தமாருதமாகிய தென்றற் காற்றினால் நறுமணம் கமழும் மலர்களில் உள்ள மஞ்சள் நிறத்தைக் கொண்ட நுட்பமாக உள்ள மகரந்தப் பொடிகளை எந்த இடத்திலும் தூவி தழைத்து எழுந்த பொங்கி வரும் அழகைப் பெற்ற முகங்களைக் காட்டி விசாலமான பெருத்த வயல்களில் விளைந்து நிற்கும் நெற் கதிர்கள் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பணிந்தன.' பாடல் வருமாறு:

"இழைத்த டம்கொங்கை இமயமா மலைக்கொடி
இன்னமுதென ஞானம்
குழைத்த ளித்திட அமுதுசெய் தருளிய
குருளையார் வரக்கண்டு

மழைத்த மந்தமா ருதத்தினால் நறுமலர்
வண்ணநுண் துகள்தூவித்
தழைத்த பொங்கெழில் முகம்செய்து வணங்கின
தடம்பணை வயற்சாலி.''

இழை - அணிகலன்களை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். அந்த அணிகலங்களாவன: உச்சிப்பூ, சுட்டி, நெற்றிப்பட்டம், வைர அட்டிகை, வங்கி, ஜிமிக்கிகள், வைரத் தோடுகள், கம்மல்கள், கைவளைகள், கங்கணங் கள், மாட்டல்கள், தங்க வளையல்கள், இடையில் பட்டாடை, சிலம்புகள், விரல்களில் மெட்டிகள் முதலியவை. த்: சந்தி. தடம் - விசாலமான. கொங்கை - கொங்கைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். இமய மாமலைக்கொடி - இமயமலை அரசனுடைய பெருமையைப் பெற்று விளங்கும் புதல்வியும், பூங்கொடியைப் போன்றவரும் ஆகிய பெரியநாயகி. இமயமலை: திணை மயக்கம். இன் - இனிய சுவையைப் பெற்ற. அமுது என - அமிர்தம் என்று கூறுமாறு. என: இடைக்குறை. ஞானம் - சிவஞானத்தை. குழைத்து - ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துக் குழைத்து. அளித்திட - தமக்கு வழங்கியருள. அமுது செய்தருளிய - அந்தச் சிவஞானப் பாலைத் திருவமுது செய்தருளிய; குடித்தருளிய. குருளையார் - ஆண்குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நயானார். வர - சிதம்பரத்திற்கு எழுந்தருளி. க்: சந்தி. கண்டு - அவருடைய வருகையைப் பார்த்து. மழைத்த - மழையைப் போலக் குளிர்ச்சியைப் பெற்ற. மந்தமாருதத்தினால் - மந்த மாருதமாகிய தென்றற் காற்றினால். நறு - நறுமணம் கமழும். மலர் - மலர்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். வண்ண - மஞ்சள் நிறத்தைப் பெற்ற. நுண் - நுட்பமாக உள்ள. துகள் - மகரந்தப் பொடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தூவி - எந்த இடத்திலும் இரைத்து. த்: சந்தி. தழைத்த - தழைத்து எழுந்த.

பொங்கு - பொங்கி வரும். எழில் - அழகைப் பெற்ற. முகம் - முகங்களை; ஒருமை பன்மை மயக்கம். செய்து - காட்டி. தடம் - விசாலமாக இருக்கும். பணை - பருத்த. வயல் - வயல்களில் விளைந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். சாலி - நெற்கதிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வணங்கின - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பணிந்தன.

பிறகு உள்ள 151-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம், சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் வீற்றிருந்தருளும் பெரியநாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துக் குழைத்து வழங்கியருளிய சிவஞானப் பாலைக் குடித்தவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளும் அந்த நல்ல செயலைப் பார்த்துச் சேல் மீன்கள் புரளும் குளிர்ச்சியைப் பெற்ற நீர் நிரம்பியிருக்கும் தடாகத்தில் படிந்து வந்து சேரும் குளிர்ச்சியைக் கொண்ட மந்தமாருதமாகிய தென்றற்காற்று வீச மிகவும் பல கண்களைப் பெற்று விளங்கும் பிரயோசனத்தை அடையும் பான்மையோடு மகிழ்ச்சியை மிகுதியாக அடைபவற்றைப் போல அந்தச் சிதம்பரத்திற்கு வெளியிடத்தில் வளர்ந்து நிற்கும் பருத்த அடிமரத்தைப் பெற்ற நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்திருக்கும் கமுக மரங்கள் அசைந்து அசைந்து இரண்டு பக்கங்களிலும் செறிந்து ஆடின.' பாடல் வருமாறு:

"ஞாலம் உய்ந்திட ஞானம்உண் டவர்எழுந்
தருளும்அந் நலம்கண்டு
சேல லும்புதண் புனல்தடம் படிந்தணை
சீதமா ருதம்வீச

சால வும்பல கண்பெறும் பயன்பெறும்
தன்மையிற் களிகூர்வ
போல சைந்திரு புடைமிடைந் தாடின
புறம்பணை நறும்பூகம்.''

ஞாலம் - இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகு பெயர். உய்ந்திட - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். ஞானம் - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையில் வீற்றிருந்தருளும் பெரியநாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு கிண்ணத்தில் வைத்துக் குழைத்து வழங்கியருளிய சிவஞானப் பாலை. உண்டவர் - குடித்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எழுந்தருளும் - சிதம்பரத்திற்கு எழுந்தருளும். அந்நலம் - அந்த நல்ல செயலை. கண்டு - பார்த்து. 'தெரிந்து கொண்டு' எனலும் ஆம். சேல் - சேல் மீன்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலும்பு - துள்ளிக் குதித்துப் புரளும். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. புனல் - நீர் நிரம்பியிருக்கும். தடம் - தடாகத்தில். படிந்து அணை - படிந்து வந்து சேரும். சீத - குளிர்ச்சியைப் பெற்ற. மாருதம் - மந்தமாருதமாகிய தென்றற்காற்று. வீச - மெல்ல அடிக்க. ச்: சந்தி. சாலவும் - மிகவும். பலகண் - பல கண்களை; ஒருமை பன்மை மயக்கம். கண் - அணு. பெறும் - அடைந்திருக்கும். பயன் - பிரயோசனத்தை. பெறும் - அடையும். தன்மையில் - பான்மையோடு; உருபு மயக்கம். களி - மகிழ்ச்சியை. கூர்வ போல - மிகுதியாக அடைபவற்றைப் போல. புறம் - அந்தச் சிதம்பரத்திற்கு வெளியிடத்தில் வளர்ந்து நிற்கும். பணை - பருத்த அடிமரத்தைப் பெற்ற. நறும் - நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்திருக்கும். பூகம் - கமுக மரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அசைந்து - அசைந்து அசைந்து. இரு - இரண்டு.

புடை - பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மிடைந்து - செறிந்து. ஆடின - ஆடிக் கொண்டிருந்தன.

ஞாலம் உய்ந்திட ஞானம் உண்டவர்: ''புனவாயில் போற்றிசெய்து வணங்கினார் உலகுய்ய ஞானம் உண்டார்.'', ''உலகுய்ய உலவாத ஞானம் பெற்றார்.'' என்று சேக்கிழார் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 152-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பிறப்பைப் போக்கியருள்பவராகிய நடராஜப் பெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தைச் சுற்றியுள்ள எல்லையில் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் புரியும் யாகங்களில் சிவபெருமானை வழங்கும் பிரயோசனத்தைப் பெற்ற நெய், சமித்துக்கள், அன்னம் முதலிய ஆகுதிகளை யாகத்தியில் சொரிந்ததனால் எழுந்த செழுமையைப் பெற்ற புகையினுடைய பரப்பினால் தவம் தழைக்குமாறு சீகாழியில் திருவவதாரம் செய்து வந்தருளிய ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளி அடைய அவருக்கு முன்னால் மேலே உயர்ந்த நீல நிறத்தைப் பெற்ற நுட்பமான மெல்லிய ஆடையை மேற்கட்டியாகக் கட்டியதைப் போல் உயர்ந்த ஆகாயம் விளங்கியது.' பாடல் வருமாறு:

''பவந்த விர்ப்பவர் தில்லைசூழ் எல்லையில்
மறையவர் பயில்வேள்விச்
சிவந்த ரும்பயன் உடையஆ குதிகளின்
செழும்புகைப் பரப்பாலே
தவந்த ழைப்பவந் தருளிய பிள்ளையார்
தாமணை வுறமுன்னே
நிவந்த நீலநுண் துகில்வி தானித்தது
போன்றது நெடுவானம்.''

பவம் - பிறப்பை. தவிர்ப்பவர் - போக்கியருள் பவராகிய நடராஜப் பெருமானார். தில்லை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தை. சூழ் - சுற்றியுள்ள. எல்லையில் மறையவர் - எல்லையில் மூவாயிரம் பேர்களும்; ஒருமை பன்மை மயக்கம். பயில் - புரியும். வேள்வி - யாகங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சிவம் - சிவபெருமனை. தரும் - வழங்கும். பயன் - பிரயோசனத்தை. உடைய - பெற்ற. ஆகுதிகளின் - நெய், சமித்துக்கள், சுத்தான்னம், அட்சதை, பால் முதலிய ஆகுதிகளை. செழும் - யாகத்தீயில் சொரிந்ததனால் எழுந்த செழுமையைப் பெற்ற. புகைப்பரப்பால் - புகையினுடைய பரப்பினால். ஏ: அசைநிலை. தவம் தழைப்ப - தவசிகள் புரியும் தவம் தழைத்து ஓங்குமாறு. வந்தருளிய - சீகாழியில் திருவவதாரம் செய்து வந்தருளிய. பிள்ளையார்தாம் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தாம்: அசைநிலை. அணைவுற - சிதம்பரத்திற்கு எழுந்தருளி அடைய. முன் - அவருக்கு முன்னால். ஏ: அசைநிலை. நிவந்த - மேலே உயர்ந்துள்ள. நீல - நீல நிறத்தைப் பெற்ற. நுண் - நுட்பமான. துகில் - மெல்லிய ஆடையை. விதானித்தது போன்றது நெடுவானம் - மேற்கட்டியாகக் கட்டியதைப் போல உயரமான ஆகாயம் விளங்கியது.

*பின்பு உள்ள 153-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'கரும்புச் செடிகளும், சம்பா நெற்பயிர்களும், பசுமையாகிய பாக்கு மரங்களோடு சேர்ந்து உயரமாக வளர்ந்து நிற்கும் வயல்களைப் பெற்ற அழகிய பண்ணையை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் விட்டு விட்டு எழுந்தருளி அரும்புகளும், மென்மையான மலர்களும், பல தளிர்களும் வேர்களும் என்று எல்லாப் பொருள்களுக்கும்

இருப்பிடமாக விளங்கும் பக்கத்தில் உள்ள நந்தவனத்தை வணங்கிவிட்டு, மாடங்களும், திருமாளிகைகளும் உயரமாக நின்று ஒன்றனோடு ஒன்று நெருக்கமாக இருக்கும் தில்லையாகிய சிதம்பரத்தைச் சுற்றியிருக்கும் உயரமாகிய திருமதிலுக்குத் தென்திசையில் உள்ள அழகிய திருக்கோயிலினுடைய வாசல் தமக்கு நேரில் சமீபத்தில் இருப்பதாக அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"கரும்பு செந்நெல் பைங்கமுகொடு கலந்துயர்
கழனியம் பணைநீங்கி
அரும்பு மென்மலர் தளிர்பல மூலமென்
றனைத்தின்ஆ கரமான
மருங்கில் நந்தன வனம்பணிந் தணைந்தனர்
மாடமா ளிகைஓங்கி
நெருங்கு தில்லைசூழ் நெடுமதில் தென்திரு
வாயில்நே ரணித்தாக."

கரும்பு - கரும்புச் செடிகளும்; ஒருமை பன்மை மயக்கம். செந்நெல் - சம்பா நெற் பயிர்களும்; ஒருமை பன்மை மயக்கம். பைம் - பசுமையாக இருக்கும். கமுகொடு - பாக்கு மரங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கலந்து - சேர்ந்து. உயர் - உயரமாக வளர்ந்து நிற்கும். கழனி - வயல்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அம் - அழகிய. பணை - பண்ணையை; இடைக்குறை. நீங்கி - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் விட்டு விட்டு எழுந்தருளி. அரும்பு - அரும்புகளும்; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையாகிய. மலர் - மலர்களும்; ஒருமை பன்மை மயக்கம். தளிர் பல - பல தளிர்களும்; ஒருமை பன்மை மயக்கம். தளிர் - முற்றாத இல்லை. 'பலம் - பழங்களும்' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். மூலம் - வேர்களும்; ஒருமை பன்மை மயக்கம். என்று - என

உள்ள. அனைத்தின் - எல்லாப் பொருள்களுக்கும். ஆகரம் ஆன - இருப்பிடமாக விளங்கும். மருங்கில் - பக்கத்தில் உள்ள. நந்தனவனம் - திருக்கோயிலைச் சார்ந்த நந்தனவனத்தை. பணிந்து - வணங்கி விட்டு. மாட - மாடங்களும்; ஒருமை பன்மை மயக்கம். மாளிகை - திருமாளிகைகளும்; ஒருமை பன்மை மயக்கம். ஓங்கி - உயரமாக நின்று. நெருங்கு - நெருக்கமாக இருக்கும். தில்லை - தில்லையாகிய சிதம்பரத்தை. சூழ் - சுற்றியிருக்கும். நெடு - உயரமாகிய. மதில் - திருமதிலுக்கு. தென் - தெற்குத் திசையில் உள்ள. திருவாயில் - அழகிய திருக்கோயிலினுடைய திருவாசல். நேர் - தமக்கு நேரில். அணித்தாக - சமீபத்தில் இருப்பதாக. அணைந்தனர் - அந்த நாயனார் அடைந்தார்.

அடுத்து வரும் 154-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'பால் பொங்கி எழும் தம்முடைய கொங்கைகளி லிருந்து கறந்த உண்மையாகிய சிவஞானப் பாலாகும் விருந்தைத் தங்கம் உண்டாகும் இமயமலை அரசனுடைய புதல்வியாகிய மங்கைப் பருவத்தைப் பெற்ற பெரியநாயகியார் தம்முடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருக்கரங்களால் உண்ணுமாறு செய்தருள அந்தப் பாலைக் குடித்தருளிய ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளினார் என அந்தச் சிதம்பரத்தில் வாழும் பெருமையைப் பெற்று விளங்கும் அழகிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் நடராஜப் பெருமானாருடைய பக்தர்களோடு வந்து சேர்ந்து எல்லா இடங்களிலும் மங்கலமாகிய அலங்காரங்களை மிகுதியாக அலங்காரம் புரிந்து திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை எதிர் கொண்டு வரவேற்பதற்காக அவர்கள் அடைவார்களானார்கள்.' பாடல் வருமாறு:

"'பொங்கு கொங்கையிற் கறந்தமெய்ஞ்
ஞானமாம் போனகம் பொற்குன்ற
மங்கை செங்கையால் ஊட்டஉண்
டருளிய மதலையார் வந்தார்'என்
றங்கண் வாழ்பெருந் திருத்தில்லை
அந்தணர் அன்பர்க ளுடன்ஈண்டி
எங்கும் மங்கல அணிமிக
அலங்கரித் தெதிர்கொள அணைவார்கள்."

பொங்கு - பால் பொங்கி எழும். கொங்கையில் - தம்முடைய கொங்கைகளிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். கறந்தமெய் - கறந்த உண்மையான. ஞ்: சந்தி. ஞானமாம் - சிவஞானப் பாலாகும். போனகம் - விருந்தை. பொன் - தங்கம் உண்டாகும். குன்ற - இமயமலை அரசனுடைய புதல்வியாகிய; திணை மயக்கம்; ஆகுபெயர். மங்கை - மங்கைப் பருவத்தைப் பெற்றவரும், சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் வீற்றிருப்பவருமாகிய பெரியநாயகியார். செங்கையால் - தம்முடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருக்கரங்களால்; ஒருமை பன்மை மயக்கம். ஊட்ட - உண்ணுமாறு செய்தருள. உண்டருளிய - அந்தப் பாலைக் குடித்தருளிய. மதலையார் - ஆண் குழந்தையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நயானார். வந்தார் - சிதம்பரத்திற்கு எழுந்தருளினார். என்று - என. அங்கண் - அந்தச் சிதம்பரத்தில். வாழ் - வாழும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். திரு - அழகிய; 'செல்வத்தைப் பெற்ற' எனலும் ஆம். த்: சந்தி. தில்லை - தில்லையாகிய சிதம்பரத்தில். அந்தணர் - வாழும் தில்லைவாழ் மூவாயிரம் அந்தணர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அன்பர்களுடன் - நடராஜப் பெருமானாருடைய

பக்தர்களோடு. ஈண்டி - வந்து சேர்ந்து. எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மங்கல - மங்கலகரமாகிய. அணி - அலங்காரங்களை; ஒருமை பன்மை மயக்கம். மிக - மிகுதியாக. அலங்கரித்து - அலங்காரம் புரிந்து. எதிர்கொள - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை எதிர்கொண்டு வரவேற்பதற்காக. கொள: இடைக்குறை. அணைவார்கள் - அவர்கள் அடைபவர்கள் ஆனார்கள்.

அடுத்து வரும் 155-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சிதம்பரத்தில் வாழும் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் ஓதும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய இனிய கானமும், மங்கல வாத்தியங்களை அவற்றை வைத்திருப்பவர்கள் வாசிக்கும் பேரொலியும், ஆகாயத்தில் நிரம்பி ஓங்கி எழ, குளிர்ச்சியைப் பெற்ற நறுமணம் கமழும் புனல் நிரம்பிய பூர்ண கும்பங்களையும், திருவிளக்குகளையும் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வட கிழக்கு, வட மேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத்திசைகள் எல்லாவற்றிலும் நிரம்பி அமைய ஒளி வெள்ளத்தை வீசும் பெருமையைப் பெற்று விளங்கும் அழகிய திருக் கோயிலினுடைய கோபுர வாசலுக்கு வெளியில் போய் சோபனத்தை உண்டாக்கும் வார்த்தைகளையும் கூறி ஒரு குற்றமும் இல்லாதவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை எதிர்கொண்டு வரவேற்று அவரை அழைத்துக் கொண்டு சிதம்பரத்துக்குள் நுழைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"வேத நாதமும் மங்கல முழக்கமும்
விசும்பிடை நிறைந்தோங்கச்
சீத வாசநீர் நிறைகுடம் தீபங்கள்
திசைஎலாம் நிறைந்தாரச்
சோதி மாமணி வாயிலின் புறம்சென்று
சோபன ஆக்கமும்சொல்லிக்
கோதி லாதவர் ஞானசம் பந்தரை
எதிர்கொண்டு கொடுபுக்கார்."

வேத - சிதம்பரத்தில் வாழும் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் ஓதும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதமும் - இனிய கானமும். மங்கல - மங்கல வாத்தியங் களை; ஒருமை பன்மை மயக்கம். முழக்கமும் - அவற்றை வைத்திருப்பவர்கள் வாசிக்கும் பேரொலியும். விசும்பிடை - ஆகாயத்தில். நிறைந்து - நிரம்பி. ஓங்க - ஓங்கி எழ. ச்: சந்தி. சீத - குளிர்ச்சியைப் பெற்ற. வாச - நறுமணம் கமழும். நீர் - புனல். நிறை - நிரம்பிய. குடம் - பூரண கும்பங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். தீபங்கள் - திருவிளக்குக்களையும் ஏற்றி வைத்து. திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வட கிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளின்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. நிறைந்து - நிரம்பி. ஆர - அமைய. ச்: சந்தி. சோதி - ஒளி வெள்ளத்தை வீசும். மா - பெருமையைப் பெற்று விளங்கும். மணி - அழகிய; 'சிறிய மணிகளைக் கட்டியிருக்கும்' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். வாயிலின் - திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுர வாசலுக்கு. புறம் - வெளியில். சென்று - போய். சோபன - சோபனத்தை;

மங்கலத்தை. ஆக்கமும் - உண்டாக்கும் வார்த்தைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். சொல்லீ - கூறி. க்: சந்தி. கோது - ஒரு குற்றமும். இலாதவர் - இல்லாதவராகிய; இடைக்குறை. ஞான சம்பந்தரை - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. எதிர் கொண்டு - எதிர்கொண்டு வரவேற்று. கொடு - அந்த நாயனாரை அழைத்துக் கொண்டு. புக்கார் - சிதம்பரத்துக்குள் நுழைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 156-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தப் பரிசுத்தராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செல்வத்தைப் படைத்தவர்கள் மிகுதியாக உள்ள தில்லையாகிய சிதம்பரம் என்னுஃம் பழமையாகிய சிவத்தலத்திற்குத் தெற்குத் திசையில் உள்ள அழகிய வாசலினுடைய எல்லையை விட்டு விட்டு அகன்று நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குள் நுழைந்து இரண்டு பக்கங்களிலும் நின்று கொண்டு பக்தர்கள் தொடங்கிக் கூறும் துதிகளினுடைய ஓசை சுற்றி அமைய வளப்பம் பொருந்திய கடைவீதியைக் கடந்து அப்பால் எழுந்தருளி தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் வளம் நிறைந்த தங்களுடைய வாழ்க்கைகளை நடத்தும் பழமையாகிய திருமாளிகைகளினுடைய வரிசையைப் பெற்று விளங்கும் திருவீதியில் இருந்தபடி நடராஜப் பெருமானாரை வணங்கிப் விட்டுப் பிறகு திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில்
தென்றிசைத் திருவாயில்
எல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்கும்நின்
றெடுக்கும்ஏத் தொலிசூழ
மல்லல் ஆவண மறுகிடைக் கழிந்துபோய்
மறையவர் நிறைவாழ்க்கைத்

தொல்லை மாளிகை நிரைத்திரு வீதியைத்
தொழுதணைந் தனர்தூயோர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. தூயோர் - பரிசுத்தராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். செல்வம் - செல்வத்தைப் படைத்த செல்வர்கள்; திணை மயக்கம். மல்கிய - மிகுதியாக உள்ள. தில்லை - தில்லையாகிய சிதம்பரம் என்னும். மூதூரினில் - பழமையாகிய சிவத்தலத்திற்கு; உருபு மயக்கம். தென் திசை - தெற்குத் திசையில் உள்ள. த்: சந்தி. திருவாயில் - அழகிய வாசலினுடைய. எல்லை - எல்லையை. நீங்கி - விட்டு விட்டு அகன்று. உள் - நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு உள்ளே. புகுந்து - நுழைந்து. இரு - இரண்டு. மருங்கும் - பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நின்று - நின்று கொண்டு. எடுக்கும் - பக்தர்கள் தொடங்கிக் கூறும். பக்தர்கள்: தோன்றா எழுவாய். ஏத்து ஒலி - துதிகளினுடைய ஓசை; ஒருமை பன்மை மயக்கம். ஏத்து: முதனிலைத் தொழிற்பெயர். சூழ - சுற்றி அமைய. மல்லல் - சரக்குக்களின் வளப்பம் பொருந்திய. ஆவண மறுகிடை - கடைகள் அமைந்திருக்கும் வீதியை. க்: சந்தி. கழிந்து - கடந்து. போய் - அப்பால் எழுந்தருளி. மறையவர் - தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும்; ஒருமை பன்மை மயக்கம். நிறை - வளம் நிறைந்த. வளம் - செல்வ வளம், மக்கள் வளம் முதலியவை. வாழ்க்கை - தங்களுடைய வாழ்க்கைகளை நடத்தும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொல்லை - பழையவை ஆகிய. மாளிகை - திருமாளிகைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரை - வரிசையைப் பெற்று விளங்கும். த்: சந்தி. திருவீதியை - திருவீதியில்; உருபு மயக்கம். த்:சந்தி. தொழுது -

இருந்தபடியே நடராஜப் பெருமானாரை வணங்கி விட்டு. அணைந்தனர் - பிறகு திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்தார்.

பிறகு வரும் 157-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'மலர்ந்து அமைந்த பெருமையோடு விளங்கும் பிரகாசம் குளிர்ச்சியை வழங்கச் சைவ சமயத்தினுடைய விபூதியின் நறுமணம் கமழ்ந்து வெண்மையாகிய புழுதி மாறிப்போய் சிலம்புகள் ஒலிக்கும் செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகளைப் பெற்றவராகிய நடராஜப் பெருமானார் திருநடனம் புரிந்தருளும் சிறப்பான பான்மையினால் திருத்தொண்டு களைப் புரிவதில் கலந்திருக்கும் டக்தராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவுள்ளத்தில் விளங்கும் சிதம்பரத்தில் உள்ள அழகிய தெரு தம்முடைய கண்களுக்குக் களிப்பை உண்டாக்க பக்தியினுடைய பிரயோசனத்தைப் பெற்றுக் கொள்ளும் வலிமையைப் பெற்றவராகிய அந்த நாயனார் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் ஏழு தளங்களைக் கொண்ட கோபுர வாசலில் அந்த நடராஜப் பெருமானாரைத் தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்த நடராஜப் பெருமானாரை வாழ்த்தி வணங்கி எழுந்தார்.' பாடல் வருமாறு:

"மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணம்
கமழ்ந்துவான் துகள்மாறிச்
சிலம்ப லம்புசே வடியார் பயில்வுறும்
செம்மையால் திருத்தொண்டு
கலந்த அன்பர்தம் சிந்தையில் திகழ்திரு
வீதிகண் களிசெய்யப்
பலன்கொள் மைந்தனார் எழுநிலைக் கோபுரம்
பணிந்தெழுந் தனர்போற்றி."

மலர்ந்த - மலர்ச்சியை அடைந்த. பேரொளி - பெருமையைப் பெற்று விளங்கும் பிரகாசம். குளிர் - குளிர்ச்சியை; முதல்நிலைத் தொழிற்பெயர். தர - வழங்க. ச்: சந்தி. சிவமணம் - சைவ சமயத்துக்குரிய விபூதியின் நறுமணம். கமழ்ந்துவான் - கமழ்ந்து வெண்மையாகிய. துகள் - புழுதி. மாறி - அடங்கிப் போய். ச்: சந்தி. சிலம்பு - சிலம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். அலம்பு - ஒலிக்கும். சேவடியார் - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகளைப் பெற்றவராகிய நடராஜப் பெருமானார். அடி: ஒருமை பன்மை மயக்கம். பயில்வுறும் - திருநடனம் புரிந்தருளும். செம்மையால் - சிறப்பான பான்மையினால். திருத்தொண்டு - திருத்தொண்டுகளைப் புரிவதில்; ஒருமை பன்மை மயக்கம். கலந்த - கலந்திருக்கும். அன்பர்தம் - பிரமபுரீசருடைய பக்தருடைய. தம்: அசைநிலை. சிந்தையில் - திருவுள்ளத்தில். திகழ் - விளங்கும். திருவீதி - சிதம்பரத்தில் உள்ள அழகிய ஒரு. கண் - தம்முடைய கண்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். களி - ஆனந்தத்தை. செய்ய - உண்டாக்க. ப்: சந்தி. பலன் - பக்தியினுடைய பிரயோசனத்தை. கொள் - பெற்றுக் கொள்ளும். மைந்தனார் - வலிமையைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எழு - ஏழு. நிலை - தளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கோபுரம் - கோபுர வாசலில். பணிந்து - அந்த நடராஜப் பெருமானாரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு. போற்றி எழுந்தனர் - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்த நடராஜப் பெருமானாரை வாழ்த்தி எழுந்தார்.

அடுத்து உள்ள 158-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரம் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் நீளமான ஏழு

தளங்களைப் பெற்ற கோபுர வாசலுக்கு உள்ளே நுழைந்து அவ்விடத்தில் மேவிய அழகிய முற்றத்தினுடைய பக்கத்தில் சிவப்பாக விளங்கும் தங்கத் தகடுகளால் வேயப் பெற்ற திருச்சிற்றம்பலத்தின் கோபுரத்தை வலமாக வந்து ஆகாயத்தை அளாவத் தங்கும் சந்திரனைத் தன்னுடைய உச்சியில் தவழச் செய்கின்ற பேரம்பலத்தில் எழுந்தருளியுள்ள நடராஜப் பெருமானாரை வணங்கிவிட்டு அப்பால் எழுந்தருளி பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங் களும் தொடர்ச்சியாக இருந்து துதிக்கத் திருச்சிற்றம் பலத்தில் திருநடனம் புரிந்தருள்கிறவராகிய நடராஜப் பெருமானாருடைய சந்நிதியை அடைவதற்காக அழகு கிளர்ச்சி பெற்ற அழகிய கோபுர வாசலை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"நீடு நீள்நிலைக் கோபுரத் துள்புக்கு
நிலவிய திருமுன்றில்
மாடு செம்பொனின் மாளிகை வலங்கொண்டு
வானுற வளர்திங்கள்
சூடு கின்றபே ரம்பலம் தொழுதுபோந்
தருமறை தொடர்ந்தேத்த
ஆடு கின்றவர் முன்புற அணைந்தனர்
அணிகிளர் மணிவாயில்."

நீடு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்தில் உள்ள நடராஜப் பெருமானாருடைய திருக் கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும். நீள் - நீளமான. நிலை - ஏழு தளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கோபுரத்துள் - கோபுர வாசலுக்கு உள்ளே. புக்கு - நுழைந்து. நிலவிய - அந்த இடத்தில் மேவிய. திரு -

அழகிய. முன்றில் - முற்றத்தினுடைய. முன்றில் - இல்முன்; பின் முன்னாகத் தொக்க தொகை. மாடு - பக்கத்தில். செம்பொனின் - சிவப்பாக விளங்கும் தங்கத் தகடுகளால் வேயப் பெற்ற. பொனின்: இடைக்குறை. பொன்: ஆகுபெயர். மாளிகை - திருச்சிற்றம்பலத்தின் கோபுரத்தை. வலம் கொண்டு - வலமாக வந்து. வானுற - ஆகாயத்தை அளாவுமாறு. வளர் - தங்கும். திங்கள் - சந்திரனை. சூடுகின்ற - தன்னுடைய உச்சியில் தவழச் செய்கின்ற. பேரம் பலம் - பேரம்பலத்தில் எழுந்தருளியுள்ள நடராஜப் பெருமானாரை; இட ஆகுபெயர். தொழுது - வணங்கி விட்டு. போந்து - அப்பால் எழுந்தருளி. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம்; சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். தொடர்ந்து - தொடர்ச்சியாக இருந்து. ஏத்த - துதிக்க. ஆடுகின்றவர் - திருநடனம் புரிந்தருள்கின்றவராகிய நடராஜப் பெருமானாருடைய. முன்பு - சந்நிதியை. உற - அடைவதற்காக. அணி - அழகு. கிளர் - கிளர்ச்சியைப் பெற்ற. மணி - அழகிய. வாயில் - கோபுர வாசலை. அணைந்தனர் - அந்த நாயனார் அடைந்தார்.

பின்பு உள்ள 159-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அடியேங்களுடைய தலைவனாகிய நந்திதேவன் முதலாக உள்ள சிவகணங்களுக்குத் தலைவர்கள் பல வகையான நன்மைகளைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு பல தடவைகள் சிதம்பரத்தை வந்து அடைய முடிவு இல்லாத புகழைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானாரைச் சமீபித்து அவருடைய சந்நிதியில் அவரை வணங்கி விட்டு அழகிய திருவணுக்களாகும் அழகிய வாசலில் தம்முடைய

திருவுள்ளத்தில் பேராவலும் பெருகி எழத் தம்முடைய தலையின்மேல் தம்முடைய சிறியவையாகிய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் கைகள் ஏறக் கும்பிட்டு, உஜ்ஜீவனத்தை அடைந்து மகிழ்ச்சியை அடையும் தம்முடைய அழகிய விழிகள் மகிழ்ச்சியை அடைய உருக்கத்தை அடையும் பக்தியோடு அந்த நாயனார் திருக்கோயிலுக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"நந்தி எம்பிரான் முதற்கண நாதர்கள்
நலம்கொள்பன் முறைகூட
அந்தம் இல்லவர் அணுகிமுன் தொழுதிரு
அணுக்களாம் திருவாயில்
சிந்தை ஆர்வமும் பெருகிடச் சென்னியிற்
சிறியசெங் கையேற
உய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள்ள
உருகுமன் பொடுபுக்கார்."

நந்தி எம்பிரான் - அடியேங்களுடைய தலைவனாகிய நந்திதேவன். 'அடியேங்கள்' என்றது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. முதல் - முதலாக உள்ள. கண - சிவகணங்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். நாதர்கள் - தலைவர்கள். நலம் - பலவகையான நன்மைகளை; ஒருமை பன்மை மயக்கம். அந்த நன்மை களாவன: சிவபெருமானை மறவாமல் வணங்குதல், சிவனடியார்களை உபசரித்து விருந்துணவைப் படைத்தல் முதலியவை. கொள் - பெற்றுக் கொள்ளும் பொருட்டு. பன்முறை - பல தடவைகள்; ஒருமை பன்மை மயக்கம். கூட - சிதம்பரத்தை வந்து அடைய. அந்தம் - முடிவு. இல்லவர் - இல்லாத புகழைப் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அணுகி - சமீபித்து. முன் - அந்த நடராஜப் பெருமானாருடைய சந்நிதியில். தொழு - அந்தப்

பெருமானாரை வணங்கி விட்டு. திரு - அழகிய. அணுக்களாம் - திருவணுக்களாகும். திரு - அழகிய. வாயில் - வாசலில். என்றது திருக்களிற்றுப் படிகள் உள்ள வாசலில் என்றபடி. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். ஆர்வமும் - பேராவலும். பெருகிட - பெருகி எழ. ச்: சந்தி. சென்னியில் - தம்முடைய தலையின்மேல். சிறிய - தம்முடைய சிறியவையாகிய பெயர். செங்கை - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் கைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஏற - ஏறக் கும்பிட்டு. உய்ந்து - உஜ்ஜீவனத்தை அடைந்து. வாழ் - மகிழ்ச்சியை அடையும். திரு - அழகிய. நயனங்கள் - தம்முடைய விழிகள். களி - மகிழ்ச்சியை. கொள்ள - அடைய. உருகும் - உருக்கத்தை அடையும். அன்பொடு - பக்தியோடு. புக்கார் - அந்த நாயனார் திருக்கோயிலுக்குள் நுழைந்தார்.

பின்பு உள்ள 160-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சமுத்திரக் கரையில் உள்ள சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய புண்ணியச் செயல்களினுடைய கொழுந்தைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய தலைவரும், சீகாழியில் உள்ள பிரமபுரீச ருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் வீற்றிருந்தருளுபவரும் ஆகிய தோணியப்பர் தமக்கு வழங்கியருளிய உண்மையான சிவஞானமே ஆகிய திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் முத்தைப் போன்றவராகிய நடராஜப் பெருமானார் தம்முடைய திருவுள்ளத்தில் நிறைந்துள்ள சிவஞானத்தினால் பொங்கி எழும் ஆனந்தத் தாண்டவமாகிய ஒப்பற்ற பெருமையைப் பெற்று விளங்கும் ஒப்பற்ற திருநடனத்தையும் தம்முடைய கண்களுக்கு முன்னால் அடையுமாறு தரிசித்துத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து

நின்று கொண்டு தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல்வைத்துக் கும்பிட்டு விட்டு பரிசுத்தராகிய நடராஜப் பெருமானார் திருநடனம் புரிந்தருளிய தோற்றப் பொலிவை தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி எழும் மகிழ்ச்சியோடும் வாழ்த்தி வணங்குபவரானார் அந்த நாயனார்.' பாடல் வருமாறு:

"அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே
ஆனஅம் பலமுத்தம்
உண்ணி றைந்தஞா னத்தெழும் ஆனந்த
ஒருபெருந் தனிக்கூத்தும்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழும்
களிப்பொடும் கடற்காழிப்
புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார்
புனிதர்ஆ டியபொற்பு."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. கடல் - சமுத்திரக் கரையில் உள்ள. காழி - சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. ப்: சந்தி. புண்ணிய - புண்ணியச் செயல்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொழுந்து - கொழுந்தை. அனையவர் - போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அண்ணலார் - தம்முடைய தலைவரும் சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் வீற்றிருந்தருளுபவரும் ஆகிய தோணியப்பர். தமக்கு அளித்த - தமக்கு வழங்கியருளிய. மெய் - உண்மையான. ஞ்: சந்தி. ஞானமே ஆன - சிவஞானமே வடிவமாகிய. அம்பல - திருச்சிற்றம் பலத்தில் எழுந்தருளியிருக்கும். முத்தம் - முத்தைப் போன்றவராகிய நடராஜப் பெருமானார்; உவம ஆகுபெயர். உள் - தம்முடைய திருவுள்ளத்தில். நிறைந்த - நிரம்பியுள்ள. ஞானத்து - சிவஞானத்தினால். எழும் -

பொங்கி எழும். ஆனந்த - ஆனந்தத் தாண்டவமாகிய. ஒரு - ஒப்பற்ற. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தனி - நிகரற்ற. க்: சந்தி. கூத்தும் - திருநடனத்தையும். கண்ணில் - தம்முடைய கண்களுக்கு; உருபு மயக்கம். முன்பு - முன்னால். உற் - அடையுமாறு: க்: சந்தி. கண்டு - தரிசித்து. கும்பிட்டு - தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்து அந்த நடராஜப் பெருமானாரைக் கும்பிட்டு விட்டு. புனிதர் - பரிசுத்தராகிய நடராஜப் பெருமானார். ஆடிய - திருநடனம் புரிந்தருளிய. பொற்பு - தோற்றப் பொலிவை. எழும் - தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி எழும். களிப்பொடும் - மகிழ்ச்சியோடும். போற்றுவார் - அந்த நாயனார் வாழ்த்தி வணங்குபவரானார்.

சிவபெருமானுக்கு முத்து உவமை: ''முத்தினை முழுவயிரத்திரள் மாணிக்கத் தொத்தினை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''புறம் பயத்தெம் முத்தினை.'', ''முத்தினை மணியைப் பொன்னை.'', ''முத்தின் திரளும்... ஏய்க்கும் படியாய்.'', ''முத்தினைப் பவளத்தை முளைத்த வெம் தொத்தினை.'', ''ஆமாத்தூர் மேவிய முத்தினை.'', ''முத்தினை முதலாகிய மூர்த்தியை.'', ''முத்தினை மணியைப் பவளத்தொளிர் தொத்தினை.'', ''முத்தொப்பானை முளைத்தொழு கற்பக வித்தொப்பானை.'', ''பவளத்தைப் பசும் பொன் முத்தை.'', ''முத்தினை மணி தன்னை மாணிக்கத்தை.'', ''செம்பொன்னைப் பவளத்தைத் திரளும் முத்தை.'', ''செம்மானப் பவளத்தைத் திகழும் முத்தை.'', ''வான் பவளக் கொழுந்தை முத்தை.'', ''தோளாத முத்தொப் பானை.'', ''முத்தினை என் மணியை மாணிக்கத்தை.'', ''செம்பொன்னை தனிபவளம் திகழும் முத்தை.'',

''பொன்னாகி மணியாகி முத்துமாகி.'', ''உத்தமனை நித்திலத்தை... நித்திலத்தின் தொத்தொப்பானை.'', ''அம்பொற் குன்றத்தை முத்தின் தூணை.'', ''இப்பொன்நீ இம்மணி நீ இம்முத்தும் நீ.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த வித்தனே.'', ''பொன்னே நன்மணியே வெண்முத்தே.'', ''அருமணியை முத்தினை.'', ''முத்தினை மாமணி தன்னை வயிரத்தை.'', ''மணியே முத்தே மரகதமே.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''முத்து மாமணி வயிரத்து பவளத்தின் முழுச்சோதி.'', ''சுடர்ப் பொற்குன்றைத் தோளா முத்தை.'', ''முத்தனையானே மணியனையானே.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றையும், ''முத்து வயிரமணி மாணிக்க மாலைகள்.'' என்றும் வருவதைக் காண்க.

பின்பு வரும் 161-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''அடியேனுடைய உணர்ச்சியினால் தேவரீருக்கு நேரில் அடையுமாறு அடியேனுக்கு உண்டாகும் சிவபோகத்தை இடையீடு இல்லாமல் அடியேனுடைய வடிவத்தில் இருக்கும் கண்கள், காதுகள், மூக்கு, நாக்கு, மெய் என்னும் ஐந்து இந்திரியங்களினுடைய அளவுக்குள்ளும் எளிதாக வருமாறு தேவரீர் திருவருளை வழங்கினீர்.'' என்று அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு அந்த நடராஜப் பெருமானாரை வாழ்த்தி வணங்கி தனக்கு ஒப்பு வேறு இல்லாத வன்மையாகிய பெருமையைப் பெற்று விளங்கும் அந்தப் பெருமானார் வழங்கிய கருணையை எண்ணி அவரைத் துதித்து அவருடைய சந்நிதியில் தாம் பாடியருளத் தொடங்கிய சொற்களைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தில் சேர்ந்து அமைந்திருக்கும் இனிய இசைப்

பாடலைப் பாடினார்; கூத்தாடினார்; தம்முடைய கண்களிலிருந்து ஆனந்த நீரைச் சொரிந்தார்.' பாடல் வருமாறு:

"உணர்வின் நேர்பெற வரும்சிவ போகத்தை
ஒழிவின்றி உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர
அருளினை." எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே ஏத்திமுன்
எடுத்தசொற் பதிகத்தில்
புணரும் இன்னிசை பாடினர்; ஆடினர்;
பொழிந்தனர் விழிமாரி."

உணர்வின் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், 'அடியேனுடைய உணர்ச்சியினால்.' நேர் - தேவரீருக்கு நேரில். பெற - அடையுமாறு. வரும் - அடியேனுக்கு உண்டாகும். சிவபோகத்தை - சிவபெரு முன் திருவருளால் வரும் பேரின்பமாகிய போகத்தை. ஒழிவு - இடையில் நிற்றல். இன்றி - இல்லாமல். உருவின்கண் - அடியேனுடைய வடிவத்தில். அணையும் - அடைந்திருக்கும். ஐம்பொறி - மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்து இந்திரியங்களினுடைய. பொறி: ஒருமை பன்மை மயக்கம். அளவினும் - அளவுக்கு உள்ளும். எளிவர - எளிதாக வருமாறு. அருளினை - தேவரீர் திருவருளை வழங்கினீர்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு; இடைக்குறை. ப்: சந்தி. போற்றி - அந்த நடராஜப் பெருமானாரை வாழ்த்தி வணங்கி. இணை - தனக்கு ஒப்பாக வேறு எதுவும். இல் - இல்லாத; கடைக்குறை. வண் - வள்ளன்மையாகிய. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். கருணை - அந்தப் பெருமானார் வழங்கிய கருணையை எண்ணி. ஏ: அசைநிலை. ஏத்தி - அந்தப்

பெருமானாரைத் துதித்து. முன் - அந்தப் பெருமானாருடைய சந்நிதியில். எடுத்த - தாம் பாடியருளத் தொடங்கிய. சொல் - சொற்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பதிகத்தில் - ஒரு திருப்பதிகத்தில். புணரும் - சேர்ந்து அமைந்திருக்கும். இன் - இனிய. இசை - இசைப் பாடலை. பாடினர் - அந்த நாயனார் பாடியருளினார். ஆடினர் - கூத்தாடினார். விழி - தம்முடைய கண்களி லிருந்து; ஒருமை பன்மை மயக்கம். மாரி - ஆனந்தக் கண்ணீர் நிரம்பிய மழையை. பொழிந்தனர் - சொரிந்தார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய திருப்பதிகத்தில் உள்ள ஒரு பாசுரம் வருமாறு:

''கற்றாங் கெரியோம்பிங் கவியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.''

இது குறிஞ்சிப்பண் அமைந்த பாசுரம்.

பிறகு வரும் 162-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சர்வப் பிரளயகாலத்தைப் புரியும் முதல்வராகிய நடராஜப் பெருமானாருக்கு உரிய பூசை முதலிய பணிகளை ஆற்றும் சிறப்பினால் அழகிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களையும் முன்னால் வைத்து அடியேங்களை ஆட்சி புரிந்தருளுபவரும், சீகாழியில் வாழும் அந்தணர்களுக்கு அரசருமாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களைப் பெற்ற இசைப் பாடல்கள் அமைந்த ஒரு திருப்பதிகம் ஓங்கி எழ, ''கற்றாங்கெரி யோம்பி'' என்று தொடங்கி அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"ஊழிமுதல் வர்க்குரிமைத் தொழில் சிறப்பால்
வாழிதிருத் தில்லைவாழ் அந்தணரை முன்வைத்தே
ஏழிசையும் ஓங்க எடுத்தார் எமைஆளும்
காழியர்தம் காவலனார், "கற்றாங்கெரி யோம்பி."

ஊழி - சர்வப் பிரளய காலத்தைப் புரிந்தருளும். முதல்வர்க்கு - முதல்வராகிய நடராஜப் பெருமானாருக்கு. உரிமை - உரிய பான்மையைப் பெற்ற பூசை முதலிய. த்: சந்தி. தொழில் - திருப்பணிகளை ஆற்றும்; ஒருமை பன்மை மயக்கம். சிறப்பால் - சிறப்பைப் பெற்ற நிலையினால். வாழி: அசைநிலை. திரு - அழகிய. த்: சந்தி. தில்லைவாழ் அந்தணரை - தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களையும். அந்தணர்: ஒருமை பன்மை மயக்கம். முன்வைத்தே - முன்னால் அமைத்து. ஏ: அசைநிலை. ஏழிசையும்- ச, ரி, க, ம, ப, த, நிச என்னும் ஏழு சுவரங்களையும் பெற்ற இசைப்பாடல்கள் அமைந்த. இசை: ஒருமை பன்மை மயக்கம். ஓங்க - ஒரு திருப்பதிகம் ஓங்கி எழ. எமை - அடியேங்களை; இடைக்குறை. இது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. ஆளும் - ஆட்சி புரிந்தருளும். காழியர் - சீகாழியில் வாழும் அந்தணர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. காவலனார் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். 'கற்றாங்கெரியோம்பி' எடுத்தார் - 'கற்றாங் கெரியோம்பி' என்று தொடங்கி அந்த நாயனார் பாடியருளினார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட 'கற்றாங்கெரியோம்பி' என்று தொடங்கும் பாசுரத்தைச் சென்ற பாடலின் உரையில் காட்டினோம்; ஆண்டுக் கண்டுணர்க. அந்தத் திருப்பதிகத்தில் வரும் மற்றொரு பாசுரம் வருமாறு:

"செல்வ நெடுமாடம் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே."

பின்பு வரும் 163-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின்மேல் விளங்கும் தோணியில் வீற்றிருக்கும் பெரிய நாயகியாரை நோக்கித் தமக்குச் சிவஞானம் உண்டாகும் நல்ல காலத்தைப் பெறுமாறு அழுதருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குறிஞ்சிப்பண் அமைந்த அந்தத் திருப்பதிகத்தினுடைய இறுதிப் பாடலின் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளிய திருக்கடைக்காப்பாகிய பாசுரத்தையும் பாடியருளி நடராஜப் பெருமானாரை வாழ்த்தி வணங்கித் தம்முடைய திருமேனிக்குள் அமைந்திருக்கும் எலும்புகளையும் உயிரையும் கரையச் செய்து பக்தியினால் உருகுமாறு புரியும் தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய தலைவனாகிய நடராஜப் பெருமான் புரிந்தருளிய திருநடனத்தை அந்த நாயனார் வெட்டவெளியில் தரிசித்து ஆனந்த சாகரத்தில் முழுகித் தம்முடைய கண்களில் நிறைந்து விளங்கும் அமுதத்தைப் போன்ற அந்த நடராஜப் பெருமானாரைத் தம்முடைய திருவுள்ளத்திற்குள் புகுமாறு விழுங்கினார்.' பாடல் வருமாறு:

"பண்ணார் பதிகத் திருக்கடைக்காப் புப்பரவி
உண்ணாடும் என்பும் உயிரும் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூத்து வெட்டவெளி யேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார் காலம்பெற அழுதார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. காலம் - சீகாழியில் உள்ள பிரமபுரீச ருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில் வீற்றிருக்கும் பெரியநாயகியாரை நோக்கித் தமக்குச் சிவஞானம் உண்டாகும் நல்ல காலத்தை. பெற - பெறும் பொருட்டு. அழுதார் - அழுதருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பண் - குறிஞ்சிப்பண். ஆர் - அமைந்த. பதிக - அந்தத் திருப்பதிகத்தினுடைய. த்: சந்தி. திருக்கடைக்காப்பு - இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளிய திருக்கடைக் காப்பாகிய பாசுரத்தையும். ப்: சந்தி. பரவி - பாடியருளிய நடராஜப் பெருமானாரை வாழ்த்தி வணங்கி. உண் - தம்முடைய திருமேனிக்குள். நாடும் - மேலே காணுமாறு அமைந்திருக்கும். என்பும் - எலும்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். உயிரும் - ஆவியையும். கரைந்து - கரையச் செய்து. உருக்கும் - பக்தியினால் உருகுமாறு புரியும். விண் - தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய; இட ஆகுபெயர். நாயகன் - தலைவனாகிய நடராஜப் பெருமான். கூத்து - புரிந்தருளிய திருநடனத்தை. வெட்டவேளி - அந்த நாயனார் வெட்ட வெளியில். ஏ: அசைநிலை. திளைத்து - தரிசித்து ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்று. க்: சந்தி. கண் - தம்முடைய கண்களில். ஆர் - நிறைந்து விளங்கும். அமுது - அமிர்தத்தைப் போன்றவராகிய அந்த நடராஜப் பெருமானாரை; உவம ஆகுபெயர். உண்டார் - தம்முடைய திருவுள்ளத்திற்குள் புகுமாறு விழுங்கினார்.

பிறகு வரும் 164-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'முன் ஒரு காலத்தில் திருமாலும், பிரமதேவனும் பன்றியின் உருவத்தை எடுத்துத் திருவடிகளைத் தேடிப் பார்த்தும், அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்து மேலே

பறந்து திருமுடியைத் தேடிப் பார்த்தும் அவற்றை அறிய முடியாதவராகிய மூர்த்தியாராகிய நடராஜப் பெருமானாருடைய சந்நிதியில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நின்று கொண்டு சொற்கள் அடங்கிய மாலைகளாகிய திருப்பதிகங்களால் ஆறு காலங்கள் எல்லாவற்றிலும் அந்த நடராஜப் பெருமானாரைத் துதித்து வணங்கி விட்டு பெருமையைப் பெற்று விளங்கும் பல வேதங்களாகிய வெள்ளம் சுற்றித் துதிக்கின்ற தங்கத் தகடுகளால் வேயப் பெற்ற திருக்கோயிலை வலமாக வந்து பிறகு திருக்கோயிலுக்கு வெளியில் அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"முன்மால் அயன்அறியா மூர்த்தியார் முன்நின்று
சொன்மாலை யாற்காலம் எல்லாம் துதித்திறைஞ்சிப்
பன்மா மறைவெள்ளம் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையைவலம் கொண்டு புறம்போந்தார்."

முன் - முன்பு ஒரு காலத்தில். மால் - திருமாலும். அயன் - பிரமதேவனும். அறியா - பன்றியின் உருவத்தை எடுத்துத் திருவடிகளைத் தேடிப் பார்த்தும், அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்துத் திருமுடியைத் தேடிப் பார்த்தும் அவற்றைத் தெரிந்து கொள்ள முடியாத. மூர்த்தியார் - மூர்த்தியாராகிய நடராஜப் பெருமானாருடைய. மூர்த்தி - வடிவத்தைப் பெற்றவர். முன் - சந்நிதியில். நின்று - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நின்று கொண்டு. சொல் - சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். மாலையால் - மாலைகளாகிய பல திருப்பதிகங்களால்; ஒருமை பன்மை மயக்கம். காலம் எல்லாம் - ஆறு காலங்கள் எல்லாவற்றிலும். காலம்: ஒருமை பன்மை மயக்கம். துதித்து - நடராஜப் பெருமானாரைத் துதித்து. இறைஞ்சி - வணங்கி விட்டு. ப்:

சந்தி. பல் - பலவாகிய. மா - பெருமையைப் பெற்று விளங்கும். மறை வெள்ளம் - வேதங்களாகிய வெள்ளம்; மறை: ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்து - சுற்றி. பரவுகின்ற - துதிக்கின்ற. பொன் - தங்கத் தகடுகளால் வேயப் பெற்ற; ஆகுபெயர். மாளிகையை - திருக்கோயிலை. வலம் கொண்டு - வலமாக வந்து. புறம் - திருக்கோயிலுக்கு வெளியில். போந்தார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

சிதம்பரத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குறிஞ்சிப் பண்ணில் ஒரு திருப்பதிகத்தையும், காந்தாரப் பஞ்சமப் பண்ணில் மற்றொரு திருப்பதிகத்தையும் பாடியருளியுள்ளார். குறிஞ்சிப் பண்ணில் உள்ள பாசுரம் ஒன்று வருமாறு:

"கோணா கணையானும் குளிர்தா மரையானும்
காணார் கழலேத்தக் கனலாய் ஓங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்ஏத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே."

காந்தார பஞ்சமத்தில் உள்ள ஒரு பாசுரம் வருமாறு:

"கொம்பலைத் தழகெய்திய துண்ணிடைக்
கோல வாண்மதி போல முகத்திரண்
டம்பலைத்த கண்ணாள் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறு காளையர்
காதலாற் கழற்சேவடி கைதொழ
அம்பலத் துறைவான் அடியார்க்கடையா வினையே."

பிறகு வரும் 165-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய வரும், ஆண்மையும் தகுதியும் கொண்ட வருமாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்தில் உள்ள

நடராஜப் பெருமானாருடைய திருக்கோயிலில் விளங்கும் திருவருட் செல்வத்தைப் பெற்ற அழகிய முற்றத்தில் தரையில் விழுந்து நடராஜப் பெருமானாரை வணங்கி விட்டுப் பிறகு த்ரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தேவர்களினுடைய கூட்டம் நிரம்பியிருக்கும் அழகிய கோபுர வாசலுக்கு எழுந்தருளி வந்து மீண்டும் அந்த நடராஜப் பெருமானாரை வணங்கி விட்டுப் பெருமையைப் பெற்று விளங்கும் தவங்களி னுடைய பயனை வழங்கும் அழகிய தெருக்கள் நான்குக் கும் எழுந்தருளி மீண்டும் ஒருமுறை அந்த நடராஜப் பெருமானாரை வணங்கிவிட்டு அந்தச் சிதம்பரத்தில் தங்கிக் கொண்டிருக்கும் செயலுக்கு அச்சத்தை அந்த நாயனார் அடைவாரானார்.' பாடல் வருமாறு:

"செல்வத் திருமுன்றில் தாழ்ந்தெழுந்து தேவர்குழாம்
மல்கும் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்கள்
நல்கும் திருவீதி நான்கும் தொழுதங்கண்
அல்கும் திறம்அஞ்சு வார்சண்பை ஆண்டகையார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. சண்பை - சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளியவரும்; இடஆகுபெயர். ஆண்டகையார் - ஆண்மையும் தகுதியையும் பெற்றவரும் ஆகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். செல்வ - திருவருட் செல்வத்தைப் பெற்ற. த்: சந்தி. திரு - அழகிய. முன்றில் - சிதம்பரத்தில் உள்ள நடராஜப் பெருமானாருடைய திருக்கோயிலில் விளங்கும் முற்றத்தில். தாழ்ந்து - தரையில் விழுந்து நடராஜப் பெருமானாரை வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. தேவர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குழாம் - கூட்டம். மல்கும் - நிரம்பியிருக்கும். திரு

- அழகிய. வாயில் - கோபுர வாசலுக்கு. வந்து - எழுந்தருளி வந்து. இறைஞ்சி - மீண்டும் அந்த நடராஜப் பெருமானை வணங்கி விட்டு. மா - பெருமையைப் பெற்று விளங்கும். தவங்கள் - தவங்களினுடைய பயனை; ஆகுபெயர். நல்கும் - வழங்கும். திரு - அழகிய. வீதி நான்கும் - கிழக்கு வீதி, மேற்கு வீதி, வடக்கு வீதி, தெற்கு வீதி என்னும் நான்கு வீதிகளுக்கும். வீதி: ஒருமை பன்மை மயக்கம். தொழுது - எழுந்தருளி மீண்டும் ஒருமுறை அந்த நடராஜப் பெருமானாரை வணங்கி விட்டு. அங்கண் - அந்தச் சிதம்பரத்தில். அல்கும் - தங்கிக் கொண்டிருக்கும். திறம் - வகையாகிய செயலுக்கு. அஞ்சுவார் - அந்த நாயனார் அச்சத்தை அடைபவரானார்.

பிறகு உள்ள 166-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கழுமலமாகிய சீகாழியில் திருவவதாரம் செய் தருளிய அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவரா்கிய பாசுபதேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவேட்களத்திற்குச் சிதம்பரத்தி லிருந்து எழுந்தருளித் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின்மேல் வைத்துக் கூப்பி அந்தப் பாசுபதேசுவரரைக் கும்பிட்டு விட்டுச் சொற்கள் அடங்கிய ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளித் தாம் தங்கிக் கொண்டருளும் தலம் அந்தத் திருவேட்களமாக அங்கே இருந்தபடியே சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் ஐயனாகிய நடராஜப் பெருமான் புரிந்தருளும் அழகிய ஆனந்தத் தாண்டவத்தைக் கும்பிட்டு விட்டு அந்தத் திருவேட்களத் தில் தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"செய்ய சடையார் திருவேட் களம்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி அருளுமிடம் அங்காக மன்றாடும்
ஐயன் திருக்கூத்துக் கும்பிட் டணைவுறும்நாள்."

இந்தப் பாடல் குளகம். கழுமல - கழுமலமாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. க்: சந்தி. கோன் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; ஒருமை பன்மை மயக்கம். செய்ய - சிவந்த. சடையார் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய பாசுபதேசுவரர். திருவேட்களம் - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவேட்களத்திற்கு. சென்று - சிதம்பரத்திலிருந்து எழுந்தருளி. கை - தம்முடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின்மேல் வைத்துக் கூப்பி அந்தப் பாசுபதேசுவரரைக் கும்பிட்டு விட்டு. சொல் - இனிய சுவை உள்ள சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடி - பாடியருளி. வைகி அருளும் இடம் - தாம் தங்கிக் கொண்டருளும் தலம். அங்கு ஆக - அந்தத் திருவேட்களமாக. மன்று - அங்கே இருந்தபடியே சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில். ஆடும் - திருநடனம் புரிந்தருளும். ஐயன் - தலைவனும், தந்தையைப் போன்ற வனும், அழகைப் பெற்றவனும் ஆகிய நடராஜப் பெருமான். திரு - அழகிய. க்: சந்தி. கூத்து - ஆனந்தத் தாண்டவத்தை. க்: சந்தி. கும்பிட்டு - கும்பிட்டுவிட்டு. அணைவுறும் - அந்தத் திருவேட்களத்தில் தங்கிக் கொண் டிருக்கும். நாள் - காலத்தில்.

திருவேட்களம்: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் பாசுபதேசு வரர். அம்பிகை நல்ல நாயகி. இது சிதம்பரத்திற்குக் கிழக்குத்

திசையில் இரண்டு மைல் தூரத்தில் உள்ளது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்தில் தங்கிக் கொண்டிருப்பதற்கு அஞ்சி இந்தத் தலத்தில் இருந்து கொண்டு சிதம்பரத்திற்கு எழுந்தருளி நடராஜப் பெருமானாரைத் தரிசித்து விட்டு மீண்டும் எழுந்தருளிய தலம் இது. இங்கே உள்ள ஆலயமும் சிவபுரியில் உள்ள இரண்டு ஆலயங்களும் ஒரே வகையான அமைப்பையும் அளவையும் கொண்டுள்ளன. இது அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் வழங்கியருளிய தலம். பாசுபதாஸ் திரத்தைத் தம்முடைய கையில் ஏந்திய உற்சவ மூர்த்தியும், அருச்சுனனுடைய உற்சவ விக்கிரகமும் இந்தத் திருக்கோயி லில் உள்ளன. இந்த உற்சவம் வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் நடை பெறுகிறது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தக்கராகப் பண்ணில் இந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"அந்தமும் ஆதியும் ஆகியஅண்ணல்
ஆரழல் அங்கை அமர்ந்திலங்க
மந்த முழவம் இயம்ப
மலைமகள் காண நின்றாடிச்
சந்தம் இலங்கு நகுதலைகங்கை
தண்மதி யம்மய வேததும்ப
வெந்த வெண்ணீறு மெய்பூசும்
வேட்கள நன்னக ராரே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந் தொகை வருமாறு:

"நன்று நாள்தொறும் நம்வினை போயறும்
என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்
சென்று நீர்திரு வேட்களத் துள்ளுறை
துன்று பொற்சடை யானைத் தொழுமினே."

இந்தத் தலத்தைப் பற்றிய மற்றொரு பாசுரம் வருமாறு:

"கட்டப் பட்டுக் கவலையில் வீழாதே
பொட்ட வல்லுயிர் போவதன் முன்னம்நீர்
கிட்ட னார்திரு வேட்களம் கைதொழப்
பட்ட வல்வினை யாயின மாறுமே."

பிறகு உள்ள 167-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய திருக்கரத்தில் மான் குட்டியை ஏந்திக் கொண்டிருப்பவராகிய பால்வண்ணநாதேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கழிப் பாலைக்குள் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அடைந்து உண்மைகள் அடங்கிய சொற்களைப் பெற்ற மாலையாகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி நறுமணம் கமழும் சிவந்த கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டு விளங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய உச்சிநாதர் எழுந்தருளியிருக்கும் திருவுச்சி என்னும் சிவத்தலத்திற்கு எழுந்தருளி அந்தத் தலத்தில் தங்கியருளியிருக்கும் சிவபெருமானைக் கும்பிட்டு விட்டு பிறரால் பாடுவதற்கு அருமையாக விளங்கும் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும் அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
அம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார்."

கை - தம்முடைய திருக்கரத்தில். ம்: சந்தி. மான்மறியார் - மான் குட்டியை ஏந்திக் கொண்டிருப்ப வராகிய பால்வண்ண நாதேசுவரர். கழிப்பாலையுள் -

திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கழிப் பாலைக்குள். அணைந்து - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அடைந்து. மெய் - உண்மைகள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். ம்: சந்தி. மாலைச் சொல் பதிகம் - சொற்களைப் பெற்ற மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. சொல்: ஒருமை பன்மை மயக்கம். பாடி - பாடியருளி. விரை - நறுமணம் கமழும். க்: சந்தி. கொன்றைச் செம்மாலை - சிவந்திருக்கும் கொன்றை மலர் மாலையை. வேணி - அணிந்து கொண்டு விளங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய உச்சி நாதர்; ஆகுபெயர். த்: சந்தி. திருவுச்சி - எழுந்தருளியிருக்கும் திருவுச்சி என்னும் சிவத்தலத்திற்கு. மேவி - எழுந்தருளி. உறை - அந்தத் தலத்தில் தங்கியிருந்தருளும். அம்மானை - சிவபெருமானை. க்: சந்தி. கும்பிட்டு - தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு. அரும் - பிறரால் பாடுவதற்கு அருமையாக விளங்கும். தமிழும் - செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும். பாடினார் - அந்த நாயனார் பாடியருளினார்.

திருக்கழிப்பாலை: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் பால்வண்ண நாதேசுவரர். அம்பிகை வேதநாயகி. இந்தத் தலம் சிதம்பரத்திற்குத் தென் கிழக்குத் திசையில் ஏழுமைல் தூரத்தில் உள்ளது. இந்தத் தலத்தில் இருந்த கோயிலைக் கொள்ளிட ஆறு அறுத்துக் கொண்டு போய் விட்டமையால் அந்தத் தலத்தில் இருந்த பால்வண்ணநாதேசுவரரை இந்தக் காலத்தில் சிதம்பரத்திற்குத் தென்கிழக்குத் திசையில் 2½ மைல் தூரத்தில் உள்ள சிவபுரி என்னும் தலத்தில் ஒரு தனி ஆலயத்தில் வைத்திருக்கிறார்கள். இந்த ஆலயம் சிறியது. சிவலிங்கப் பெருமான் சிறிய வடிவத்தை உடையவராய்

வெண்மை நிறத்தைப் பெற்றவராய் விளங்குகிறார். அதனால் அவருக்குப் பால்வண்ணநாதேசுவரர் என்ற திருநாமம் உண்டாயிற்று. இது வன்மீக முனிவர் வழிபட்ட தலம். இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''புனலாடிய புன்சடை யாய்அரணம்
அனலாக விழித்தவ னேஅழகார்
கனலாட லினாய்கழிப் பாலையுளாய்
உனலார்கழல் கைதொழு துள்குதுமே.''

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் கௌசிகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''மண்ணி னார்மலி செல்வமும் வானமும்
எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்
பெண்ணி னார்பிறை நெற்றியா டுற்றமுக்
கண்ணி னாருறை யும்கழிப் பாலையே.''

இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''வனபவள வாய்திறந்து வானவர்க்கும் தானவனே என்கின் றாளால்
சினபவளத் திண்தோள்மேற் சேர்ந்திலங்கு வெண்ணீற்றன் என்கின் றாளால்
அனபவள மேகலையோ டப்பாலைக் கப்பாலான் என்கின் றாளால்
கனபவளம் சிந்தும் கழிப்பாலைச் சேர்வானைக் கண்டாள் கொல்லோ.''

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"நங்கையைப் பாகம் வைத்தார்
ஞானத்தை நவில வைத்தார்
அங்கையில் அனலும் வைத்தார்
ஆனையின் உரிவை வைத்தார்
தங்கையில் யாழும் வைத்தார்
தாமரை மலரும் வைத்தார்
கங்கையைச் சடையுள் வைத்தார்
கழிப்பாலைச் சேர்ப்ப னாரே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"நெய்தற் குருகுதன் பிள்ளைஎன்
றெண்ணி நெருங்கிச் சென்று
சைதை மடல்புல்கு தென்கழிப்
பாலை யதனு றைவாய்
பைதற் பிறையொடு பாம்புடன்
வைத்த பரிசறி யோம்
எய்தப் பெறின் இரங் காதுகண்
டாய்நம் இறைய வனே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"வண்ண மும்வடி வும்சென்று கண்டிலன்
எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலன்
கண்ணு லாம்பொழில் சூழ்கழிப் பாலைஎம்
அண்ண லேஅறி வான்இவன் தன்மையே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஊனுடுத்தி ஒன்பது வாசல் வைத்து
ஒள்ளெலும்பு தூணா உரோமம் மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார்

தயக்கம் பலபடைத்தார் தாம ரையினார்
கானெடுத்து மாமயில்கள் ஆலும் சோலைக்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
வானிடத்தை யூடறுத்து வல்லைச் செல்லும்
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.''

இந்தத் தலத்தைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''படைத்தாய் ஞாலமெலாம் படர்புன்சடை எம்பரமா
உடைத்தாய் வேள்விதனை உமையாளையொர் கூறுடையாய்
அடர்த்தாய் வல்லரக்கன் தலைபத்தொடு தோள்நெரியக்
கடற்கா ரும்கழனிக் கழிப்பாலை மேயானே.''

பிறகு வரும் 168-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பாடியருளும் திருப்பதிகத்தில் அமைந்திருக்கும் ச்ங்கீதத்தைத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரும் தம்முடைய யாழில் அமைத்துப் பழகித் தாம் விரும்பும் சிறப்பை அடையுமாறு ஒவ்வொரு நாளும் சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் நடராஜப் பெருமானார் புரிந்தருளும் திருநடனத்தை வாழ்த்தி வணங்குபவராகி நெடுங்காலமாக புகழோடு விளங்கும் அழகிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் உயரமாக இருக்கும் அந்தத் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளுக்குச் சமீபத்தில் உள்ளவர்களாக விளங்கும் பாக்கியத்தைப் பார்த்து அந்த நாயனார் வியப்பை அடைவாரானார்.' பாடல் வருமாறு:

"பாடும் பதிகஇசை யாழ்ப்பாண ரும்பயிற்றி
நாடும் சிறப்பெய்த நாளும்நடம் போற்றுவார்
நீடும் திருத்தில்லை அந்தணர்கள் நீள்மன்றுள்
ஆடும் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார்."

பாடும் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளும். பதிக - திருப்பதிகத்தில் அமைந்திருக்கும். இசை - சங்கீதத்தை. யாழ்ப்பாணரும் - திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரும். பயிற்றி - தம்முடைய யாழில் வாசித்துப் பழகி. நாடும் - தாம் அடைவதற்கு விரும்பும். சிறப்பு - சிறப்பை. எய்த - அடையுமாறு. நாளும் - ஒவ்வொரு நாளும். நடம் - சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் நடராஜப் பெருமானார் புரிந்தருளும் திருநடனத்தை. போற்றுவார் - வாழ்த்தி வணங்குபவராகி; முற்றெச்சம். நீடும் - நெடுங்காலமாகப் புகழோடு விளங்கும். திரு - அழகிய. த்: சந்தி. தில்லை அந்தணர்கள் - தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும். நீள் - உயரமாகத் தோன்றும். மன்றுள் - அந்தத் திருச்சிற்றம்பலத்தில். ஆடும் - திருநடனம் புரிந்தருளும். கழற்கு - வெற்றிக்கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளுக்கு; ஆகுபெயர். அணுக்கர் - சமீபத்தில் உள்ளவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆம் - ஆக விளங்கும். பேறு - பாக்கியத்தைப் பார்த்து. அதிசயிப்பார் - அந்த நாயனார் வியப்பை அடைபவரானார்.

அடுத்து உள்ள 169-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தச் சிதம்பரத்தில் வாழும் அந்தத் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களினுடைய சௌகீல்யத்தி னுக்கு ஓர் அளவு இல்லாமையையும் எண்ணி ஓங்கிப் பொங்கி எழும் விருப்பம் அகலாத திருவுள்ளத்தைப்

பெற்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தேன் நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்திருக்கும் பல வகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம்பொழிலைப் பெற்று விளங்கும் திருவேட்களத்தைத் தாண்டி மேலே எழுந்தருளி பல மலர்கள் மலர்ந்திருக்கும் அகழி சுற்றியிருக்கும் பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்துக் குள் நுழைந்து சேரும் சமயத்தில்.' பாடல் வருமாறு:

"ஆங்கவர்தம் சீலத் தளவின்மை யும்நினைந்தே
ஓங்கிஎழும் காதல் ஒழியாத உள்ளத்தார்
தேங்கமழும் சோலைத் திருவேட் களம்கடந்து
பூங்கிடங்கு சூழ்புலியூர்ப் புக்கணையும் போழ்தின்கண்."

இந்தப் பாடல் குளகம். ஆங்கு - அந்தச் சிதம்பரத்தில் வாழும். அவர்தம் - அந்தத் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. சீலத்து - சௌசீல்யத்திற்கு. அளவு - ஓர் அளவும். இன்மையும் - இல்லாத பான்மையையும். நினைந்து - எண்ணி. ஏ: அசைநிலை. ஓங்கி எழும் - ஓங்கிப் பொங்கி எழும். காதல் - விருப்பம். ஒழியாத - அகலாத. உள்ளத்தார் - திருவுள்ளத்தைப் பெற்றவராகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தேம் - தேன். கமழும் - நறுமணம் கமழும். சோலை - மலர்கள் மலர்ந்திருக்கும் பலவகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம் பொழிலைப் பெற்று விளங்கும். த்: சந்தி. திருவேட்களம் - திருவேட்களத்தை. கடந்து - தாண்டி மேலே எழுந்தருளி. பூம் - பல நீர்ப்பூக்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். கிடங்கு - அகழி. சூழ் - சுற்றியிருக்கும். புலியூர் - பெரும் பற்றப்புலியூராகிய சிதம்பரத்திற்குள். ப்: சந்தி. புக்கு - நுழைந்து. அணையும் - சேரும். போழ்தின்கண் - சமயத்தில்.

பிறகு வரும் 170-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளிய சமயத்தில் எல்லா உலகங்களுக்கும் தலைவராகிய நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளினால் அழகிய தில்லையாகிய சிதம்பரத்தில் வாழும் திரிபுண்டரமாக அணிந்து கொண்டிருக்கும் விபூதியைத் தங்களுடைய திருமுகங்களில் பெற்ற தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் தொண்டுகளைப் புரியும் பான்மையைக் கொண்ட சிவகணங்களினுடைய தலைவர்களாகக் காட்சியளிக்க அதனைத் தாம் பார்த்து அந்த இயல்பைத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாருக்கும் காண்பித்தருளினார்.' பாடல் வருமாறு:

"அண்டத் திறைவர் அருளால் அணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களும்
தொண்டத் தகைமைக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் பரிசுபெரும் பாணர்க்கும் காட்டினார்."

அண்டத்து - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவேட்களத்திலிருந்து சிதம்பரத்திற்கு எழுந்தருளிய சமயத்தில் எல்லா உலகங்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். இறைவர் - தலைவராகிய நடராஜப் பெருமானார். அருளால் - வழங்கிய திருவருளினால். அணி - அழகிய. தில்லை - தில்லையாகிய சிதம்பரத்தில் வாழும். முண்ட - திரிபுண்டரமாக அணிந்து கொண்டிருக் கும். த்: சந்தி. திருநீற்று - விபூதியைத் தங்களுடைய திருமுகங்களில் பெற்ற. மூவாயிரவர்களும் - தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும். தொண்ட - தொண்டுகளைப் புரியும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தகைமை - பான்மையைக் கொண்ட. க்: சந்தி. கண -

சிவகணங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதராய் - தலைவர்களாகி; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தோன்ற - காட்சியளிக்க. க்: சந்தி. கண்டு - அந்தக் காட்சியைத் தாம் பார்த்து. 'தாம்' என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. அப்பரிசு - அந்த இயல்பைப் பெற்ற காட்சியை. பெரும்பாணர்க்கும் - திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாருக்கும். காட்டினார் - காண்பித்தருளினார்.

பின்பு வரும் 171-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'செல்வம் தங்களிடமிருந்து பிரிதலை அறியாத தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் வரம்பு இல்லாத சீர்த்தியைப் பெற்ற சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய இளைய ஆண் சிங்கத்தைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சிதம்பரத்திற்கு எழுந்தருளி விரைவில் தம்மை வணங்குவதற்கு முன்னால் தாமும் அவர்களை உடனே வணங்கி வளப்பத்தைப் பெற்ற அழகிய ஒரு தெருவினுடைய பக்கத்தை அடைவதற்காக அவர்கள் இருசாராரும் வந்தார்கள்.' பாடல் வருமாறு:

"செல்வம் பிறிவறியாத் தில்லைவாழ் அந்தணரும்
எல்லையில்சீர்ச் சண்பை இளவே றெழுந்தருளி
ஒல்லை இறைஞ்சாமுன் தாமும் உடனிறைஞ்சி
மல்லல் அணிவீதி மருங்கணைய வந்தார்கள்."

செல்வம் - தங்களிடத்தில் உள்ள செல்வம். பிறிவு - தங்களிடமிருந்து பிரிதலை. அறியா - அறியாத. த்: சந்தி. தில்லைவாழ் அந்தணரும் - தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும். அந்தணர்: ஒருமை பன்மை மயக்கம். எல்லை - வரம்பு. இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. ச்: சந்தி. சண்பை - சண்பையாகிய

சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. இளஏறு - இளைய ஆண் சிங்கத்தைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; உவம ஆகுபெயர். எழுந்தருளி - சிதம்பரத்திற்கு எழுந்தருளி. ஒல்லை - விரைவில். இறைஞ்சாமுன் - தம்மை வணங்குவதற்கு முன்பே. 'தாமும்' என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. தில்லை வாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை வணங்கினார்கள். உடன் - உடனே. இறைஞ்சி - அந்தத் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களையும் வணங்கி. மல்லல் - வளப்பத்தைப் பெற்ற. அணி - அழகிய. வீதி - ஒரு தெருவினுடைய. மருங்கு - பக்கத்தை. அணைய - அடைவதற்காக. வந்தார்கள் - அந்தத் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் வந்தார்கள்.

பின்பு வரும் 172-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி மேல் எழும் விருப்பம் தெளிவாகத் தெரியுமாறு பூமியல் வாழும் தேவர்களாகிய அந்தணர்களுடைய சிங்கத்தைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய அழகிய தலையின் மேல் கூப்பி நடராஜப் பெருமானாரைக் கும்பிட்ட செந்தாமரை மலர்களினுடைய செவ்வையான அழகைப் பழித்து எழில் ஓங்கி விளங்கும் சிவந்த திருக்கரங்களோடும் எழுந்தருளி நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுர வாசலுக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"பொங்கி எழும்காதல் புலனாகப் பூசுரர்தம்
சிங்கம் அனையார் திருமுடியின் மேற்குவித்த
பங்கயத் தின்செவ்வி பழித்து வனப்போங்கும்
செங்கை யொடும்சென்று திருவாயி லுட்புக்கார்."

பொங்கி - தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கிக் கொண்டு. எழும் - மேலே எழும். காதல் - விருப்பம். புலனாக - தெளிவாகப் புலப்படுமாறு. ப்:சந்தி. பூசுரர் தம் - பூமியில் வாழும் தேவர்களாகிய அந்தணர்களினுடைய. சுரர்: ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. சிங்கம் - சிங்கத்தை. அனையார் - போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். திரு முடியின் மேல் - தம்முடைய அழகிய தலையின் மேல். குவித்த - கூப்பி நடராஜப் பெருமானாரைக் கும்பிட்ட. பங்கயத்தின் - செந்தாமரை மலர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். செவ்வி பழித்து - செவ்வையான அழகைப் பழித்து. வனப்பு - எழில். ஓங்கும் - ஓங்கி விளங்கும். செங்கை யொடும் - சிவந்திருக்கும் திருக்கரங்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். சென்று - எழுந்தருளி. திருவாயிலுள் - நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயி லுக்கு முன்னால் உயரமாக நிற்கும் அழகிய கோபுர வாசலுக்குள். புக்கார் - நுழைந்தார்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்குச் சிங்கம் உவமை: ''பொங்குபுனிற்றண் புகலி வந்த பூசுரர் சிங்கமும்.'', ''காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை.'' என்று சேக்கிழாரும், ''விரவும்பர சமய கோளரி.'', ''புகலித் தாளரிக்கும் அரியான் அருள் பெற்ற பரசமய கோளரிக்கு.'', ''பரமகுருநாதன் மிகுபரசமய கோளரியே.'', ''கவுணியர்தம் போரேறு.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 173-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஒருமைப் பாட்டை அடைந்த தம்முடைய திருவுள்ளம் பக்தியினால் உருக்கத்தை அடைய உயரமாக விளங்கும் மேருமலையைப்

போன்ற பேரம்பலத்தினுடைய பக்கத்தில் இருந்தபடியே அந்த நடராஜப் பெருமானாரைத் கும்பிட்டு விட்டுச் சிதம்பரத்தில் உள்ள திருக்கோயிலில் இருக்கும் திருச்சிற்றம் பலத்தில் திருவருள் நிரம்பித் திருநடனம் புரிந்தருளும் மாணிக்கக் கூத்தருடைய சந்நிதிக்கு எழுந்தருளித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அடைந்து தரையில் விழுந்து நடராஜப் பெருமானாருடைய சந்நிதிக்கு முன்னால் உள்ள திருக்களிற்றுப்படியின் கீழே வணங்கினார்.' பாடல் வருமாறு:

"ஒன்றிய சிந்தை உருக உயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்றுள் நிறைந்தாடும் மாணிக்கக் கூத்தர்எதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற்றுப் படிக்கீழ்."

ஒன்றிய - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஒருமைப்பாட்டை அடைந்த. சிந்தை - தம்முடைய திருவுள்ளம். உருக - பக்தியினால் உருக்கத்தை அடைய. உயர் - உயரமாக விளங்கும். மேருக்குன்று - மேரு மலையை. அனைய - போன்ற. பேரம்பலம் - பேரம் பலத்தினுடைய. மருங்கு - பக்கத்தில் இருதந்தபடியே. கும்பிட்டு - அந்த நடராஜப் பெருமானாரைக் கும்பிட்டு விட்டு. மன்றுள் - சிதம்பரத்தில் உள்ள திருக்கோயிலில் இருக்கும் திருச்சிற்றம்பலத்தில். நிறைந்து - திருவருள் நிரம்பி. ஆடும் - திருநடனம் புரிந்தருளும். மாணிக்கக் கூத்தர் - மாணிக்கக் கூத்தருடைய. எதிர் - சந்நிதிக்கு. சென்று - எழுந்தருளி. அணைந்து - அடைந்து. திருக்களிற்றுப்படிக் கிழ்த் தாழ்ந்தார் - அந்த நாயனார் தரையில் விழுந்து நடராஜப் பெருமானாருடைய சந்நிதிக்கு முன்னால் உள்ள திருக்களிற்றுப்படியின் கீழே வணங்கினார். திருக்களிற்றுப் படி - இரண்டு பக்கங்களிலும் யானைகளின் திருவுருவங்களை அமைத்;ந படிக்கட்டு.

அடுத்து உள்ள 174-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்'' எனத் தொடங்கிப் பேராவலோடு ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளினார்; அந்தத் திருப்பதிகத்தில் அமைந்த ஒரு பாசுரத்தில் நெடுங்காலமாகப் புகழோடு வாழும் தில்லையில் விளங்கும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர் களாகிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களையும் தாம் பார்த்த அந்த நிலைகள் எல்லாவற்றையும் சொல்லுமாறு அந்தத் திருப்பதிகத்தில் சேர்த்து வைத்து, ''அவர்தொழு தேத்துசிற்றம்பலம்'' என்று பாடியருளி.' பாடல் வருமாறு:

"'ஆடி னாய்நறு நெய்யோடு பால்தயிர்'
என்றெடுத் தார்வத்தால்
பாடி னார்;பின்னும் அப்பதி கத்தினிற்
பரவிய பாட்டொன்றில்
நீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக்
கண்டஅந் நிலைஎல்லாம்
கூறு மாறுகோத், 'தவர்தொழு தேத்துசிற
றம்பலம்' எனக்கூறி."

இந்தப் பாடல் குளகம். 'ஆடினாய் நறு நெய்யோடு பால்தயிர்' என்று - 'ஆடினாய் நறுநெய்யோடு பால்தயிர்' என. எடுத்து - தொடங்கி. ஆர்வத்தால் - பேராவலோடு; உருபு மயக்கம். பாடினார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளினார். பின்னும் - பிறகும். அப்பதிகத்தினில் - அந்தத் திருப்பதிகத்தில். பரவிய - புகழ்ந்த. பாட்டு ஒன்றில் - ஒரு பாசுரத்தில். நீடு - நெடுங்காலமாகப் புகழோடு. வாழ் - வாழும். தில்லை -

தில்லையாகிய சிதம்பரத்தில் விளங்கும். நான்மறையோர் தமை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர் களாகிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்ளையும். மறையோர்: ஒருமை பன்மை மயக்கம். தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. க்:சநதி. கண்ட - தாம் பார்த்த. அந்நிலை - அந்த நிலைகள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றையும். கூறுமாறு - சொல்லுமாறு. கோத்து - அந்தத் திருப்பதிகத்தில் சேர்த்து வைத்து. 'அவர் தொழு தேத்துசிற்றம் பலம்' எனக்கூறி - 'அவர் தொழு தேத்து சிற்றம்பலம்' என்று பாடியருளி. என: இடைக்குறை.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட காந்தாரப் பஞ்சமப் பண்ணில் அமைந்த பாசுரம் வருமாறு:

"ஆடி னாய்நறு நெய்யோடு பால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடி னாய்இட மாக நறுங்கொன்றை நயந்தவனே
பாடி னாய்மறை யோடுபல் கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடி னாயருளாய் சுருங்களம் தொல்வினையே."

இந்தத் திருப்பதிகத்தில் தில்லைவாழ் அந்தணர் களைச் சிறப்பித்த பகுதிகள் வருமாறு:

"தில்லை நல்லவர்."
"சீலத்தார் தொழு தேத்துசிற்றம்பலம்."
"கம்பலைத் தெழு காமுறு காளையர்."
"தில்லையார் தொழுதேத்து சிற்றம்பலம்."
"கற்றவர் தொழுதேத்து சிற்றம்பலம்."
"தமிழால் உயர்ந்தார் உறைதில்லை."

அடுத்து வரும் 175-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இத்தகைய பான்மையோடு இனிய பண் அமைந்த திருப்பதிகத்தையும், அதில் உள்ள இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளிய திருக் கடைக்காப்பையும் பாடியருளி நடராஜப் பெருமானாரைத் துதித்து வணங்கி நிலைபெற்று விளங்கும் பேரானந்தப் பெருவெள்ளத்தில் முழுகி இன்புற்று அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானாருடைய சந்நிதிக்கு எழுந்தருளி தமக்கு முன்னால் நின்று கொண்டு திருநடனம் புரிந்தருளும் பின்னிய நீளமான சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அந்த ஆனந்தத்தாண்டவ மூர்த்தியார் வழங்கும் பெருமையைப் பெற்று விளங்கும் திருவருளை அடையும் பொருட்டு அந்த நடராஜப் பெருமானாரிடம் பிரியாத இயல்பை உடைய விடையைப் பெற்றுக் கொண்டு தங்கத் தகடுகளால் வேயப் பெற்ற திருச்சிற்றம்பலத்தைச் சுற்றி வலமாக வந்து தரையில் விழுந்து அந்த நடராஜப் பெருமானாரை மீண்டும் ஒரு முறை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு மேலே எழுந்தருளி திருக்கோயிலுக்கு வெளியில் உள்ள முற்றத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"இன்ன தன்மையில் இன்னிசைப் பதிகமும்
 திருக்கடைக் காப்பேத்தி
மன்னும் ஆனந்த வெள்ளத்தில் திளைத்தெதிர்
 வந்துமுன் நின்றாடும்
பின்னு வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப்
 பிரியாத விடைபெற்றுப்
பொன்னின் அம்பலம் சூழ்ந்துதாழ்ந் தெழுந்துபோந்
 தணைந்தார் புறமுன்றில்."

இன்ன - இத்தகைய. தன்மையில் - பான்மையோடு; உருபு மயக்கம். இன் - இனிய. இசை - உரிய பண் அமைந்த. ப்: சந்தி. பதிகமும் - ஒரு திருப்பதிகத்தையும். திருக்கடைக் காப்பு - அந்தத் திருப்பதிகத்தில் உள்ள இறுதிப் பாசுரத்தில் தம்முடைய திருநாமத்தை வைத்துப் பாடியருளிய திருக்கடைக் காப்பையும். ஏத்தி - பாடியருளி நடராஜப் பெருமானாரைத் துதித்து வணங்கி. மன்னும் - நிலைபெற்று விளங்கும். ஆனந்த வெள்ளத்தில் - பேரானந்தப் பெருவெள்ளத்தில். திளைத்து - முழுகி இன்புற்று. எதிர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானாருடைய சந்நிதிக்கு. வந்து - எழுந்தருளி. முன் - தமக்கு முன்னால். நின்று - நின்று கொண்டு. ஆடும் - திருநடனம் புரிந்தருளும். பின்னு - பின்னிய. வார் - நீளமான. சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற்பெற்றவராகிய; வினையாலணையும் பெயர். க்: சந்தி. கூத்தர் - ஆனந்தத் தாண்டவ மூர்த்தியார். பேரருள் - வழங்கும் பெருமையைப் பெற்று விளங்கும் திருவருளை. பெற - அடையும் பொருட்டு. ப்: சந்தி. பிரியாத - விட்டுப் பிரிய முடியாத இயல்பைப் பெற்ற. விடை - விடையை. பெற்று - அந்த நடராஜப் பெருமானாரிடம் பெற்றுக் கொண்டு. ப்: சந்தி. பொன்னின் - தங்கக் தகடுகளால் வேயப்பெற்ற; ஆகுபெயர். அம்பலம் - திருச்சிற்றம் பலத்தை. சூழ்ந்து - சுற்றி வலமாக வந்து. தாழ்ந்து - தரையில் விழுந்து அந்த நடராஜப் பெருமானாரை மீண்டும் ஒருமுறை வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. போந்து - மேலே எழுந்தருளி. புற - திருக் கோயிலுக்கு வெளியில் உள்ள. முன்றில் - முற்றத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

அந்தத் திருப்பதிகத்தில் உள்ள திருக்கடைக்காப்புப் பாசுரம் வருமாறு:

"நாறு பூம்பொழில் நண்ணிய காழியுள்
நான்மறை வல்ல ஞானசம் பந்தன்
ஊறும் இன்தமி ழால் உயர்ந்தார் உறை தில்ல தன்னுள்
ஏறு தொல்புகழ் ஏத்துசிற் றம்பலத்
தீசனை யிசையாற் சொன்ன பத்திவை
கூறு மாறு வல்லார் உயர்ந் தாரொடும் கூடுவரே."

பின்பு உள்ள 176-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானாருடைய திருக்கோயிலுக்கு வெளியில் உள்ள முற்றத்தில் இருந்தபடி அந்த நடராஜப் பெருமானாரைப் பணிந்து அந்த இடத்தில் நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளோடு அழகிய மாணிக்கங்களைப் பதித்த கதவுகளைப் பெற்ற கோபுர வாசலில் இருந்தபடி தோற்றப் பொலிவு உண்டாகுமாறு அந்த நடராஜப் பெருமானாரை. மீண்டும் ஒருமுறை தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தம்முடன் எழுந்தருளுமாறு வாழ்த்தி வணங்கிய புகழைப் பெற்ற திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய நல்ல திருவடிகளை வணங்கிவிட்டு, ''அடியேனுடைய ஊராகிய திருஎருக்கத்தம் புலியூர் முதலாக உள்ள நிவாநதியினுடைய கரையில் மேவிய ஒப்பு இல்லாத சிவத்தலங்கள் பலவற்றிற்கும் எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்க வேண்டும்'' என்று அந்தப் பெரும்பாணர் வேண்டிக் கொள்ள, அந்த வேண்டுகோளுக்கு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இணங்கியருளுவாரானார்.' பாடல் வருமாறு:

"அப்பு றத்திடை வணங்கிஅங் கருளுடன்
அணிமணித் திருவாயில்
பொற்பு றத்தொழு தெழுந்துடன் போதரப்
போற்றிய புகழ்ப்பாணர்
நற்ப தந்தொழு, 'தடியனேன் பதிமுதல்
நதிநிவாக் கரைமேய
ஒப்பில் தானங்கள் பணிந்திட வேண்டும்'என்
றுரைசெய அதுநேர்வார்."

அப்புறத்திடை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானாருடைய திருக்கோயிலுக்கு வெளியில் உள்ள முற்றத்தில் இருந்தபடி. வணங்கி - அந்த நடராஜப் பெருமானாரைப் பணிந்து. அங்கு - அந்த இடத்தில். அருளுடன் - நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளோடு. அணி - அழகிய. மணி - மாணிக்கங்களைப் பதித்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. திருவாயில் - கதவுகளைப் பெற்ற அழகிய கோபுர வாசலில் இருந்தபடி. பொற்பு - தோற்றப் பொலிவு. உற - உண்டாகு மாறு. த்: சந்தி. தொழுது - அந்த நடராஜப் பெருமானாரை மீண்டும் ஒருமுறை தரையில் விழுந்து வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. உடன் - தம்மோடு. போதர - எழுந்தருளுமாறு. ப்: சந்தி. போற்றிய - வாழ்த்தி வணங்கிய. புகழ் - புகழைப் பெற்ற. ப்: சந்தி. பாணர் - திருநீலகண்டத்து யாழ்ப்பாண நாயனார். நல் - நல்ல. பதம் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - வணங்கி விட்டு. அடியனேன்பதி - அடியேனுடைய ஊராகிய திருஎருக்கத்தம்புலியூர். முதல் - முதலாக உள்ள. நதிநிவா - நிவா நதியினுடைய. க் சந்தி. கரை - கரையில். மேய - மேவியுள்ள. ஒப்பு - நிகர். இல் - இல்லாத; கடைக்குறை. தானங்கள் - பல சிவத்தலங்களுக்குத் தேவரீர்

எழுந்தருளி. பணிந்திட வேண்டும் - அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைத் தேவரீர் வணங்க வேண்டும். என்று - என. உரைசெய - வேண்டிக் கொள்ள. செய: இடைக் குறை. அது - அந்த வேண்டுகோளுக்கு. நேர்வார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இணங்கியருள் வாரானார்.

அடுத்து வரும் 177-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பொங்கி எழும் தெளிவாக உள்ள அலைகளை வீசும் தூய நீர் ஓடும் நிவா நதியினுடைய கரைக்கு மேற்குத் திசையில் எழுந்தருளிச் சீகாழியில் தங்கியிருந்த தம் முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரோடு தம் முடைய பரிவார மக்களும் தவத்தைப் புரிந்த அந்தணராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் எழுந்தருளத் தம்முடைய சிவந்த கையில் யாழை வைத்திருக்கும் திருநீல கண்டத்துப் பெரும்பாண நாயனார் தம்மோடு சேர்ந்துவர மங்கைமார்கள் புகழும் அந்தப் பெரும்பாணருடைய தர்ம பத்தினியாராகிய மதங்க சூளாமணியார் தம்மோடு வர யாவரும் வந்தார்கள்.' பாடல் வருமாறு:

"பொங்கு தெண்டிரைப் புனிதநீர் நிவாக்கரைக்
குடதிசை மிசைப்போந்து
தங்கு தந்தையா ருடன்பரி சனங்களும்
தவமுனி வரும்செல்லச்
செங்கை யாழ்த்திரு நீலகண் டப்பெரும்
பாணனா ருடன்சேர
மங்கை யார்புகழ் மதங்கசூ ளாமணி
யாருடன் வரவந்தார்."

பொங்கு - பொங்கி எழும். தெண் - தெளிவாக உள்ள. திரை - அலைகளை வீசும்; ஒருமை பன்மை மயக்கம். ப்:

சந்தி. புனித - தூய. நீர் - புனல் ஓடும். நிவாக்கரை - நிவா நதியினுடைய கரைக்கு. க்: சந்தி. குடதிசை மிசை - மேற்குத் திசையில். ப்: சந்தி. போந்து - எழுந்தருளி. தங்கு - சீகாழியில் தங்கிக் கொண்டிருந்த. தந்தையாருடன் - தம்முடைய தந்தை யாராகிய சிவபாத இருதயரோடு. பரிசனங்களும் - தம்முடைய பரிவார மக்களும். தவமுனிவரும் - தவத்தைப் புரிந்த அந்தணராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும். செல்ல - எழுந்தருள. ச்: சந்தி. செங்கை - தம்முடைய சிவந்திருக்கும் கையில். யாழ் - யாழை வைத்திருக்கும். த்: சந்தி. திருநீலகண்டப் பெரும்பாணனார் - திருநீலகண்டத்து யாழ்ப்பெரும் பாண நாயனார். உடன் - தம்மோடு; என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு என்பதை. சேர - சேர்ந்து வர. மங்கையார் - மங்கைமார்கள்; ஒருமை பன்மை மயக்கம். புகழ் - புகழ்ந்து பாராட்டும். மதங்க - சூளாமணியார் - அந்தப் பெரும்பாணருடைய தர்மபத்தினியாராகிய மதங்க சூளாமணியார். உடன் வர - தம்மோடு வர. வந்தார் - யாவரும் வந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 178-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பெரியவையாக இருக்கும் தடாகங்களையும், வயல்களையும் தாண்டி மேலே எழுந்தருளித் திருஎருக்கத்தம் புலியூருக்குப் பக்கத்தில் எழுந்தருளிச் சேரத் திருநீல கண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரைப் பணிந்து, ''மேகங்கள் நெருக்கமாகத் தவழும் பூம்பொழில் சுற்றியிருக்கும் இந்த ஊர் அடியேனுடைய ஊர்'' என்று கூற நெடுநேரம் இன்பத்தை அடைந்து கற்பதற்கு அருமையாக இருக்கும் அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தேர்ச்சி பெற்றவரும், சிறிய மிக்க இளம் பருவத்தை உடைய ஆண்

யானையைப் போன்றவரும் ஆகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தத் திருஎருக்கத்தம் புலியூருக்கு எழுந்தருளிப் பின் வருமாறு திருவாய் மலர்ந்து அருளிச் செய்வாரானார்.' பாடல் வருமாறு:

"இருந்த டங்களும் பழனமும் கடந்துபோய்
எருக்கத்தம் புலியூரின்
மருங்கு சென்றுற நீலகண் டப்பெரும்
பாணனார் வணங்கிக்,'கார்
நெருங்கு சோலைசூழ் இப்பதி அடியனேன்
பதி'என நெடிதின்புற்
றருங்க லைச்சிறு மழஇளங் களிறனார்
அங்கணைந் தருள்செய்வார்."

இரும் - பெரியவையாக இருக்கும். தடங்களும் - தடாகங்களையும். பழனமும் - வயல்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கடந்து - தாண்டி. போய் - அப்பால் எழுந்தருளி. எருக்கத்தில் புலியூரின் - திருஎருக்கத்தம் புலியூருக்கு. மருங்கு - பக்கத்தில். சென்று உற - எழுந்தருளிச் சேர. நீலகண்டப் பெரும்பாணனார் - திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனார். வணங்கி - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பணிந்துவிட்டு. க்: சந்தி. கார் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கு - நெருக்கமாகத் தவழும். சோலை - பூம்பொழில். சூழ் - சுற்றியிருக்கும். இப்பதி - இந்த ஊர். அடியனேன் - அடியேன் பிறந்த. பதி - ஊர். என - என்று அந்த பெரும்பாணனார் கூற; இடைக்குறை. நெடிது - நெடுநேரம். இன்புற்று - இன்பத்தை அடைந்து. அரும் - கற்பதற்கு அருமையாக இருக்கும். கலை - அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுத் தேர்ச்சி பெற்றவரும்; ஒருமை பன்மை மயக்கம்; வினையாலணையும் பெயர். அந்தக்

கலைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ச்: சந்தி. சிறு - சிறிய. மழ இளம் - மிக்க இளம் பருவத்தை உடைய. களிறு - ஆண் யானையை. அனார் - போன்றவரும் ஆகிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்; இடைக்குறை. அங்கு - அந்தத் திருஎருக்கத்தம் புலியூருக்கு. அணைந்து - எழுந்தருளி. அருள் செய்வார் - பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்வாரானார்.

பின்பு வரும் 179-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திரு நீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனாரை நோக்கி, ''ஐயரே, நீங்கள் திருவவதாரம் செய்தருள இந்தத் தலமாகிய திருஎருக்கத்தம்புலியூரில் வாழும் மக்கள் அளவு இல்லாத பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தை முன்பிறவியில் புரிந்ததனுடைய பயன் அன்றோ?'' என்று அந்தப் பெரும்பாணருடைய சிறப்பைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு அந்தச் செல்வச் செழிப்பைப் பெற்ற சிவத்தலமாகிய திருஎருக்கத்தம்புலியூரில் தாம் திருக்கோயில் கொண்டு எழுந்தருளும் இடமாக ஏற்றுக் கொண்ட மையைப் போன்ற கரிய நிறத்தைப் பெற்ற திருக்கழுத்தைப் பெற்றவராகிய நீல கண்டேசுவரர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குள் நுழைந்து பிறகு வெளியில் எழுந்தருளி அந்த ஆலயத்தை வலமாக வந்து மீண்டும் ஆலயத்துக்குள் எழுந்தருளி அந்த நீலகண்டேசு வரரை மறுபடியும் ஒருமுறை பணிந்து இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் சீகாழியில் திருவவதாரம் செய்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழிப்பைப் பெற்ற செந்தமிழ்

மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்த நீலகண்டேசுவரர் திருக்கோயிலில் உரிய பண்ணோடு பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"'ஐயர் நீர்அவ தரித்திட இப்பதி
அளவில்மா தவம்முன்பு
செய்த வாறெனச் சிறப்புரைத் தருளிஅச்
செழும்பதி இடம்கொண்ட
மைகொள் கண்டர்தம் கோயிலி னுட்புக்கு
வலங்கொண்டு வணங்கிப்பார்
உய்ய வந்தவர் செழுந்தமிழ்ப் பதிகம்அங்
கிசையுடன் உரைசெய்தார்."

ஐயர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனாரை நோக்கி. ஐயரே: விளி. நீர் - தேவரீர். அவதரித்திட - திருவவதாரம் செய்தருள. இப்பதி - இந்தச் சிவத்தலமாகிய திரு எருக்கத்தம்புலியூரில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். அளவு இல் - அளவு இல்லாத. இல்: கடைக்குறை. மா - பெருமையைப் பெற்று விளங்கும். தவம் - தவத்தை. முன்பு - முன் பிறவியில். செய்தவாறு - புரிந்ததனுடைய பயன் அன்றோ? என - என்று; இடைக்குறை. ச்: சந்தி. சிறப்பு - அந்தப் பெரும்பாணருடைய சிறப்பை. உரைத்தருளி - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. அச்செழும்பதி - அந்தச் செல்வச் செழிப்பைப் பெற்ற சிவத்தலமாகிய திருஎருக்கத்தம் புலியூரில். இடம் - தாம் திருக்கோயில் கொண்டு எழுந்தருளும் இடமாக. கொண்ட - ஏற்றுக் கொண்டருளிய. மை - மையைப் போன்ற கரிய நிறத்தைப் பெற்ற; உவம ஆகு பெயர். கண்டர்தம் - திருக்கழுத்தைப் பெற்றவராகிய நீலகண்டேசுவரர். தம்: அசைநிலை. கோயிலினுள் - எழுந்ருளியிருக்கும்

திருக்கோயிலுக்கு உள்ளே. புக்கு - நுழைந்து. வலம் கொண்டு - பிறகு வெளியில் எழுந்தருளி அந்த ஆலயத்தை வலமாக வந்து. வணங்கி - மீண்டும் அந்த ஆலயத்துக்குள் எழுந்தருளி அந்த நீலகண்டேசுவரரை மறுபடியும் ஒரு முறை பணிந்து. ப்: சந்தி. பார் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். வந்தவர் - சிகாழியில் திருவவதாரம் செய்தருளியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். செழும் - சொற்சுவை, பொருட் சுவை என்னும் செழிப்பைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ப்: சந்தி. பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. அங்கு - அந்த நீலகண்டேசுவரருடைய திருக்கோயிலில். இசையுடன் - உரிய பண்ணோடு. உரை செய்தார் - அந்த நாயனார் பாடியருளினார்.

திருஎருக்கத்தம்புலியூர்: இந்தச் சிவத் தலத்திற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர் இராஜேந்திரப் பட்டினம் என்பது. இது நடுநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் நீலகண்டேசுவரர். அம்பிகை நீலமலர்க்கண் அம்பிகை. தலவிருட்சம் வெள்ளெருக்கஞ் செடி. இது விருத்தாசலத்திற்குத் தெற்குத் திசையில் ஏழு மைல் தூரத்தில் உள்ளது. திருக்கோயிலுக்குள் வெள்ளெருக் கஞ்செடி ஒன்று உள்ளது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்களைத் தம்முடைய யாழில் வைத்து வாசித்த திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனார் திருவவதாரம் செய்தருளிய தலம் இது. இதற்குக் கிழக்குத்திசையில் நான்கு மைல் தூரத்தில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் திவ்யதேசம் உள்ளது.

பின்பு வரும் 180-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பழங்காலம் முதலாகப் புகழோடு விளங்கும் வெங்குரு வாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தத் திருஎருக்கத்தம்புலியூரிலிருந்து எழுந்தருளி அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப்பெரும்பாண நாயனாரோடு அழகிய தங்கம் தோன்றும் பெருமையைப் பெற்று விளங்கும் இமயமலை அரசனுடைய புதல்வியும் பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியைத் தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளுமாறு செய்த வராகிய சிவபெருமானார் இனிதாகத் தங்கி எழுந்தருளி யிருக்கும் நல்ல சிவத்தலங்கள் பலவற்றிற்கும் அந்த நாயனார் பக்தியோடு எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெரு மான்களை வணங்கித் துதித்துவிட்டு தூயதாக உள்ள சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த கொடுத்த மாலையில் உள்ள மலராகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி அப்பால் எழுந்தருளி சிவந்த கண்களைப் பெற்ற இடபவாகனத்தை ஒட்டுகிறவராகிய பழமலை நாதர் திருக்கோயில் விளங்கும் திருமுதுகுன்றாகிய விருத்தாசலத்துக்கு எழுந்தருளி விருத்தாசலேசுவரரை வணங்கி விட்டு அப்பால் எழுந்தருளி வேறு சிவத்தலங்களை அடைகிறவரானார்.' பாடல் வருமாறு:

"அங்கு நின்றெழுந் தருளிமற் றவருடன்
அம்பொன்மா மலைவல்லி
பங்கர் தாம்இனி துறையும்நற் பதிபல
பரிவொடும் பணிந்தேத்தித்
துங்க வண்டமிழ்த் தொடைமலர் பாடிப்போய்த்
தொல்லைவெங் குருவேந்தர்

செங்கண் ஏற்றவர் திருமுது குன்றினைத்
தொழுதுசென் றணைகின்றார்.''

தொல்லை - பழங்காலம் முதலாகப் புகழோடு விளங்கும். வெங்குரு - வெங்குருவாகிய சீகாழியை. வேந்தர் - ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். அங்கு நின்று - அந்த திருஎருக்கத்தம் புலியூரிலிருந்து. எழுந்தருளி - அப்பால் எழுந்தருளி. மற்று: அசைநிலை. அவருடன் - அந்தத் திருநீலகண்டத்து யாழ்ப் பெரும்பாண நாயனாரோடு. அம் - அழகிய. பொன் - தங்கம் தோன்றும். மா - பெருமையைப் பெற்று விளங்கும். மலை - இமயமலை அரசனுடைய புதல்வியும்; திணை மயக்கம். வல்லி - பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியை; உவம ஆகுபெயர். பங்கர்தாம் - வாம பாகத்தில் எழுந்தருளுமாறு செய்தவராகிய சிவபெருமானார். தாம்: அசைநிலை. இனிது - இனிமையோடு. உறையும் - தங்கி எழுந்தருளியிருக்கும். நல் - நல்ல. பதிபல - சிவத்தலங்கள் பலவற்றிற்கும். பதி: ஒருமை பன்மை மயக்கம். பரிவொடும் - அந்த நாயனார் பக்தியோடும். பணிந்து - எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கி. ஏத்தி - துதித்து விட்டு. த்: சந்தி. துங்க - தூயதாக உள்ள. வண் - சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. த்: சந்தி. தொடை மலர் - தொடுத்த மாலையில் உள்ள மலராகிய ஒரு திருப்பதிகத்தை. பாடி - பாடியருளி. ப்: சந்தி. போய் - அப்பால் எழுந்தருளி. த்: சந்தி. செம் - சிவப்பாக விளங்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஏற்றவர் - இடபவாகனத்தை ஓட்டுகிறவராகிய பழமலைநாதர். திருமுதுகுன்றினை - திருக்கோயில்

விளங்கும் திருமுதுகுன்றாகிய விருத்தாசலத்துக்கு எழுந்தருளி. த்: சந்தி. தொழுது - விருத்தாசலேசுவரரை வணங்கி விட்டு. சென்று - அப்பால் எழுந்தருளி. அணைகின்றார் - வேறு சிவத்தலங்களை அடைகிறவரா னார்.

திருமுதுகுன்று: இந்தச் சிவத்தலம் முதுகுன்றம் விருத்தாசலம், பழமலை எனவும் வழங்கும். இது நடுநாட்டில் மணிமுத்தா நதிக்கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் பழமலை நாதர், விருத்தாசலேசுவரர் என்பவை. அம்பிகை பெரிய நாயகி. தலவிருட்சம் வன்னிமரம். இது கூடலூருக்குத் தென் மேற்குத் திசையில் 35 மைல் தூரத்தில் உள்ளது. சுந்தர மூர்த்தி நாயனார் பரவை நாச்சியாருக்காகப் பொன் வழங்கியருளுமாறு பழமலை நாதரை வேண்டிக் கொண்ட தலம் இது. இந்தத் தலம் விருத்தக்காசி எனவும் வழங்கும். இந்தத் தலத்தில் தங்களுடைய உயிர்களை விடும் பிராணிகளுக்கெல்லாம் பெரிய நாயகி அம்மையார் தம்முடைய மேலாக்கினால் வீசி இளைப்பை ஆற்ற பழமலை நாதர் பஞ்சாட்சர உபதேசம் புரிந்தருளி அந்தப் பிராணிகளைத் தம்முடைய திருவுருவமாக ஆக்கியருளும் தலம் இது. இது காசியினும் சிறந்தது. இந்தச் சிறப்பைக் கந்த புராணத்தில் உள்ள வழிநடைப் படலத்தில் வரும்,

"தூசினால் அம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்ச
மாசிலா உயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி
ஈசனே தனது கோலம் ஈந்திடும் இயல்பால் அந்தக்
காசியின் விழும தான முதுகுள்ள வரையும் கண்டார்."

என்ற பாடலில் கச்சியப்பசிவாசாரியார் பாடியருளி யிருப்பதைக் காண்க.

இந்தத் தலத்தைப் பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் நட்டராகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
முன்சேய்த மூவெயிலும் எரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவைஇவள்தன் முகப்பே
என்செய்த வாறடிகேள் அடியேன்இட் டளம் கெடவே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் கொல்லிக் கௌவாணப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"நஞ்சி இடைஇன்று நாளை என்றும்மை நச்சுவார்
துஞ்சி யிட்டாற் பின்னைச் செய்வதென் அடிகேள் சொலீர்
பஞ்சி யிடப்புட்டில் கீறுமோ பணி யீரருள்
முஞ்சி யிடைச்சங்கம் ஆர்க்கும் சீர்முது குன்றரே."

இந்தத் தலத்தைப் பற்றி நட்டபாடைப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மத்தா வரைநிறுவிக் கடல்கடைந் தவ்விடம் உண்ட
தொத்தார் தருமணி நீள்முடிச் சுடர்வண்ணன் திடமாம்
கொத்தார் மலர்குளிர் சந்தகி லொளிர்குங் குமங்கொண்டு
முத்தாறு வந்தடி வீழ்தரு முதுகுன் றடைவோமே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பழந்தக்கராகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"தேவராயும் அசுர ராயும் சித்தர் செழுமறைசேர்
நாவராயும் நண்ணு பாரும் விண்ணெரி காலநீரும்
மேவராய விரைமலரோன் செங்கண் மால்ஈசன் என்னும்
மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருவிருக்குக்குறள் வருமாறு:

"நின்று மலர்தூவி - இன்று முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க் - கென்றும் இன்பமே."

*அந்த நாயனார் காந்தாரப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:*

"அல்லி மலர்மேல் அயனும் அரவின் அணையானும்
சொல்லிப் பரவித் தொடர ஒண்ணாச் சோதிஊர்
கொல்லை வேடர் கூடி நின்றுகும்பிட
முல்லை அயலே முறுவர் செய்யும் முதுகுன்றே."

*அந்த நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருமுக்கால் வருமாறு:*

"முரச திர்ந்தெழுதரு முதுகுன்றம் மேவிய
பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்
அரசர்கள் உலகில் ஆவாரே."

*இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:*

"கருமணியைக் கனகத்தின் குன்றொப் பானைக்
கருதுவார்க் காற்ற எளியான் தன்னைக்
குருமணியைக் கோளரவம் ஆட்டு வானைக்
கொல்வேங்கை அதளானைக் கோவணவன் தன்னை
அருமணியை அடைந்தவர்கட் கமுதொப் பானை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
திருமணியைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே."

*பின்பு வரும் 181-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், "மொய்கொள் மாமணி கொழித்துமுத் தாறுசூழ்

முதுகுன்றை அடைவோம்'' என தம்மிடம் அடைந்த சொற்களாகிய மலர்களைக் கட்டிய மாலையாகிய சொற்சுவை, பொருட் சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தை நட்டபாடைப் பண்ணோடும் அணிந்து பழமலைநாதரைத் துதித்துப் புரிகின்ற தவத்தைப் பெற்ற அழகிய முனிவர்களும், தேவர்களும், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகள் எல்லாவற்றிலும் நெருக்கமாக இருந்து திருக்கோயிலுக்குள் நுழைந்து ஐயராகிய விருத்தாசலேசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை வணங்கும் அந்தப் பழமலைக்கு பக்தியோடும் அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

'' 'மொய்கொள் மாமணி கொழித்துமுத் தாறுசூழ்
முதுகுன்றை அடைவோம்'என்
றெய்து சொன்மலர் மாலைவண் பதிகத்தை
இசையொடும் புனைந்தேத்திச்
செய்த வத்திரு முனிவரும் தேவரும்
திசையெலாம் நெருங்கப்புக்
கையர் சேவடி பணியும்அப் பொருப்பினில்
ஆதர வுடன்சென்றார்.''

'மொய்கொள் மாமணி கொழித்துமுத் தாறுசூழ் முது குன்றை அடைவோம்' என்று - 'மொய்கொள் மாமணி கொழித்து முத்தாறு சூழ் முதுகுன்றை அடைவோம்' என. எய்து - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மிடம் அடைந்த. சொல் - சொற்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். மாலை வண்பதிகத்தை - மாலையாகிய சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தை. இசையொடும் - நட்டபாடைப்

பண்ணோடும். புனைந்து - அணிந்து. ஏத்தி - பழமலை நாதரைத் துதித்து. ச்: சந்தி. செய் - புரிகின்ற. தவ - தவத்தைப் பெற்ற. த்: சந்தி. திரு - அழகிய. முனிவரும் - முனிவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். தேவரும் - தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். திசைஎலாம் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வட கிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகள் எல்லாவற்றிலும். திசை: ஒருமை பன்மை மயக்கம். எலாம்: இடைக்குறை. நெருங்க - நெருக்கமாக நின்று கொண்டு. ப்: சந்தி. புக்கு - விருத்தாசலேசு வரருடைய திருக்கோயிலுக்குள் நுழைந்து. ஐயர் - ஐயராகிய விருத்தாசலேசுவரருடைய. ஐயர் - தலைவர்; தந்தையைப் போன்றவர்; அழகைப் பெற்றவர். சேவடி - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை. அடி: ஒருமை பன்மை மயக்கம். பணியும் - வணங்கும். அப்பொருப்பினில் - அந்தப் பழமலைக்கு; உருபு மயக்கம். ஆதரவுடன் - பக்தியோடு; 'பேரார்வத்தோடு' எனலும் ஆம். சென்றார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

அந்த நாயனார் திருமுதுகுன்றத்தைப் பற்றிப் பழந்தக்கராகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாற:

''பாடு வாருக்கருளும் எந்தை பனிமுது பௌவ முந்நீர்
நீடு பாரும் முழுதும் ஓடி அண்டர் நிலைகெடலும்
நாடு தானும் ஊடும் ஓடி ஞாலமும் நான்முகனும்
ஊடு காண மூடும் வெள்ளத் துயர்ந்தது முதுகுன்றே.''

அந்த நாயனார் மேகராகக் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''அறம்கிளரும் நால்வேதம் ஆலின்கீழ்
இருந்தருளி அமரர் வேண்ட

நிறம்கிளர்செந் தாமரையோன் சிரமைந்தின்
ஒன்றறுத்த நிமலர் கோயில்
திறம்கொள்மணித் திரளங்கள் வரத்திரண்டங்
கெழிற்குறவர் சிறுமி மார்கள்
முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி
முத்துலைப்பெய் முதுகுன் றமே.''

அந்த நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''முழவமர் பொழிலணி முதுகுன்றம் மேவிய
மழவிடை யதுவுடை யீரே
மழவிடை யதுவுடை யீருமை வாழ்த்துவார்
பழியொடு பகையிலர் தாமே.''

பின்பு வரும் 182-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தேவர்களினுடைய தலைவராகிய பழமலைநாதர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருமுது குன்றாகிய விருத்தாசலத்துக்கு எழுந்தருளி விருத்தாசலேசு வரரை வணங்குவதற்காகத் திருக்கோயிலை வலமாக வருபவராகி தூயதாகிய நறுமணம் கமழும் செந்தமிழ் மொழியில் அமைந்த சொற்கள் அடங்கிய திருவிருக்குக் குறளாகிய இரண்டு மலர்களைப் பாடியருளி அந்தப் பழமலை நாதரைத் துதித்து விட்டு சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும் கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில் வீற்றிருந்தருளும் பெரிய நாயகியார் தம்முடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானமாகிய பால் என்னும் விருந்தை நுகர்ந்தவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நம்பராகிய அந்த விருத்தாலேசுவரர் எழுந்தருளியிருக்கும்

ஆலயத்தை அடைந்து அந்தத் திருக்கோயிலுக்கு உள்ளே நுழைந்து வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்யும் குளிர்ச்சியைப் பெற்ற கொன்றைமலர் மாலையை அணிந்த வராகிய அந்த விருத்தாசலேசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளாகிய ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்ற பக்தியோடு அந்த நாயனார் தரையில் விழுந்து பழமலைநாதரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"வான நாயகர் திருமுது குன்றினை
வழிபட வலங்கொள்வார்
தூந றுந்தமிழ்ச் சொல்லிருக் குக்குறள்
துணைமலர் மொழிந்தேத்தி
ஞான போனகர் நம்பர்தம் கோயிலை
நண்ணிஅங் குள்புக்குத்
தேன லம்புதண் கொன்றையார் சேவடி
திளைத்தஅன் பொடுதாழ்ந்தார்."

வான - தேவலோகத்தில் வாழும் தேவர்களி னுடைய; இட ஆகுபெயர். நாயகர் - தலைவராகிய பழமலைநாதர். திருமுதுகுன்றினை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருமுதுகுன்றாகிய விருத்தாசலத்துக்கு; உருபு மயக்கம். வழிபட - எழுந்தருளி விருத்தாசலேசுவரரை வணங்குவதற்காக. வலங்கொள்வார் - திருக்கோயிலை வலமாக வருபவராகி; முற்றெச்சம். தூ - தூய. நறும் - நறுமணம் கமழும். தமிழ் - செந்தமிழ் மொழி யில் அமைந்த. ச்: சந்தி. சொல் - சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். இருக்குக் குறள் - திருவிருக்குக் குறளாகிய. துணை - இரண்டு. மலர் - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். மொழிந்து - பாடியருளி. ஏத்தி - அந்தப் பழமலைநாதரை துதித்து விட்டு. ஞானபோனகர் - சீகாழியில் உள்ள பிரமபுரீசருடைய ஆலயத்தில் இருக்கும்

கட்டுமலையின் மேல் விளங்கும் தோணியில் வீற்றிருந் தருளும் பெரியநாயகியார் தம்முடைய கொங்கைகளி லிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கிய சிவஞானமாகிய பால் என்னும் விருந்தை நுகர்ந்தவராகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார். நம்பர்தம் - தம்முடைய அடியவர்களுக்குப் பல வகையான நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய அந்த விருத்தாசலேசுவரர். தம்: அசைநிலை. அந்த நம்பிக்கைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டு உணர்க. கோயிலை - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை. நண்ணி - அடைந்து. அங்கு உள் - அந்தத் திருக்கோயிலுக்கு உள்ளே. புக்கு - நுழைந்து. த்: சந்தி. தேன் - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அலம்பு - ரீங்காரம் செய்யும். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. கொன்றையார் - கொன்றை மலர் மாலையை அணிந்தவராகிய அந்த விருத்தாசலேசு வரருடைய. கொன்றை: ஆகுபெயர். சேவடி - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளாகிய. அடி: ஒருமை பன்மை மயக்கம். திளைத்த - ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்ற. அன்பொடு - பக்தியோடு. தாழ்ந்தார் - அந்த நாயனார் தரையில் விழுந்து பழமலைநாதரை வணங்கினார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருக்குக்குறள் வருமாறு:

"இருவர் அறியாத - ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள் - பெருகி நிகழ்வோரே."

பிறகு வரும் 183-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தரையில் விழுந்து பழமலை நாதரை வணங்கிவிட்டுப் பிறகு

தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு முன்னால், ''முரசதிர்ந்தெழும்'' என்று தொடங்கும் குளிர்ச்சியைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த தொடுத்தலைக் கொண்ட மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை அந்த விருத்தாசலேசுவரருக்கு அணிந்து மகிழ்ச்சியை அடைந்து அந்த விருத்தாசலத்திலிருந்து எழுந்தருளி அந்த இடத்தில் உள்ள நீர் வளம், நில வளம், செல்வ வளம், நன்மக்கள் வளம் முதலிய வளங்களைப் பெற்ற சிவத்தலமாகிய அந்த விருத்தாசலத்தில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருப்ப வராகி அழகிய பழமலையைச் சுற்றி ஓடும் குளிர்ச்சியைப் பெற்ற நீர் நிறைந்திருக்கும் மணிமுத்தா நதியோடு கோர்த்துக் கட்டிய சொற்கள் அடங்கிய தொடுத்தலைப் பெற்ற மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை தாம் விரும்பிய விருப்பத்தோடு பல தடவைகள் பாடியருளிச் சில தினங்கள் அந்த விருத்தாசலத்தில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

''தாழ்ந்தெ ழுந்துமுன் 'முரசதிர்ந் தெழும்'எனும்
தண்டமிழ்த் தொடைசாத்தி
வாழ்ந்துபோந் தங்கண் வளம்பதி அதனிடை
வைகுவார் மணிவெற்புச்
சூழ்ந்த தண்புனல் சுலவுமுத் தாற்றொடு
தொடுத்தசொல் தொடைமாலை
வீழ்ந்த காதலாற் பலமுறை விளம்பியே
மேவினார் சிலநாள்கள்.''

தாழ்ந்து - அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தரையில் விழுந்து பழமலை நாதரை வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. முன் - முன்னால். 'முரசதிர்ந்தெழும்' எனும் - 'முரசதிர்ந் தெழும்' என்று தொடங்கும்; இடைக்குறை. தண் - கேட்பதற்குக் குளிர்ச்சியைத் தரும். தமிழ் - செந்தமிழ்

மொழியில் அமைந்த. த்: சந்தி. தொடை - தொடுத்தலைக் கொண்ட மாலையாகிய ஒரு திருப்ப திகத்தை. சாத்தி - அந்த விருத்தாசலேசுவரருக்கு அணிந்து. வாழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. போந்து - அந்த விருத்தாசலத்திலிருந்து எழுந்தருளி. அங்கண் - அந்த இடத்தில் உள்ள. வளம் - நீர் வளம், நில வளம், செல்வ வளம், நன்மக்கள் வளம், ஆலய வளம், விருந்தினரை ஓம்பும் வளம் முதலிய வளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பதி - சிவத்தலமாகிய. அதனிடை - அந்த விருத்தாசலத்தில். வைகுவார் - தங்கிக் கொண்டு இருப்பவராகி; முற்றெச்சம். மணி வெற்பு - அழகிய பழமலையை. ச்: சந்தி. சூழ்ந்த - சுற்றி ஓடும். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. புனல் - நீர். சுலவு - நிறைந்து ஓடும். முத்தாற்றொடு - மணிமுத்தா நதியோடு. தொடுத்த - சேர்த்துக் கட்டிய. சொல் - சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். தொடை - தொடுத்தலைப் பெற்ற. மாலை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. வீழ்ந்த - தாம் விரும்பிய. காதலால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். பல முறை - பல தடவைகள். முறை: ஒருமை பன்மை மயக்கம். விளம்பி - பாடியருளி. ஏ: அசைநிலை. சில நாள்கள் - சில தினங்கள். மேவினார் - அந்த விருத் தாசலத்தில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.

அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருமுக்கால் வருமாறு:

"முரசதிர்ந் தெழுதரு முதுகுன்றம் மேவிய
பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்
அரசர்கள் உலகில் ஆவாரே."

பிறகு வரும் *184*-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்த விருத்தாசலத்தில் எழுந்தருளியிருக்கும் நாதராகிய பழமலைநாதரை வணங்கித் திருப்பெண்ணாகடத்தை அடைந்து பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர் களாகிய வேதியர்கள் அந்த நான்கு வேதங்களையும் ஓதும் இனிய கானம் ஓங்கி எழும் அந்தப் பெண்ணாகடத்தில் விளங்கும் தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலில் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற ஓர் ஒப்பற்ற பரஞ்சோதியாகிய சுடர்க்கொழுந்தீசருடைய பக்கத்தை அந்த நாயனார் அடைந்து முன்னால் அந்த ஆலயத்தை வலமாக வந்து அந்தச் சுடர்க்கொழுந்தீசரை வணங்கி விட்டுத் தாம் புகழ்ந்து பாடியருளும் சொற்கள் அடங்கிய செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை, ''தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்'' என்று வரும் உரிய பண் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும் பாடி அறிவித்தருளினார்.' பாடல் வருமாறு:

''ஆங்கு நாதரைப் பணிந்துபெண் ணாகடம்
அணைந்தரு மறையோசை
ஓங்குதூங் கானைமா டத்துள் அமர்கின்ற
ஒருதனிப் பரஞ்சோதிப்
பாங்க ணைந்துமுன் வலங்கொண்டு பணிவுற்றுப்
பரவுசொல் தமிழ்மாலை,
'தீங்கு நீங்குவீர் தொழு மின்கள்' எனும்இசைப்
பதிகமும் தெரிவித்தார்.''

ஆங்கு - அந்த விருத்தாசலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். நாதரை - நாதராகிய பழமலைநாதரை. ப்: சந்தி. பணிந்து - திருஞான சம்பந்த

மூர்த்தி நாயனார் வணங்கி. பெண்ணாகடம் - திருப் பெண்ணாகடத்தை. அணைந்து - அடைந்து. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களையும் முறையாக அத்திய யனம் செய்து நிறைவேற்றியவர்களாகிய வேதியர்கள்; திணை மயக்கம். மறை: ஒருமை பன்மை மயக்கம். ஓசை - அந்த நான்கு வேதங்களையும் ஓதும் இனிய கானம். ஓங்கு - ஓங்கி எழும். தூங்கானை மாடத்துள் - அந்தப் பெண்ணாகடத்தில் விளங்கும் தூங்கானை மாடம் என்னும் திருக்கோயிலில். அமர்கின்ற - விரும்பி எழுந்தருளியிருக்கின்ற. ஒரு தனி - ஒப்பற்ற. ப்: சந்தி. பரஞ்சோதி - பரஞ்சோதியாகிய சுடர்க்கொழுந்தீசருடைய. ப்: சந்தி. பாங்கு - பக்கத்தை. அணைந்து - அந்த நாயனார் அடைந்து. முன் - முன்னால். வலங்கொண்டு - அந்த ஆலயத்தை வலமாக வந்து. பணிவுற்று - அந்தச் சுடர்க்கொழுந்தீசரை வணங்கிவிட்டு. ப்: சந்தி. பரவு - தாம் புகழ்ந்து பாடியரு ளும். சொல் - இனிய சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. 'தீங்கு நீங்கவீர் தொழுமின்கள்' எனும் - 'தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்' என்று வரும். எனும்: இடைக்குறை. இசை - உரிய பண் அமைந்த. ப்: சந்தி. பதிகமும் - ஒரு திருப் பதிகத்தையும். தெரிவித்தார் - பாடி அறிவித்தருளினார்.

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பழந்தக்கராகப் பண்ணில் திருத்தூங்கானை மாடத்தைப் பற்றிப் பாடியருளிய சில பாசுரங்கள் வருமாறு:

"ஒடுங்கும் பிணிபிறவி சேரிடன்றிவை
உடைத்தாய வாழ்க்கை ஒழித்தவம்

அடர்கும் மிடம்கருதி நின்றீரெல்லாம்அடிகள்
அடிநிழற்கீ ழாளாம் வண்ணம்
கிடங்கும் மதிலும் கலாவிளங்கும் செழுமனைகள்
தோறும் மறையின் னொலி
தொடங்கும் கடந்தைத் தடங்கோ யில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.''

''பிணிதீர சாதல் பிறத்தல் இவைபிரியப்
பிரியாத பேரின் பத்தோ
பணிநிர மேலுலகம் எய்துலுறில் அறிமின்
குறைவில்லை ஆனேறுடை
மணிநீல கண்டம் உடையபிரான் மலை
மகளும் தானும் மகிழ்ந்துவாழும்
துணிநீர்க் கடந்தைத் தடங்கோ யில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.''

''பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில் வாடிப்
பழிப்பாய வாழ்க்கை ஒழியத்தவம்
இல்சூழ் இடம்கருதி நின்றீர் எல்லாம்
இறையே பிரியா தெழுந்து போதும்
கல்சூழ் அரக்கன் கதறச் செய்தான்
காதலியும் தானும் கருதிவாழும்
தொல்சீர்க் கடந்தைத் தடங்கோ யில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.''

''நோயும் பிணியும் அருந்து யரமும்
நுகருடைய வாழ்க்கையொ ழித்தவம்
வாயும் மனம்கருதி நின்றீ ரெல்லாம்
மலர்மிசைய நான்முகனும் மண்ணும் விண்ணும்
தாய அடியளந்தான் காண மாட்டாத்

தறைவர்க் கிடம்போலும் தண்சோலைவிண்
தோயும் கடந்தைத் தடங்கோ யில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.''

''பகடூர் பசிநலிய நோய் வருதலாற்
பழிப்பாய் வாழ்க்கை ஒழியத்தவம்
முகடூர் மயிர்கடிந்த செய்கை யாரும்
மூடுதுவ ராடையரும் நாடிச்சொன்ன
திகடீர்ந்த பொய்ம்மொழிகள் தேற வேண்டா
திருந்திழையும் தானும் பொருந்தி வாழும்
துகடீர் கடந்தைத் தடங்கோ யில்சேர்
தூங்கானை மாடம் தொழுமின்களே.''

*பிறகு வரும் 185-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

*'ஓர் அன்னையினுடைய கருப்பாகயமாகிய இடத் தில் புகாதவர்கள் தங்களுடைய கைகளைத் தங்களுடைய தலைகளின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து வணங்கும் ஒப்பற்றவராகிய சுடர்க் கொழுந்தீசரை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வணங்கித் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து அப்பால் எழுந்தருளி பெருமையைப் பெற்று விளங்கும் வரத்தினால் தம்மைப் பெற்றெடுத்த தந்தையாராகிய சிவபாத இருதயரோடு திருவரத்துறை என்னும் சிவத்தலத்தை அடைவோம் எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு அந்தச் சிவத்தலத் திற்கு அந்த நாயனார் எழுந்தருளுபவரானார்.' பாடல் வருமாறு:*

''கருவ ரைப்பிற புகாதவர் கைதொழும்
ஒருவ ரைத்தொழு துள்ளம் உவந்துபோய்ப்
பெருவ ரத்தினிற் பெற்றவர் தம்முடன்
திருவ ரத்துறை சேர்துமென் றேகுவார்.''

கரு - ஓர் அன்னையினுடைய கருப்பாகயமாகிய; கருப்பாகயம் - கருப்பப் பை. வரைப்பில் - இடத்தில். புகாதவர் - சேராதவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். 'பிறக்காதவர்கள்' என்றபடி. கை - தங்களுடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழும் - தங்களுடைய தலைகளின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டுப் பிறகு தரையில் விழுந்து வணங்கும். ஒருவரை - ஒப்பற்றவராகிய சுடர்க்கொழுந்தீசரை. த்: சந்தி. தொழுது - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வணங்கி. உள்ளம் - தம்முடைய திருவுள்ளத்தில். உவந்து - மகிழ்ச்சியை அடைந்து. போய் - அப்பால் எழுந்தருளி. ப்: சந்தி. பெரு - பெருமையைப் பெற்று விளங்கும். வரத்தினில் - பிரமபுரீசரிடம் பெற்ற வரத்தினால்; உருபு மயக்கம். பெற்றவர் தம்முடன் - தம்மைப் பெற்றெடுத்த தந்தையாராகிய சிவபாத இருதயரோடு. தம்: அசை நிலை. திருவரத்துறை - திருவரத்துறை என்னும் சிவத்தலத்தை. சேர்தும் - யாம் அடைவோம். என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு. ஏகுவார் - அந்தச் சிவத்தலத்திற்கு அந்த நாயனார் எழுந்தருளியவரானார்.

திருவரத்துறை: இந்தச் சிவத்தலம் நெல்வாயில் எனவும் வழங்கும். இது நடு நாட்டில் வெள்ளாற்றங் கரையில் உள்ளது. இங்கே கோயில் கொண்டிருப்பவர் அரத்துறைநாதர். அம்பிகை ஆனந்தநாயகி. இது பெண்ணா கடத்திற்குத் தென்மேற்குத் திசையில் நான்குமைல் தூரத்தில் நிவா என்னும் வெள்ளாற்றின் கரையில் உள்ளது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு அரத்துறைநாதர் முத்துச் சிவிகையையும், முத்துக்குடையையும், முத்துச் சின்னங்களையும் வழங்கியருளிய தலம் இது. அருணகிரி

நாதர் தாம் பாடிய திருப்புகழில் இந்தச் செய்தியைக் குறிப்பிட்டிருக்கிறார். அந்தத் திருப்புகழ்ப் பாடலின் பகுதி வருமாறு:

"பிறவியைத் தணித்தருளும் நிட்களப்
பிரமசிற்சுகக் - கடல்மூழ்கும்
பெருமுளீத்தி ரட்பரவு செய்ப்பதிப்
பிரபல கொச்சையாற் - சதுர்வேதச்
சிறுவ நிற்கருட் கவிகை நிலத்திலச்
சிவிகை யைக்கொடுத் - தருளீசன்
செகதலத் தினிற் புகழ்ப டைத்தமெய்த்
திருவரத்துறைப் - பெருமாளே."

இந்தத் தலத்தைப் பற்றிப் பியந்தைக் காந்தாரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"எந்தை ஈசன் எம்பெருமான்
ஏறமர் கடவுள் என்றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற்
சென்றுகை கூடுவ தன்றால்
கந்தமா மலருந்திக் கடும்புனல்
நிவா மல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில்
அரத்துறை அடிகள்தம் மருளே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானைஒப் பாரிய லாதஎம்
அடலு ளானை அரத்துறை மேவிய
சுடரு ளானைக் காண்பீர்நாம் தொழுவதே."

இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கல்வாய் அகிலும் கதிர்மா மணியும்
கலுந்துந்தி வருந்திய வின்கரைமேல்
நெல்வாயில் அரத்துறை நீடு றையும்
நிலவெண் மதிசூடிய நின்மலனே
நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார்
நரைத்தார் இறந்தார் என்று நானிலத்தில்
சொல்வாய்க் கழிகின்ற தறிந் தடியேன்
தொடர்ந்தேன் உய்யப் போவதோர் சூழல்சொல்லே."

பிறகு வரும் *186-ஆம்* பாடலின் கருத்து வருமாறு:

'முன்பு உள்ள பல தினங்களில் ஏதோ ஒரு முறை தம்முடைய முதுமைப் பிராயத்தை அடைந்த தந்தையாராகிய சிவபாத இருதயருடைய பிடரியின் மேல் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அமர்ந் திருப்பார்; அவ்வாறு இல்லாமல் அப்படி அமர்ந்திருப் பதை விட்டுவிட்டு அந்தணராகிய அந்தச் சிவபாத இருதயராகிய அந்தத் தந்தையார் தம்முடைய பக்கத்தில் வரத் தம்முடைய திருவுள்ளத்தில் அமைந்த விருப்பத் தோடு அவருக்கு முன்னால் அந்த நாயனார் எழுந்தருளி னார்.' பாடல் வருமாறு:

"முந்தை நாள்கள் ஒரோவொரு காலமுது
தந்தை யார்பியல் மேலிருப் பார்தவிர்ந்
தந்த ணாளர் அவரரு கேசெலச்
சிந்தை செய்விருப் போடுமுன் சென்றனர்."

முந்தை - முன்பு உள்ள. நாள்கள் - பல தினங்களில். ஒரோ ஒரு - ஏதோ ஒரு. கால - முறை. முது - முதுமைப் பிராயத்தை அடைந்த. தந்தையார் - தம்முடைய

தந்தையாராகிய சிவபாத இருதயருடைய. பியல் மேல் - பிடரியின் மேல். இருப்பார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அமர்ந்திருப்பார். தவிர்ந்து - அப்படி அமர்ந்திருப்பதை விட்டுவிட்டு. அந்தணாளர் - வேதியராகிய. அவர் - தம்முடைய தந்தையாகிய அந்தச் சிவபாத இருதயர். அருகு - தம்முடைய பக்கத்தில். ஏ: அசை நிலை. செல - வர; இடைக்குறை. ச்: சந்தி. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். செய் - அமைந்த. விருப்போடு - விருப்பத்தோடு. முன் - அந்தச் சிவபாத இருதயருக்கு முன்னால். சென்றனர் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பின்பு உள்ள 187-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அரத்துறை நாதர் திருக்கோயில்கொண்டு எழுந்தருளி யிருக்கும் திருநெல்வாயில் அரத்துறையைப் பார்த்தே விருப்பத்தோடு அடைவாராகி வேகமாக எழுந்தருளத் தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரும் வருத்தத்தை அடையுமாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவடிகளாகிய செந்தாமரை மலர்கள் நடந்ததனால் மெல்ல மெல்ல வருத்தத்தை அடைந்தன.' பாடல் வருமாறு:

"ஆதி யார்தம் அரத்துறை நோக்கியே
காத லால்அணை வார்கடி தேகிடத்
தாதை யாரும் பரிவுறச் சம்பந்தர்
பாத தாமரை நொந்தன பைப்பய."

ஆதியார்தம் - எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அரத்துறைநாதர். தம்: அசை நிலை. அரத்துறை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்

திருநெல்வாயில் அரைத்துறையை. நோக்கியே - பார்த்தே. காதலால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். அணைவார் - அடைபவராகி; முற்றெச்சம். கடிது - வேகமாக. ஏகிட - எழுந்தருள. த்: சந்தி. தாதையாரும் - தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரும். பரிவு உற - வருத்தத்தை அடையுமாறு. ச்: சந்தி. சம்பந்தர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பாத - தம்முடைய திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். தாமரை - செந்தாமரை மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பைப்பய - கால்களால் நடந்தமையால் மெல்ல மெல்ல. நொந்தன - வருத்தத்தை அடைந்தன.

அடுத்து வரும் 188-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்கள் யாவும் ஒரு வடிவமாக வந்தன என்று கூறுமாறும், கலைகள் நிரம்பிய பூரண சந்திரனாகிய குழந்தை நீளமாக உள்ள தரையைச் சேர்ந்திருக்கிறது என்று கூறுமாறும், துறையில் அலைகள் வீசும் கங்கையாற்றைத் தம்முடைய தலையின் மேல் தங்க வைத்திருக்கும் திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும், எங்கும் நிறைந்தவருமாகிய அரத்துறை நாதரை வணங்கும் பொருட்டு வேகத்தோடு அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"மறைய னைத்தும் ஒருவடி வாமென
நிறைம திப்பிள்ளை நீள்நிலம் சேர்ந்தெனத்
துறைஅ லைக்கங்கை சூடும் அரத்துறை
இறைவ ரைத்தொழு வான்விரைந் தேகினார்."

மறை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அனைத்தும் - யாவும். ஒரு வடிவு ஆம் - ஒரு வடிவமாக வந்தனவாகும். என - என்று கூறுமாறும்; இடைக்குறை. நிறை - கலைகள் நிரம்பிய. கலைகள்: தோன்றா எழுவாய். மதி - பூரண சந்திரனாகிய. ப்: சந்தி. பிள்ளை - ஆண் குழந்தை. நீள் - பரவலாக உள்ள. நிலம் - தரையை; 'உலகத்தை' எனலும் ஆம். சேர்ந்தென - சேர்ந்திருக்கிறது என்று கூறுமாறும். த்: சந்தி. துறை - துறையில். அலை - அலைகள் வீசும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கங்கை - கங்கையாற்றை. சூடும் - தம்முடைய தலையின்மேல் தங்க வைத்திருக்கும். அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில். இறைவரை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எங்கும் நிறைந்தவருமாகிய அரத்துறை நாதரை. த்: சந்தி. தொழுவான் - வணங்கும் பொருட்டு. விரைந்து - வேகத்தோடு. ஏகினார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பின்பு வரும் 189-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பந்த பாசம் இல்லாதவரானாலும் இந்தப் பூமண்டலத்தின்மேல் தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்த ஆவல் சங்கரனாகிய அரத்துறை நாதனை வணங்குவதற்காக உள்ள பான்மை யினால் தேஜஸ் மிகுதியாக வீசும் அழகிய திருவடிவத்தைப் பெற்றவரான அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஈசனாகிய அரத்துறைநாதனைப் பலமுறை வணங்கிக் கொண்டே எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"பாசம் மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால்

தேசு மிக்க திருவுரு வானவர்
ஈசனைத் தொழுதே தொழு தேகினார்.''

பாசம் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பந்தபாசம். மற்று: அசைநிலை. இலர் - இல்லாதவர்; இடைக்குறை. ஆயினும் - ஆனாலும். பார்மிசை - இந்தப் பூமண்டலத்தின்மேல். ஆசை - தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்த ஆவல். சங்கரற்கு - சங்கரனாகிய அரத்துறை நாதனை வணங்குவதற்காக. சங்கரன் - சுகத்தைக் செய்பவன். ஆயின - அமைந்துள்ள. தன்மையால் - பான்மையினால். தேசு - தேஜஸ்; ஒளி. மிக்க - மிகுதியாக வீசும். திருவுரு ஆனவர் - அழகிய வடிவத்தைப் பெற்றவரான அந்தத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார். ஈசனை - பரமேசுவரனாகிய அரத்துறை நாதனை. த்: சந்தி. தொழுதே தொழுது - பலமுறைகள் வணங்கிக் கொண்டே. ஏகினார் - எழுந்தருளினார்.

பின்பு உள்ள 190-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இந்தப் பெரிய உலகத்தில் உள்ள அறியாமையாகிய இருட்டுப் போகுமாறு சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய வைதிகமாமணியாக விளங்கியவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத்திற்கு நிறைந்த அமுதத்தைப் போன்றவரும், சிவப்பாக இருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவரும், தம்முடைய தந்தையாரைப் போன்றவருமாகிய பிரமபுரீசருடைய வெற்றிக்கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளைத் தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து புறப்பட்டு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"இந்த மாநிலத் தின்இருள் நீங்கிட
வந்த வைதிக மாமணி யானவர்
சிந்தை ஆரமு தாகிய செஞ்சடைத்
தந்தை யார்கழல் தாழ்ந்தெழுந் தேகினார்."

இந்தமா - இந்தப் பெரிய. நிலத்தின் - உலகத்தில் வாழும் மக்களிடத்தில் உள்ள; இட ஆகுபெயர். இருள் - அறியாமையாகிய இருட்டு. நீங்கிட - போகுமாறு. வந்த - சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. வைதிக - வைதிக சமயத்தினுடைய. மா - பெருமையைப் பெற்று விளங்கும். மணியானவர் - மாணிக்கத்தைப் போன்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். சிந்தை - தம்முடைய திருவுள்ளத்திற்கு. ஆர் - நிறைந்த. அமுதாகிய - அமிர்தத்தைத் போன்றவராகிய; உவம ஆகுபெயர். செம் - சிவப்பாக விளங்கும். சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற்பெற்ற. த்: சந்தி. தந்தையார் - தம்முடைய தந்தையாரைப் போன்றவராகிய பிரமபுரீசருடைய; உவம ஆகுபெயர். கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். தாழ்ந்து - தரையில் விழுந்து வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. ஏகினார் - சீகாழியிலிருந்து புறப்பட்டு அப்பால் எழுந்தருளினார்.

பிறகு வரும் 191-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'மாறன்பாடி என்னும் பெயரைப் பெற்ற சிவத்தலம் வந்து சேர வழியில் நடந்து போன வருத்தத்தோடு தளர்ச்சியினால் வேறாக நடந்து போகும் மக்கள் வெப்பத்தை அடைய ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் ஏறியிருக்கும் ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து

எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை ஓதி அந்த மாறன்பாடியை அடைய.' பாடல் வருமாறு:

"மாறன் பாடி எனும்பதி வந்துற
ஆறு செல்வருத் தத்தின் அசைவினால்
வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறும் அஞ்செழுத் தோதிஅங் கெய்திட."

இந்தப் பாடல் குளகம். மாறன் பாடி எனும் - மாறன்பாடி என்னும் பெயரைப் பெற்ற. எனும்: இடைக்குறை. பதி - சிவத்தலம். வந்துஉற - வழியில் வந்து சேர. ஆறுசெல் - வழியில் கால்களால் நடந்து போன. வருத்தத்தின் - வருத்தத்தோடு. அசைவினால் - தளர்ச்சி யினால். வேறு - வேறாக. செல்பவர் - நடந்து போகும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெய்து - வெப்பத்தை. உற - அடைய. ப்: சந்தி. பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். ஏறும் - தம்முடைய திருவுள்ளத்தில் ஏறியிருக்கும். அஞ்சு எழுத்து - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். ஓதி அங்கு - ஓதிக் கொண்டு அந்த மாறன் பாடியை. எய்திட - அடைய.

பிறகு உள்ள 192-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தாங்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு வந்த மக்களுக்கு உண்டான வெப்பத்தால் வந்த களைப்புக்கு அச்சத்தை அடைந்தவனைப் போலத் தன்னுடைய கைகளாகிய கிரணங்கள் ஆயிரத்தையும் மீள வாங்கிக்கொண்டு மறைந்து அத்தமனமாகிப் போய் சூரியன் மேற்குத் திசையில் உள்ள சமுத்திரத்தில் விழுந்தான்.' பாடல் வருமாறு:

"உய்ய வந்தசம் பந்தருடன் வந்தார்க்
கெய்து வெம்மை இளைப்பஞ்சி னான்போலக்
கைகள் ஆயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்ய வன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன்."

*உய்ய - தாங்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். சம்பந்தருடன் வந்த - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு நடந்து வந்த. வந்தார்க்கு - வந்த மக்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். எய்து - உண்டான. வெம்மை - வெப்பத்தால் வந்த. இளைப்பு - களைப்பைக் கண்டு. அஞ்சினான் போல - அச்சத்தை அடைந்தவனைப் போல. க்: சந்தி. கைகள் - தன்னுடைய கைகளாகிய கிரணங்கள். ஆயிரம் - ஆயிரத்தையும். வாங்கி - மீளவாங்கிக் கொண்டு. க்: சந்தி. கரந்து போய் - மறைந்து போய். வெய்யவன் - வெப்பமாகிய வெயிலை வீசும் சூரியன். சென்று - போய். மேல்கடல் - மேற்குத் திசையில் உள்ள சமுத்திரத்தில். வீழ்ந்தனன் - விழுந்தான்.*

*அடுத்து உள்ள 193-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

*'அன்றைத் தினம் இரவு நேரத்தில் அந்தச் சிவத்தலமாகிய மாறன்பாடியில் தம்மோடு சுற்றி வந்த நெடுங்காலமாகத் திருத்தொண்டுகளைப் புரிந்து வந்த திருத்தொண்டர்கள் தம்மை வாழ்த்தி வணங்க இடப வாகனத்தின் மேல் ஏறி வந்த தலைவனாகிய பிரம புரீசனுடைய வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை விரும்பி வணங்குபவராகிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் மெய், வாய், கண்கள், மூக்கு, காதுகள் என்னும் ஐந்து இந்திரியங்களையும் வென்ற வெற்றியைப் பெற்ற பெருமையை அடைந்து விளங்கும் தவத்தைப் புரிந்த தவசியர்களோடு அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:*

"அற்றை நாள்இர வப்பதி யின்னிடைச்
சுற்று நீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்றம் ஊர்ந்த பிரான்கழல் பேணுவார்
வெற்றி மாதவத் தோருடன் மேவினார்."

அற்றை நாள் - அன்றைத் தினம். இரவு - இராத்திரி நேரத்தில். அப்பதியின்னிடை - அந்தச் சிவத்தலமாகிய மாறன் பாடியில். ச்: சந்தி. சுற்று - தம்மோடு சுற்றி வந்த. நீடிய - நெடுங்காலமாகத் திருத்தொண்டுகளைப் புரிந்து வந்த. தொண்டர்கள் - திருத்தொண்டர்கள். போற்றிட - தம்மை வாழ்த்தி வணங்க. ப்: சந்தி. பெற்றம் - இடப வாகனத்தின் மேல். ஊர்ந்த - ஏறி வந்த. பிரான் - தலைவனாகிய பிரமபுரீசனுடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடிகளை; ஆகுபெயர். பேணுவார் - விரும்பி வணங்குபவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வெற்றி - மெய், வாய், கண்கள், மூக்கு, காதுகள் என்னும் ஐந்து இந்திரியங்களையும் வென்ற வெற்றியைப் பெற்ற. "புலனைந்தும் வென்றான்.", "வென்ற ஐம் புலனால் மிக்கீர்." என வருபவற்றைக் காண்க. மா - பெருமையை அடைந்து திகழும். தவத்தோருடன் - தவத்தைப் புரிந்த தவசியர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். மேவினார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பின்பு வரும் 194-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இத்தகைய நிலையில் அழகு வளரும் பூந்தராயாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் கால்களால் நடந்து வழியில் வந்ததனால் உண்டான வருத்தத்தை அன்னப் பறவைகள் விளையாடும் துறையில் நீர் வளம் நிரம்பிய திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு

எழுந்தருளியிருப்பவரும், தம்முடைய தலையின் மேல் கங்கையாற்றைத் தங்க வைத்திருப்பவரும் ஆகிய அரத்துறை நாதர் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து பின் வருமாறு புரிந்தருளினார்.' பாடல் வருமாறு:

"இந்நி லைக்கண் எழில்வளர் பூந்தராய்
மன்ன னார்தம் வழிவருத் தத்தினை
அன்னம் ஆடும் துறைநீர் அரத்துறைச்
சென்னி ஆற்றர் திருவுளம் செய்தனர்."

இந்நிலைக்கண் - இத்தகைய நிலையில். எழில் - அழகு. வளர் - வளரும். பூந்தராய் - பூந்தராயாகிய சீகாழியை. மன்னனார் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தம் வழி வருத்தத்தினை - தாம் கால்களால் நடந்து வழியில் வந்ததனால் உண்டாகிய வருத்தத்தை. அன்னம் - அன்னப் பறவைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆடும் - விளையாடும். துறை - துறையில். நீர் - நீர் வளம் நிரம்பிய. அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில். ச்: சந்தி. சென்னி - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும் தம்முடைய தலையின் மேல். ஆற்றர் - கங்கையாற்றைத் தங்க வைத்திருப்பவரும் ஆகிய அரத்துறை நாதர். திருவுளம் - தம்முடைய திருவுள்ளத்தில். உளம்: இடைக் குறை. செய்தனர் - மகிழ்ச்சியை அடைந்து புரிந்தருளினார்.

பின்பு வரும் 195-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஏறுவதற்காகப் பல்லக்கையும், பிடித்துக் கொள்ளக் குடையையும், தம்முடைய திருநாமத்தைச் சொல்லி ஊதுவதற்காக அமைந்த தங்கச் சின்னங்களையும் ஒப்பு இல்லாத முத்துக்களினுடைய வடிவங்களால் அமையுமாறு

நிலைபெற்று விளங்கிய விபூதியைப் பூசிக்கொள்ளுதலை மகிழ்ந்து ஏற்றுக் கொண்ட ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் இயல்பாகவே இல்லாத வராகிய அரத்துறை நாதர் வழங்கியருளுபவரானார்.' பாடல் வருமாறு:

"ஏறு தற்குச் சிவிகை, இடக்குடை,
கூறி ஊதக் குலவுபொற் சின்னங்கள்,
மாறில் முத்தின் படியினால் மன்னிய
நீறு வந்த நிமலர் அருளுவார்."

ஏறுதற்கு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஏறிப் போவதற்காக. ச்: சந்தி. சிவிகை - பல்லக்கையும். இட - பிடித்துக் கொள்வதற்காக. க்: சந்தி. குடை - குடையையும். கூறி - தம்முடைய திருநாமத்தைச் சொல்லி. ஊத - ஊதுவதற்காக. க்: சந்தி. குலவு - அமைந்த. பொற்சின்னங்கள் - தங்கத்தாற் செய்த சின்னங்களையும். மாறு - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. முத்தின் - முத்துக்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். படியினால் - வடிவங்களால்; ஒருமை பன்மை மயக்கம். மன்னிய - நிலைபெற்று விளங்கிய. நீறு - விபூதியைப் பூசிக் கொள்ளுதலை. உவந்த - மகிழ்ந்து ஏற்றுக் கொண்ட. நிமலர் - ஆவணம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் இயல்பாகவே இல்லாதவரும், திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பவருமாகிய அரத்துறை நாதர். அருளுவார் - வழங்கியருளுபவரானார்.

பிறகு வரும் 196-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'நெடுங்காலமாகப் பக்தர்கள் வாழ்ந்து வரும் சிவத்தலமாகும் திருநெல்வாயில் அரத்துறையில் உள்ள

மாடங்கள், பெருமையைப் பெற்று விளங்கும் திருமாளிகைகள் ஆகிய ஒவ்வொன்றிலும் வாழும் வேதியர்களுக்கு அவர்கள் துயில் கொள்ளும் போது அன்று வந்து சேரும் இரவு நேரத்தில் சொப்பனத்தில் கூட்டமாக உள்ள வேதங்கள் தேடுகின்ற செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகள் தோன்றுமாறு அந்த அரத்துறை நாதர் முன்னால் எழுந்தருளிப் பிறகு.' பாடல் வருமாறு:

"நீடு வாழ்பதி யாகும்நெல் வாயிலின்
மாட மாமனை தோறும் மறையோர்க்குக்
கூடு கங்குல் கனவில் குலமறை
தேடு சேவடி தோன்றமுன் சென்றுபின்."

இந்தப் பாடல் குளகம். நீடு - நெடுங்காலமாக. வாழ் - பக்தர்கள் வாழ்ந்து வரும். பக்தர்கள்: தோன்றா எழுவாய். பதியாகும் - சிவத்தலமாகும். நெல்வாயிலின் - திருநெல்வாயில் அரத்துறையில் உள்ள. மாட - மாடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மா - பெருமையப் பெற்று விளங்கும். மனை - திருமாளிகைகள்; ஒருமை பன்மை மயக்கம். தோறும் - ஆகிய ஒவ்வொன்றிலும் வாழும். மறையோர்க்கு - வேதியர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கூடு - அவர்கள் துயில் கொள்ளும் போது அன்று வந்து சேரும். கங்குல் - இரவு நேரத்தில். கனவில் - அவர்கள் கண்ட சொப்பனத்தில். குல - கூட்டமாக உள்ள. மறை - வேதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தேடு - தேடுகின்ற. சேவடி - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகள். அடி: ஒருமை பன்மை மயக்கம். தோன்ற - தோன்றுமாறு. முன் - அந்த அரத்துறை நாதர் அந்த வேதியர்களுக்கு முன்னால். சென்று - எழுந்தருளி. பின் - பிறகு.

பிறகு வரும் 197-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்களுக்கு அவர்கள் துயிலும் போது கண்ட சொப்பனத்தில் அரத்துறை நாதர் எழுந்தருளி, ''திருஞான சம்பந்தன் நம்மிடம் வருகிறான்; அவனுக்குப் பெருமையைப் பெற்று விளங்கும் முத்துச் சிவிகை, அழகிய முத்துக்குடை, ஆக உள்ள சின்னங்களை எம்மிடம் பெற்றுக் கொண்டு கற்றுக் கொள்வதற்கு அருமையாக இருக்கும் அறுபத்து நான்கு கலைகளுக்கு அரசனாகிய அந்தத் திருஞான சம்பந்தனிடம் அடைந்து வழங்குவீர்களாக.'' என்று அந்த அரத்துறை நாதர் திருவாய் மலர்ந்து அருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

'' 'ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான்,
மான முத்தின் சிவிகை, மணிக்குடை
ஆன சின்னம்நம் பாற்கொண் டருங்கலைக்
கோன வன்பால் அணைந்து கொடும்'என.''

இந்தப் பாடலும் குளகம். ஞான சம்பந்தன் - அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்களுக்கு அவர்கள் துயிலும்போது கண்ட சொப்பனத்தில் அரத்துறைநாதர் எழுந்தருளித் திருஞான சம்பந்தன். நம்பால் - எம்மிடம். அணைகின்றான் - வருகிறான். மான - அவனுக்குப் பெருமையைப் பெற்று விளங்கும். முத்தின் - முத்துக்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சிவிகை - பல்லக்கு. மணி - அழகிய. க்: சந்தி. குடை - முத்துக்குடை. ஆன - ஆக உள்ள. சின்னம் - சின்னங்களை; ஒருமை பன்மை மயக்கம். நம்பால் - எம்மிடம். கொண்டு - நீங்கள் பெற்றுக் கொண்டு. அரும் - கற்பதற்கு அருமையாக இருக்கும். கலை - அறுபத்து நான்கு கலைகளுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அந்தக்

கலைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. கோன் - அரசனாகிய. அவன் பால் - அந்தத் திருஞான சம்பந்தனிடத்தில். அணைந்து - நீங்கள் போய்ச் சேர்ந்து. கொடும் - வழங்குவீர்களாக. என - என்று அந்த அரத்துறை நாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய; இடைக்குறை.

பின்பு உள்ள 198-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள் தாங்கள் துயிலும்போது கண்ட சொப்பனத்தில் அரத்துறைநாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த அந்தச் சமயத்தில் அந்த வேதியர்கள் யாவரும் வந்து ஒன்றாகக் கூடிக் கொண்டு மகிழ்ச்சியை அடைந்து வியப்பை அடையும் திருவுள்ளங்களோடும் செழிப்பைப் பெற்ற நீர்வளத்தைக் கொண்ட திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும், தம்முடைய தலையின் மேல் பிறைச்சந்திரனை அணிந்து கொண்டவரும் ஆகிய அரத்துறை நாதர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு அந்த வேதியர்கள் வந்து சேர்ந்தார்கள்.' பாடல் வருமாறு:

"அந்த ணாளர் உரைத்தஅப் போழ்தினில்
வந்து கூடி மகிழ்ந்தற் புதமுறும்
சிந்தை யோடும் செழுநீர் அரத்துறை
இந்து சேகரர் கோயில்வந் தெய்தினர்."

அந்தணாளர் - திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். உரைத்த - தாங்கள் துயிலும் போது கண்ட சொப்பனத்தில் அரத்துறைநாதர் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்த. அப்போழ்தினில் - அந்தச் சமயத்தில். வந்து - அந்த வேதியர்கள் யாவரும் வந்து. கூடி - ஒன்றாகக் கூடிக்

கொண்டு. மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. அற்புதம் உறும் - வியப்பை அடையும். சிந்தையோடும் - திருவுள்ளங்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். செழு - செழிப்பைப் பெற்ற. நீர் - நீர் வளத்தைக் கொண்ட. அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும்; இடஆகுபெயர். இந்து - பிறைச்சந்திரனை. சேகரர் - தம்முடைய தலையின் மேல் அணிந்து கொண்டிருப்பவரும் ஆகிய அரத்துறை நாதர். கோயில் - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு. வந்து - அந்த வேதியர்கள் வந்து. எய்தினர் - சேர்ந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 199-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்களோடும், மற்றும் உள்ள அரத்துறைநாதர் வழங்கிய திருவருளைப் பெற்ற அடியவர்களோடும் உயர்ந்து நிற்கும் அரத்துறைநாதர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குள் இருக்கும் மக்களுக்கும் வியப்பு உண்டாக, ''இந்தத் திருக்கோயிலில் இந்த நிகழ்ச்சி எத்தகைய வியப்பை அளிப்பதாக இருக்கிறது.'' என்று கூறுபவர்களாகிய அந்த அடியவர் களாகிய தாங்கள் அந்த வேதியர்களுக்கு முன்னால் பின்வருமாறு கூறினார்கள்.' பாடல் வருமாறு:

''ஆங்கு மற்ற அருள்அடி யாருடன்
ஓங்கு கோயிலுள் ளார்க்கும்உண் டாயிட
'ஈங்கி தென்ன அதிசயம்!' என்பவர்
தாங்கள் அம்மறை யோர்கள்முன் சாற்றினார்.''

ஆங்கு - அவ்வாறு. மற்ற - அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்களோடும் மற்றும்

உள்ள. அருள் - அரத்துறைநாதர் வழங்கிய திருவருளைப் பெற்ற. அடியாருடன் - அடியவர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். ஓங்கு - உயர்ந்து நிற்கும். கோயில் - அரத்துறைநாதர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்குள். உள்ளார்க்கும் - இருக்கும் மக்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். அவர்கள் பூஜகர்கள், பணிவிடை செய்யும் பணியாளர்கள் முதலியவர்கள். உண்டாயிட - வியப்பு உண்டாக. ஈங்கு - இந்தத் திருக்கோயிலில். இது - இந்த நிகழ்ச்சி; என்றது அரத்துறை நாதர் கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததை. என்ன - எத்தகைய. அதிசயம் - வியப்பை அளிப்பதாக இருக்கிறது. என்பவர் தாங்கள் - என்று கூறுபவர்களாகிய அந்த அடியவர்களாகிய தாங்கள். அம்மறையோர்கள் - அந்த வேதியர்களுக்கு. முன் - முன்னால். சாற்றினார் - பின் வருமாறு கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 200-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்த வேதியர்களும் மற்றவர்களும் அதிகமாகவும் மிகுதியாகவும் அமைந்த வியப்பை அடைந்த பான்மையினுடைய பக்கத்தை அடைந்தவர்கள் ஆனவுடன் அரத்துறை நாதருடைய திருப்பள்ளி எழுச்சிக்கு உரிய நேரம் வந்து சேர விருப்பத்தினுடைய வழியில் உண்டாகும் சௌகில்யத்தை மிகுதியாக உடைய சிவாசாரியர்கள் திருக்கோயிலின் வாசற்கதவைப் பூட்டியிருக்கும் அழகிய பூட்டைத் திறந்து அகற்றினார்கள்.' பாடல் வருமாறு:

"சால மிக்க வியப்புறு தன்மையின்
பால ராதலும் பள்ளி எழுச்சியின்
காலம் எய்திடக் காதல் வழிப்படும்
சீலம் மிக்கார் திருக்காப்பு நீக்கினார்."

சால - அந்த வேதியர்களும் மற்றவர்களும் அதிகமாகவும். மிக்க - மிகுதியாகவும் அமைந்த. வியப்பு உறு - வியப்பை அடைந்த. தன்மையின் பாலராதலும் - பான்மையினுடைய பக்கத்தை அடைந்தவர்கள் ஆனவுடன். பாலர்: ஒருமை பன்மை மயக்கம். மிகுதியான வியப்பை அடைந்தவர்களாக விளங்கினார்கள் என்பது கருத்து. ஆதலும் - ஆனவுடன். பள்ளி எழுச்சியின் - அரத்துறைநாதருடைய திருப்பள்ளி எழுச்சிக்கு உரிய. காலம் - நேரம். எய்திட - வந்து சேர. க்: சந்தி. காதல் - விருப்பத்தினுடைய. வழிப்படும் - வழியில் உண்டாகும். சீலம் - சௌகீல்யத்தை; நல்ல பண்புகளை; ஒருமை பன்மை மயக்கம். மிக்கார் - மிகுதியாகப் பெற்றவர் களாகிய சிவாசாரியார்கள்; ஒருமை பன்மை மயக்கம். திருக்காப்பு - திருக்கோயிலின் வாசற்கதவைப் பூட்டியிருக் கும் அழகிய பூட்டை. நீக்கினார் - திறந்து அகற்றினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 201-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சந்திரனைப் போன்ற வெண்மையான நிறத்தைப் பெற்ற செழிப்பாக விளங்கும் திரண்ட முத்துக்களால் அமைந்த தூயதாக உள்ள வெண்கொற்றக் குடையையும், பரிசுத்தமாக உள்ள பல்லக்கையும், ஒலி பொங்கி எழுமாறு ஊதும் ஒப்புக் கூறுவதற்கு அருமையாக இருக்கும் சின்னங்களையும் அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அரத்துறை நாதர் வழங்கிய திருவருளினால் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பார்த்தார்.' பாடல் வருமாறு:

"திங்கள் நீர்மைச் செழுந்திரள் முத்தினால்
துங்க வெண்குடை தூய சிவிகையும்
பொங்க ஊதும் பொருவரும் சின்னமும்
அங்கண் நாதர் அருளினாற் கண்டனர்."

திங்கள் - சந்திரனைப் போன்ற வெண்மையாகிய; உவம ஆகுபெயர். நீர்மை - வெண்மையான நிறத்தைப் பெற்ற. ச்: சந்தி. செழும் - செழிப்பாக விளங்கும். திரள் - திரண்ட. முத்தினால் - முத்துக்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். துங்க - தூயதாகிய. வெண்குடை - வெண்கொற்றக் குடையையும். தூய - பரிசுத்தமாக உள்ள. சிவிகையும் - பல்லக்கையும். பொங்க - ஒலி பொங்கி எழ. ஒலி: தோன்றா எழுவாய். ஊதும் - வாய் வைத்து ஊதும். பொருஅரும் - ஒப்புக் கூறுவதற்கு அருமையாகத் திகழும். சின்னமும் - சின்னங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அங்கண் - அந்தத் திருநெல்வாயில் அரத்துறையில். நாதர் - அந்தத் தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அரத்துறை நாதர். அருளினால் - வழங்கிய திருவருளால். கண்டனர் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பார்த்தார்.

அடுத்து உள்ள 202-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'முத்துக்குடை முதலியவற்றைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பார்த்த பிறகு அந்த நாயனார் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின்மேல் கூப்பி அரத்துறை நாதரை கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து வணங்கி அப்பால் தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு, ''இந்த முத்துக்குடை முதலியவை கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளுக்கும் விளக்கும் திருவிளக்கு ஆகும்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, அரத்துறை நாதருடைய தொண்டர் களோடும், திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள் அந்த நாயனாரைச் சுற்றிக் கொண்டு எழுந்து

நின்று கொண்டு தேவர்கள் வாழும் தேவலோக மும் தெரிந்து கொள்ளுமாறு பெருமுழக்கத்தை எழுப்பினார்கள்.' பாடல் வருமாறு:

''கண்ட பின்அவர் கைதலை மேற்குவித்
'தெண்டி சைக்கும் விளக்கிவை ஆம்'எனத்
தொண்ட ரோடும் மறையவர் சூழ்ந்தெழுந்
தண்டர் நாடும் அறிவுற ஆர்த்தனர்.''

கண்ட - அரத்துறை நாதர் வழங்கிய முத்துக்குடை முதலியவற்றைப் பார்த்த. பின் - பிறகு. அவர் - அந்தத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார். கை - தம்முடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல் - தம்முடைய தலைமேல். குவித்து - கூப்பி அரத்துறை நாதரைக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து அந்த நாதரை வணங்கி விட்டு அப்பால் தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. இவை - இந்த முத்துக்குடை முதலியவை. எண் திசைக்கும் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளுக்கும். திசை: ஒருமை பன்மை மயக்கம். விளக்கு - விளக்கும் திரு விளக்கு. ஆம் - ஆகும். என - என்று அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய; இடைக்குறை. த்: சந்தி. தொண்டரோடும் - அரத்துறை நாதருடைய திருத்தொண்டர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம் . மறையவர் - திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்து - அந்த நாயனாரைச் சுற்றிக் கொண்டு. எழுந்து - எழுந்து நின்று கொண்டு. அண்டர் - தேவர்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். நாடும் - தேவலோகமும். அறிவுற - தெரிந்து கொள்ளுமாறு. ஆர்த்தனர் - பெரு முழக்கத்தை எழுப்பினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 203-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சங்க வாத்தியங்களும், துந்துபிகளும், தாரைகளும், பேரிகைகளும் முதலாக உள்ள ஒலியைப் பொங்குமாறு எழுப்பும் பல வாத்தியங்களின் இனிய ஓசை விளங்கி எழுந்து கேட்க அழகிய கண்களைப் பெற்றவனாகிய அரத்துறை நாதன் வழங்கிய திருவருளால் அந்த முத்துக்குடை முதலியவற்றைப் பெற்றுக்கொண்டு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மோடு பொங்கி எழும் விருப்பத்தைப் பெற்ற திருத்தொண்டர்கள் தம்மை எதிர்கொண்டு வரவேற்க அந்த நாயனார் எழுந்தருள் வாரானார்.' பாடல் வருமாறு:

"சங்கு துந்துபி தாரைபே ரிம்முதல்
பொங்கு பல்லிய நாதம் பொலிந்தெழ
அங்க ணன்அரு ளால்அவை கொண்டுடன்
பொங்கு காதல் எதிர்கொளப் போதுவார்."

சங்கு - சங்க வாத்தியங்களும்; ஒருமை பன்மை மயக்கம். துந்துபி - துந்துபிகளும்; ஒருமை பன்மை மயக்கம். தாரை - தாரைகளும்; ஒருமை பன்மை மயக்கம். பேரி - பேரிகைகளும்; ஒருமை பன்மை மயக்கம். ம்: செய்யுளின் ஓசையை நோக்கி அமைந்த மெய்யெழுத்து. முதல் - முதலாக உள்ள. பொங்கு - ஒலியைப் பொங்குமாறு. பல் இய - பல வாத்தியங்களின். நாதம் - இனிய ஓசை. பொலிந்து - விளங்கி. எழ - எழுந்து கேட்க. அங்கணன் - அழகிய கண்களைப் பெற்றவராகிய அரத்துறைநாதர். அருளால் - வழங்கிய திருவருளினால். அவை - அந்த முத்துக்குடை முதலியவற்றை. கொண்டு - பெற்றுக் கொண்டு. உடன் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மோடு. பொங்கு - தங்களுடைய திருவுள்ளங்களில் பொங்கி எழும். காதல் - விருப்பத்தைப்

பெற்ற திருத்தொண்டர்கள்; ஆகுபெயர். எதிர்கொள - தம்மை எதிர்கொண்டு வரவேற்க; இடைக்குறை. ப்: சந்தி. போதுவார் - அந்த நாயனார் எழுந்தருளுபவரானார்.

பிறகு வரும் 204-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஒரு குற்றமும் இல்லாதவர்களும், உண்மையையே பேசுபவர்களும், திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வருபவர்களும் ஆகிய வேதியர்கள் ஒரு குற்றமும் இல்லாத சீர்த்தியைப் பெற்ற சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செயதருளியவரும், ஆண்மையையும் தகுதியையும் பெற்ற வரும் ஆகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில் ஒளியை உடைய முத்துப் பல்லக்கு முதலானவற்றை பரமேசுவரராகிய அரத்துறைநாதர் வழங்கிய இனிய திருவருளினால் சுமந்து கொண்டு போனார்கள்.' பாடல் வருமாறு:

"மாசில் வாய்மைநெல் வாயில் மறையவர்
ஆசில் சீர்ச்சண்பை ஆண்டகை யார்எதிர்
தேசு டைச்சிவி கைமுத லாயின
ஈசர் இன்னரு ளால்தாங்கி ஏகினார்."

மாசு - ஒரு குற்றமும். இல் - இல்லாதவர்களும்; வினையாலணையும் பெயர். வாய்மை - உண்மையையே பேசுபவர்களும்; ஆகுபெயர். நெல்வாயில் - திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வருபவர்களும் ஆகிய; இட ஆகுபெயர். மறையவர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆசு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. ச்: சந்தி. சண்பை - சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. ஆண் - ஆண்மையையும். தகையார் - தகுதியையும் பெற்றவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. எதிர் - எதிரில். தேசு

- ஒளியை. உடை - பெற்ற. ச்: சந்தி. சிவிகை - முத்துப்பல்லக்கு. முதலாயின - முதலாக உள்ளவற்றை; என்றது முத்துக் குடை, பலவகையான சின்னங்கள் முதலியவற்றை. ஈசர் - பரமேசுவரராகிய அரத்துறைநாதர். இன் அருளால் - வழங்கிய இனிய திருவருளினால். தாங்கி - சுமந்து கொண்டு. ஏகினார் - போனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 205-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'இந்தத் திருநெல்வாயிலரத்துறையாகிய இடத்தில் அந்தச் சிவத்தலத்தில் வாழ்ந்து வரும் வேதியர்கள் இவ்வாறு போனார்கள்; அந்த இடத்தில் சண்பையாகிய சிகாழியினுடைய தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கும் அன்றைத் தினத்தில் இராத்திரி வேளையில் நல்ல முத்துப் பல்லக்கு முதலானவற்றை எடுத்துக் கொண்டு சென்று செலுத்தி வழங்குமாறு அந்த வேதியர்களுக்கு முன்னால் அரத்துறை நாதர் தெரியப்படுத்துவாரானார்.' பாடல் வருமாறு:

"இத்த லைஇவர் இன்னணம் ஏகினார்;
அத்த லைச்சண்பை நாதர்க்கும் அவ்விரா
முத்த நற்சிவி கைமுத லாயின
உய்த்த ளிக்கும் படிமுன் உணர்த்துவார்."

இத்தலை - இந்தத் திருநெல்வாயில் அரத்துறை யாகிய இடத்தில். இவர் - இவ்வாறு அந்தச் சிவத்தலத்தில் வாழ்ந்து வரும் இந்த வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இன்னணம் - இவ்வாறு; இந்த வண்ணம். ஏகினார் - போனார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அத்தலை - அந்த இடத்தில். ச் : சந்தி. சண்பை - சண்பையாகிய

சீகாழியினுடைய. நாதர்க்கும் - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கும். அவ்விரா - அன்றைத் தினத்தில் இராத்திரி வேளையில். முத்தநற்சிவிகை - நல்ல முத்துப் பல்லக்கு. முதலாயின - முதலானவற்றை. என்றது முத்துக்குடை, பலவகையான சின்னங்கள் முதலியவற்றை. உய்த்து - சென்று செலுத்தி. அளிக்கும்படி - அந்த நாயனாருக்கு வழங்குமாறு. முன் - அந்த வேதியர்களுக்கு முன்னால். உணர்த்துவார் - அரத்துறைநாதர் தெரியப் படுத்தியருளுவாரானார்.

பிறகு உள்ள 206-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சேறும் நீரும் நிறைந்திருக்கும் வயல்கள் சுற்றி விளங்கும் திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் வள்ளலாராகிய அரத்துறை நாதர், "யாம் மகிழ்ச்சியை அடைந்து வழங்கும் முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, பலவகையான சின்னங்கள் ஆகிய அவை நீ பெற்றுக்கொள்ள உரியவை ஆகும்; அவற்றை நீ எடுத்துக் கொண்டு செலுத்துதலைப் புரிவாயாக" என்று உள்ளபடி திருவாய் மலர்ந்தருளிச் செய்ய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் மேற்கொண்ட துயிலிலிருந்து விழித்து எழுந்த பிறகு.' பாடல் வருமாறு:

"அள்ளல் நீர்வயல் சூழும் அரத்துறை
வள்ள லார்,'நாம் மகிழ்ந்தளிக் கும்அவை
கொள்ள லாகும் கொண்டுய்த்தல் செய்வாய்'என
உள்ள வாறருள் செய்ய உணர்ந்தபின்."

இந்தப் பாடல் குளகம். அள்ளல் - சேறும். நீர் - நீரும் நிறைந்திருக்கும். வயல் - வயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். சூழும் - சுற்றி விளங்கும். அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். வள்ளலார் - வள்ளன்மையைப்

பெற்றவராகிய அரத்துறைநாதர். நாம் - யாம். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. அளிக்கும் - உனக்கு வழங்கும். அவை - முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, பலவகையாக உள்ள சின்னங்கள் ஆகிய அவை. கொள்ளலாகும் - நீ பெற்றுக் கொள்ள உரியவை ஆகும். கொண்டு - அவற்றை நீ எடுத்துக் கொண்டு. உய்த்தல் - செலுத்துதலை. செய்வாய் - புரிவாயாக. என - என்று; இடைக்குறை. உள்ளவாறு - உள்ளபடி. அருள் செய்ய - அரத்துறைநாதர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் துயிலும் பொழுது அவர் கண்ட சொப்பனத்தில் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. உணர்ந்த - அந்த நாயனார் தாம் மேற்கொண்டிருந்த துயிலிலிருந்து விழித்து எழுந்த. பின் - பிறகு.

பிறகு வரும் 207-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சண்பையாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தாம் பார்த்த உண்மையாகிய அரத்துறை நாதர் வழங்கிய திருவருளினுடைய குணத்தைத் தம்முடைய தந்தையாராகிய சிவபாத இருதயரோடு பக்கத்தில் தங்கிக் கொண்டிருக்கும் திருத்தொண்டர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு அரத்துறை நாதரை வணங்குவதற்கு முன்பே ஆகாயம் தெளிவாகப் புலப்படுமாறு வீங்கிப் பரந்த இருட்டு அகன்றவுடன்.' பாடல் வருமாறு:

"சண்பை ஆளியார் தாம்கண்ட மெய்யருட்
பண்பு தந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்ட ருக்கருள் செய்து தொழாமுனம்
விண்பு லப்பட வீங்கிருள் நீங்கலும்."

இந்தப் பாடலும் குளகம். சண்பை - சண்பையாகிய சீகாழியை. ஆளியார் - ஆட்சி புரிந்தருளுபவராகிய

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தாம் கண்ட - தாம் பார்த்த. மெய் - உண்மையாக உள்ள. அருள் - அரத்துறை நாதர் வழங்கிய திருவருளினுடைய. பண்பு - குணத்தை. என்றது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு அரத்துறை நாதர் முத்துப் பல்லக்கையும், முத்துக் குடையையும், பல வகையான சின்னங்களையும் வழங்கியருளியதை. தந்தையார் தம்முடன் - தம்முடைய தகப்பனாராகிய சிவபாத இருதயரோடு. தம்: அசைநிலை. பாங்கு - தம்முடைய பக்கத்தில். அமர் - தங்கிக் கொண்டிருக்கும். தொண்டருக்கு - திருத்தொண்டர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அருள் செய்து - திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. தொழா முனம் - அரத்துறை நாதரைத் தாம் வணங்குவதற்கு முன்பே. விண் - ஆகாயம். புலப்பட - தெளிவாகப் புலப்படுமாறு. வீங்கு - வீங்கிப் பரவிய. இருள் - இராத்திரி நேரத்தில் இருந்த இருட்டு. நீங்கலும் - அகன்றவுடன்.

பின்பு உள்ள 208-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செவ்வந்தி மாலை நேரம், நடுச்சாமம், விடிகிற விடியற்கால நேரம் ஆகிய வேளைகளில் தாம் பணி செய்யும் வேலைகளைச் செய்து நிறைவேற்றிவிட்டு வெண்மையான விபூதியைப் பூசிக் கொண்டிருக்கும் அழகைப் பெற்ற திருமேனியை உடையவராய்த் தம்முடைய திருக்கரங்களாகிய செந்தாமரை மலர்களைத் தம்முடைய தலையின்மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டுப் பிறகு தரையில் விழுந்து அரத்துறைநாதரை வணங்கிவிட்டு அப்பால் பொருந்துமாறு ந, ம, சி, வா, ய என்ற ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை ஓதிக் கொண்டு தரையிலிருந்து எழுந்தார்.' பாடல் வருமாறு:

"மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி
கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்
தேல அஞ்செழுத் தோதி எழுந்தனர்."

மாலை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செவ்வந்தி மாலை நேரம். யாமம் - நடுச் சாமமாகிய நள்ளிரவு. புலர்வுறும் - விடியும். வைகறை - விடியற் கால நேரம். வேலை செய் - ஆகிய வேலைகளில் தாம் பணி புரியும். வினை - வேலைகளை; ஒருமை பன்மை மயக்கம். முற்றி - செய்து நிறைவேற்றிவிட்டு. வெண் - வெண்மை யாக உள்ள. நீறு - விபூதியை. அணி - பூசிக்கொண்டிருக்கும். கோல - அழகைப் பெற்ற. மேனியராய் - திருமேனியை உடையவராகி. க்: சந்தி. கை - தம்முடைய திருக்கரங் களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ம்: சந்தி. மலர் - செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். குவித்து - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து அரத்துறை நாதரை வணங்கி விட்டு அப்பால் தரையிலிருந்து. ஏல - பொருந்துமாறு. அஞ்சு எழுத்து - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து : ஒருமை பன்மை மயக்கம். ஓதி - ஓதிக்கொண்டு. எழுந்தனர் - எழுந்தார்.

அடுத்து வரும் 209-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அறிவையும், சிவஞானத்தையும் பெற்றவரும், புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய பரிசுத்தரும் ஆகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைக் குளிர்ச்சியைப் பெற்ற முத்துக்களால் அமைக்கப் பெற்ற பல்லக்கின் மேல் ஏற்றி விடுவதற்கு விருப்பத்தைக்

கொண்டவனைப் போல கருமையாகிய கிழக்குச் சமுத்திரத்தின் மேல் ஏழு பச்சைக் குதிரைகளைப் பூட்டியிருக்கும் தன்னுடைய இரதத்தின் மேல் ஏறிக்கொண்டு வந்து வெம்மையாகிய கிரணங்களை வீசும் சூரியன் சேர்ந்தான்.' பாடல் வருமாறு:

"போத ஞானப் புகலிப் புனிதரைச்
சீத முத்தின் சிவிகைமேல் ஏற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடல்
மீது தேரின்வந் தெய்தினன் வெய்யவன்."

போத - அறிவையும். ஞான - சிவஞானத்தையும் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். ப்: சந்தி. புகலி - புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய. ப்: சந்தி. புனிதரை - பரிசுத்தரும் ஆகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை. ச்: சந்தி. சீத - குளிர்ச்சியைப் பெற்ற. முத்தின் - முத்துக்களால் அமைக்கப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சிவிகை மேல் - பல்லக்கின் மேல். ஏற்றிட - ஏற்றி விடுவதற்கு. க்: சந்தி. காதல் - விருப்பத்தை. செய்பவன் போல - கொண்டிருப்பவனைப் போல. க்: சந்தி. கருங்கடல்மீது - கருமையாகிய கிழக்குச் சமுத்திரத்தின் மேல். தேரின் - ஏழு பச்சைக் குதிரைகளைப் பூட்டி யிருக்கும் தன்னுடைய இரதத்தின் மீது. வந்து - ஏறிக்கொண்டு வந்து. வெய்யவன் - வெம்மையாகிய கிரணங்களை வீசும் சூரியன். எய்தினன் - சேர்ந்தான்.

பின்பு உள்ள 210-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அத்தகையதாகிய முற்பகல் நேரத்தில் ஹரஹர என்னும் முழக்கத்தோடு பரிசுத்தமாக உள்ள முத்துக்களால் அமைக்கப் பெற்ற பல்லக்கு, ஒளியை வீசும் முத்துக்குடை, மேவிய பலவகையான சின்னங்கள் ஆகிய இவற்றை

எடுத்துக் கொண்டு உண்மையான அரத்துறைநாதருடைய பக்தர்களோடு கூடிய வேதியர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முன்பு காட்சி அளித்தார்.' பாடல் வருமாறு:

"ஆய போழ்தின் அரவெனும் ஆர்ப்புடன்
தூய முத்தின் சிவிகை சுடர்க்குடை
மேய சின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ
டேய அந்தணர் தாமெதிர் தோன்றினார்."

ஆய - அத்தகையதாகிய. போழ்தின் - முற்பகல் நேரத்தில். அர - ஹரஹர. எனும் - என்னும்; இடைக்குறை. ஆர்ப்புடன் - முழக்கத்தோடு. தூய - பரிசுத்தமாக உள்ள. முத்தின் - முத்துக்களால் அமைக்கப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சிவிகை - பல்லக்கு. சுடர் - ஒளியை வீசும். க்: சந்தி. குடை - முத்துக்குடை. மேய - மேவிய. சின்னங்கள் - பலவகையாக உள்ள சின்னங்கள். கொண்டு - ஆகிய இவற்றை எடுத்துக் கொண்டு. மெய் - உண்மையான. அன்பரோடு - அரத்துறை நாதருடைய பக்தர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். ஏய - கூடிய. அந்தணர்தாம் - வேதியர். தாம்: அசை நிலை. எதிர் - ஞானசம்பந்தருடைய சந்நிதியில். தோன்றினார் - காட்சி அளித்தார்.

அடுத்து வரும் 211-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு வந்து தோன்றிய வேதியர் பெருமையைப் பெற்று விளங்கும் தவத்தைப் புரிந்தவராகிய, நறுமணம் கமழும் பலவகை மரங்கள் வளர்ந்து நிற்கும் நீண்ட பூஞ்சோலையைப் பெற்ற நல்ல சீகாழியை உடைய நாட்டில் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு முன்னால், "முடிவு இல்லாத சீர்த்தியைப் பெற்ற திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் முதல் வராகிய அரத்துறை

நாதர் வழங்கிய பெருமையைப் பெற்றுத் திகழும் திருவருளால் வந்த முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, பலவகையான சின்னங்கள் ஆகியவற்றைத் தேவரீர் தாங்கியருள்வீராக'' என்று கூறினார்கள்.' பாடல் வருமாறு:

''வந்து தோன்றிய அந்தணர் மாதவர்
கந்த வார்பொழில் காழிநன் னாடர்முன்
'அந்த மில்சீர் அரத்துறை ஆதியார்
தந்த பேரருள் தாங்குவீர்' என்றனர்.''

வந்து தோன்றிய - அவ்வாறு எழுந்தருளி வந்து தோன்றிய. அந்தணர் - வேதியர்கள். மா - பெருமையைப் பெற்று விளங்கும். தவர் - தவத்தைப் புரிந்த. கந்தவார் பொழில் - நறுமணம் கமழும் பலவகையாக உள்ள மரங்கள் வளர்ந்து நிற்கும் நீண்ட பூஞ்சோலையைப் பெற்ற. காழிநன்நாடர் - சீகாழியை உடைய சோழநாட்டில் திருவவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு. முன் - முன்னால். அந்தம் - முடிவு. இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். ஆதியார் - எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அரத்துறைநாதர். தந்த - வழங்கிய. பேரருள் - பெருமையைப் பெற்றுத் திகழும் திருவருளால் கிடைத்த முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, பலவகையாக உள்ள சின்னங்கள் ஆகியவற்றை; ஆகு பெயர். தாங்குவீர் - தேவரீர் தாங்கியருள்வீராக. என்றனர் - என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 212-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள் அவ்வாறு தங்களுக்கும் பரமேசுவரராகிய

அரத்துறைநாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த வார்த்தைகள் ஒன்றையும் அந்த இடத்தில் விட்டுவிடாமல் கூறிவிட்டு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு முன்னால் நின்று கொண்டு அந்த நாயனாரை வாழ்த்தி வணங்க, ''இவ்வாறு அடியேனுக்கு முத்துப் பல்லக்கு, முத்துக் குடை, பலவகையாக உள்ள சின்னங்கள் ஆகியவை கிடைக்க நேர்ந்தது சிதம்பரத்தில் உள்ள திருக் கோயிலில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளி யிருப்பவராகிய நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளினால்'' என அந்த நாயனார் திருவாய் மலர்ந் தருளிச் செய்து விட்டு அந்த நடராஜப் பெருமானாரைப் பணிந்தார்.' பாடல் வருமாறு:

''என்று தங்களுக் கீசர் அருள்செய்த
தொன்றும் அங்கொழி யாமை உரைத்துமுன்
நின்று போற்றித் தொழுதிட 'நேர்ந்தது
மன்று ளாரருள்' என்று வணங்கினார்.''

என்று - திருநெல்வாயில் அரத்துறையில் வாழ்ந்து வரும் வேதியர்கள் அவ்வாறு என. தங்களுக்கு ஈசர் - தங்களுக்குப் பரமேசுவரராகிய அரத்துறை நாதர். அருள் செய்தது - திருவாய் மலர்ந்தருளிச் செய்த வார்த்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். ஒன்றும் - ஒன்றையும். அங்கு - அந்த இடத்தில். ஒழியாமை - விட்டு விடாமல். உரைத்து - கூறி விட்டு. முன் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு முன்னால். நின்று - நின்று கொண்டு. போற்றி - அந்த நாயனாரை வாழ்த்தி. த்: சந்தி. தொழுதிட - வணங்க. நேர்ந்தது - இவ்வாறு அடியேனுக்கு முத்துப் பல்லக்கு, முத்துக்குடை, பல வகையாக உள்ள சின்னங்கள் ஆகியவை கிடைக்க நேர்ந்தது. மன்றுளார் - சிதம்பரத்தில் உள்ள திருக்கோயிலில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருப்பவராகிய நடராஜப் பெருமானார். உளார்:

இடைக்கறை. அருள் - வழங்கிய திருவருளினால். என்று - என அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. வணங்கினார் - அந்த நடராஜப் பெருமானாரைப் பணிந்தார்.

பின்பு வரும் 213-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''எந்தை ஈசன்'' என்று தொடங்கி, ''இந்தத் திருவருள் அடியேனுக்கு வந்து கிடைத்தவாறு எந்த வண்ணமோ?'' எனத் தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணிப் பாடியருளும் ஒரு திருப்பதிகத்தில் உள்ள பண்ணினை தம்முடைய அறிவு திருப்தியடையுமாறு பாடியருளி அந்த அரத்துறை நாதருடைய சந்நிதியில் நின்று கொண்டு அந்த நாதரை வாழ்த்தி வணங்குபவரானார்.' பாடல் வருமாறு:

'' 'எந்தை ஈசன்' எனஎடுத் 'திவ்வருள்
வந்த வாறுமற் றெவ்வண மோ?' என்று
சிந்தை செய்யும் திருப்பதி கத்திசை
புந்தி யாரப் புகன்றெதிர் போற்றுவார்.''

'எந்தை ஈசன்' என எடுத்து - 'எந்தை ஈசன்' என்று தொடங்கி. என: இடைக்குறை. இவ்வருள் - இந்த அரத்துறைநாதர் வழங்கிய திருவருள். வந்தவாறு - அடியேனுக்கு வந்து கிடைத்தவாறு. மற்று: அசை நிலை. எவ்வணமோ - எந்த வண்ணமோ? வணம்: இடைக்குறை. என்று - என. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். செய்யும் - எண்ணிப் பாடியருளும். திருப்பதிகத்து - ஒரு திருப்பதிகத்தில் உள்ள. இசை - பண்ணினை. புந்தி - தம்முடைய அறிவு. ஆர - திருப்தியை அடையுமாறு. புகன்று - பாடியருளி. எதிர் - அந்த அரத்துறைநாதருடைய சந்நிதியில் நின்று கொண்டு. போற்றுவார் - அந்த நாதரை வாழ்த்தி வணங்குவாரானார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட பாசுரம் பியந்தைக் காந்தாரப் பண்ணில் திருநெல்வாயில் அரத்துறையைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியது. அந்த பாசுரம் வருமாறு:

"எந்தை ஈசன் எம்பெருமான்
ஏறுமர் கடவுள்ளன் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால்
சென்றுகை கூடுவ தன்றால்
கந்தமா மலருந்திக் கடும்புனல்
நிவா மல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில்
அரத்துறை அடிகள் தம்அருளே."

பின்பு உள்ள 214-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், "இவ்வாறு முத்துப் பல்லக்கு முதலியவை அடியேனுக்குக் கிடைத்த இந்தப் பேறு விபூதியைப் பூசிக் கொண்ட பழையவனாகிய திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சுவாமி களாகிய அரத்துறை நாதர் வழங்கிய திருவருளால் கிடைத்ததே ஆகும்" என்று எண்ணி ஒப்பு இல்லாத சொற்கள் அடங்கிய மாலைகளாகிய பல திருப்பதிகங் களைப் பாடியருளி நீண்ட நேரமாக அந்த அரத்துறை நாதரை வணங்கிவிட்டு அந்தத் திருப்பதிகத்தை நிறைவேற்றினார்.' பாடல் வருமாறு:

" 'பொடிஅ ணிந்த புராணன் அரத்துறை
அடிகள் தம்மரு ளேஇது வாம்'எனப்
படியி லாதசொல் மாலைகள் பாடியே
நெடிது போற்றிப் பதிகம் நிரப்பினார்."

இது - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் இவ்வாறு முத்துப் பல்லக்கு முதலியவை அடியேனுக்குக் கிடைத்த இந்தப் பேறு. பொடி - விபூதியை. அணிந்த - பூசிக் கொண்ட. புராணன் - பழையவனாகிய. அரத்துறை - திருநெல்வாயில் அரத்துறையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். அடிகள் தம் - சுவாமிகளாகிய அரத்துறை நாதர். தம்: அசை நிலை. அருளே - வழங்கிய திருவருளால் கிடைத்ததே. ஆம் - ஆகும். என - என்று எண்ணி; இடைக்குறை. ப்: சந்தி. படி - ஒப்பு. இலாத - இல்லாத; இடைக்குறை. சொல் - சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். மாலைகள் - மாலைகளாகிய பல திருப்பதிகங்களை. பாடி - பாடியருளி. ஏ: அசை நிலை. நெடிது - நெடு நேரமாக. போற்றி - அந்த அரத்துறை நாதரை வாழ்த்தி வணங்கிவிட்டு. ப்: சந்தி. பதிகம் - அந்தத் திருப்பதிகத்தை. நிரப்பினார் - பாடியருளி நிறைவேற்றினார்.

பிறகு வரும் 215-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''உண்மையைப் பாதுகாத்து அதை விட்டு விடாத விருப்பத்தோடு தம்மைத் தியானிக்கும் இயல்பை வழங்கியருளி அடியேனை ஆளாகக் கொள்பவராகிய அரத்துறைநாதர் சிறப்பைப் பெற்ற முத்துக்களால் செய்யப் பெற்ற பல்லக்காகிய வாகனமாகிய சிறந்த பொருளை அடியேனுக்கு வழங்கியருளும் முத்துப் பல்லக்கு, முத்துக் குடை, பலவகையாக உள்ள சின்னங்கள் ஆகியவற்றை எம்மை வேண்டி மகிழ்ச்சியைக் கொண்டு இன்றைக்கு வழங்கியதே.' பாடல் வருமாறு:

> ''மெய்ம்மை போற்றி விடாத விருப்பினால்
> தம்மை உன்னும் பரிசுதந் தாள்பவர்
> செம்மை நித்தில யானச் சிறப்பருள்
> எம்மை ஆளுவப் பானின் றளித்ததே.''

மெய்ம்மை - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் உண்மையை. போற்றி - பாதுகாத்து. விடாத - அதை விட்டு விடாத. விருப்பினால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். 'தம்மை' என்றது 'அரத்துறைநாதர்' என்பதை. உன்னும் - தியானம் புரியும். பரிசு - இயல்பை. தந்து - வழங்கியருளி. ஆள்பவர் - அடியேனை ஆளாகக் கொள்பவராகிய அரத்துறைநாதர். ஆள் - அடிமை. செம்மை - சிறப்பைப் பெற்ற. நித்தில - முத்துக்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். யான - பல்லக்காகிய வாகனம் என்னும். சிறப்பு - சிறந்த பல்லக்கு, முத்துக் குடை, பலவகையாக உள்ள சின்னங்கள் ஆகியவை; ஆகுபெயர். எம்மை - அடியேங்களை; இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. ஆள் - ஆட்களாக ஏற்றுக் கொண்டு; ஒருமை பன்மை மயக்கம். உவப்பான் - மகிழ்ச்சியை அடையவேண்டி அரத்துறைநாதர். இன்று - இன்றைக்கு. அளித்ததே - வழங்கியருளியவையே ஆகும்; ஒருமை பன்மை மயக்கம்.

அவ்வாறு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருநெல்வாயில் அரத்துறையைப் பற்றித் தாம் பாடியருளிய திருப்பதிகத்தை நிறைவேற்றிய இறுதிப் பாசுரம் வருமாறு:

"கறையி னார்பொழில் சூழ்ந்த
காழியுள் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த
அரத்துறை அடிகள்தம் அருளை
முறைமை யாற்சொன்ன பாடல்
மொழியும் மாந்தர்தம் வினைபோய்ப்
பறையும் ஐயுற வில்லை
பாட்டிவை பத்தும்வல் லார்க்கே."

திருநெல்வாயில் அரத்துறையைப் பற்றி இந்தளப் பண்ணில் அந்த நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''புடையி னாற்புள்ளி கால பொருந்திய
படையி னார்மணி நீர்நெல் வாயிலார்
நடையி னால்பிறற் கோவ ணத்தயன்
துடையி னார்எம துச்சி யாரோ.''

பிறகு வரும் 216-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஒளி வெள்ளத்தை வீசும் முத்துக்களால் அமைக்கப்பெற்ற பல்லக்கைச் சுற்றி வலமாக வந்து தரையின் மேல் விழுந்து அந்தப் பல்லக்கை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு வெம்மையாக உள்ள விபூதியி னுடைய பிரகாசத்தை வாழ்த்திவிட்டு, தேவர்களுக்கும் முதல் தேவராகிய அரத்துறைநாதர் வழங்கிய திருவருளால் வந்தது ஆகையால் ந, ம, சி, வா, ய என்று ஐந்து எழுத்துக்களை ஓதி இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் எல்லாரும் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் அந்த முத்துப் பல்லக்கின்மேல் ஏறிக்கொண்டருளினார்.' பாடல் வருமாறு:

''சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றாதி யார்அரு ளாதலின் அஞ்செழுத்
தோதி ஏறினார் உய்ய உலகெலாம்.''

சோதி - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஒளிவெள்ளத்தை வீசும். முத்தின் - முத்துக்களால் அமைக்கப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சிவிகை - பல்லக்கை. சூழ்வந்து - சுற்றி வலமாக வந்து. பார்மீது -

தரையின்மேல். தாழ்ந்து - விழுந்து அந்தப் பல்லக்கை வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. வெண் - வெண்மையாக உள்ள. நீற்று - விபூதியினுடைய. ஒளி - பிரகாசத்தை. போற்றி - வாழ்த்திவிட்டு. நின்று - நின்று கொண்டு. ஆதியார் - அந்த முத்துப்பல்லக்கு முதலியவை தமக்குக் கிடைத்தது எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அரத்துறை நாதர். அருள் - திருவருளால் வழங்கி. ஆதலின் - ஆகையால். அஞ்சு எழுத்து - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். ஓதி - ஓதிவிட்டு. உலகு - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். ஏறினார் - அந்த முத்துப் பல்லக்கின் மேல் ஏறிக் கொண்டருளினார்.

'உலகெலாம்' என்னும் சொற்றொடர் இறைவன் திருத்தொண்டர் புராணத்துக்கு முதலாகக் கொடுத்தது - அதனை இப்புராண முதற்பாட்டில் முதற்சொற்றொடராக அமைத்தது மட்டுமன்றி இப் புராணத்தின் இடையிலும் இறுதியிலும் அமைத்தார். இடையில் அமைத்தது இங்கு: 4286 பாடல் உள்ள இப் புராணத்தில் இது 2219-ஆம் பாடல் ஆதலின் ஒரளவுக்கு இடை ஆயிற்று.

### வம்பறா வரி வண்டுச் சருக்கம்

## திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் புராணம்

### முதற்பகுதி 1-216 வரை உள்ள செய்யுள்கள்

சோழ நாட்டில் சீர்காழி என்னும் திருப்பதியில் அருமறை வல்ல அந்தணர் குல சிகாமணியாகிய சிவபாத இருதயருக்கும் - அவர் தம் கற்பின் வழாப் பொற்புடைத் துணைவியார் பகவதியாருக்கும் இறைவன் திருவருளால் சைவ வைதிகம் தழைக்க, தமிழ் செய்த தவம் நிரம்ப, தென் திசை வென்றேற, தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறைவெல்ல, சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தருளினார்.

உரிய சடங்குகள் அவ்வப்போது செய்விக்கப் பெற்றுக் குழவிப்பருவத்தே விளையாட்டயர்ந்தார். மூன்றாவதாண்டு வந்து எய்தியது. ஒரு நாள் தந்தையார் சிவபாத இருதயர் காலை நியமம் முடித்தற்கு நீர்த்துறையில் முழுகுவதற்குச் சென்றார். அவரைப் பின் தொடர்ந்து அழுது பற்றினார் பிள்ளையார். உடன் கொண்டேகினார் தந்தையார்.

பிள்ளையாரைக் கரையில் வைத்துக்குளத்தில் இறங்கி முழுகினார் தந்தையார். தந்தையாரைக் காணாத பிள்ளையார் திருத்தோணிச் சிகரம் பார்த்து 'அம்மே அப்பா' என அழுதார். சிவபெருமான் உமாதேவியாரோடு வானிடை விடைமேல் எழுந்தருளி குளத்தின் அருகில் வந்தார்.

அழுகின்ற பிள்ளையாரைப் பார்த்தார். தம் அருகிருக்கும் அம்மையைப் பார்த்து, 'நின்திரு முலைப்பாலைப் பொன் வள்ளத்துப் பெய்து குழந்தையை உண்பிக்க' என்று அருளினார்.

சிவஞானத்தோடு இனிய பாலைக் குழைத்தருளி உண்க என அம்மையார் ஊட்ட உண்டு தேக்கெறிந்தார் பிள்ளையார். இறைவனும் இறைவியும் தந்தையும் தாயுமாக இருந்து ஊட்டியபடியால் 'ஆளுடைய பிள்ளையார்' எனப் பெற்றார் - இப்போது சிவஞான சம்பந்தர் ஆனார்.

சிவஞானம், பவமறும் ஞானம், கலைஞானம், மெய்ஞ்ஞானம், ஆகிய பல்வகை ஞானங்களையும் தவமுனிவராய சம்பந்தர் அந் நிலையில் உணர்ந்தார்.

குளத்தின்கண் முழுகிக் கரையேறிய தந்தையார் கடைவாய் வழி பால் சோர நின்ற பிள்ளையாரைக் கைச் சிறிய கோல்கொண்டு ஓச்சி, நெருங்கினார்.

பேருணர்வில் பொலிகின்ற பிள்ளையார் ஒரு காலைத் தூக்கி, உச்சியினில் எடுத்தருளும் ஒரு திருக்கைச் சுட்டு விரலால் வானிடை மழவிடைமேல் பொன்மலை வல்லியுடன் உள்ள சிவபெருமானைக் காட்டி ஞானமொழி யால் ''தோடுடைய செவியன்'' எனத் தொடங்கித் தம் 'உள்ளம் கவர் கள்வன்' இவனே எனக் காட்டித் திருப்பதிகம் பாடித் திருமுறையாகிய தேவாரத்தைத் தொடங்கி வைத்தார்.

காழிநகரார் எதிர்கொண்டு வரவேற்கக் காழிநகர்ப் பெருமானை வணங்கித் திருக்கோயிலைச் சென்று வழிபட்டார். கையால் தாளமிட்டுப் பாட கோலக்கா இறைவர் திருவருளால் பொற்றாளங்கள் அவர் கையகத்தே வந்து சேர்ந்தன.

பிள்ளையார் தமது தாயார் அவதரித்த திருப் பதியாகிய திருநனிபள்ளியுள்ளார் வரவேற்கச் சென்று 'நனிபள்ளி உள்குவார்தம் பேரிடர் கெடுதற்கு ஆணை நமது' எனத் திருக்கடைக்காப்புடன் பதிகம் பாடினார்.

திருவலம்புரம் வழிபட்டு, பல்லவனீச்சரம் பணிந்து போற்றிப் பரவி, திருச்சாய்க்காடு வணங்கிப் பாடினார். திருவெண்காடு சென்றார். 'கண்காட்டு நுதல்' எனும் பதிகத்தில் முக்குளத்தைச் சிறப்பித்துப் பாடினார்.

திருமுல்லைவாயில் சென்றார். செந்தமிழ் பாமாலை சாத்தி வழிபட்டார். சீர்காழி வந்து சேர்ந்தார். திருமயேந்திரப் பள்ளி, திருக்குருகாவூர், திருமுல்லை வாயில் முதலிய பதிகளை வழிபட்டார்.

திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர்தம் மனைவி யார் மதங்க சூளாமணியாரும் சீர்காழி வந்து சேர்ந்தனர். அவர்கள் வரவறிந்து பிள்ளையார் வரவேற்க அவர்களும் மகிழ்ந்தனர். தாம் பாடிய பதிக இசையைப் பாணரை யாழில் இயற்றி இறைவனை உகப்பிக்க வேண்டினார் பிள்ளையார். பாணரது யாழிசையும், பிள்ளையாரது மிடற்றிசையும் ஒன்றி இறைவற்கு மிகுந்த மகிழ்ச்சி ஆயிற்று.

அன்று முதல் பிள்ளையார் செல்லும் தலம் எல்லாம் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் ஒன்றிச் சென்று யாழிசை யில் பதிக இசையை ஒன்ற பாடி வருவாராயினர்.

கொள்ளிடத் திருநதி கடந்து திருஞான சம்பந்தர் திருத்தில்லை சூழ் எல்லை பணிந்தனர். அந்தணரும், அன்பர்களும் வரவேற்க தென்திசைத் திருவாயில் வழியாக உள்புகுந்து வணங்கினர்.

தில்லைவாழ் அந்தணரை முன்வைத்துத் திருப்பதிக இசைபாடி வணங்கினார். பின்னர்ப் பிரியா விடை பெற்றுத்

திருவேட்களம், திருக்கழிப்பாலை வணங்கிப் பாடி மீண்டும் தில்லை வந்தடைந்தார். தில்லை வாழந்தணர் மூவாயிரவரும் இறைவற்குத் தொண்டு பூண்டொழுகும் கணநாதராய்க் காட்சியளிக்கக் கண்டு வழிபட்டார் மீண்டும் பிள்ளையார். தில்லைப்பெருமானை வழிபட்டுப் பதிகம் பாடினார்.

நிவாநதியின் கரைவழியே சென்று, திருவெருக்கத் தம் புலியூர் (திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவதாரத் தலம்), திருமுதுகுன்றம், வழிப்பட்டு பெண்ணாகடம் சென்று திருத்தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தைப் பரவிப் போற்றித் திருநெல்வாயில் அரத்துறை சேர்கின்றார்.

பிள்ளையார் திருவரத்துறை வருகிறபோது அவர்தம் பாதங்கள் வருந்தின. பொருட்படுத்தாது விரைந்தார் சம்பந்தர். மாறன்பாடி எனும் பதி வந்தது. ஆறு செல்வருத்ததால் இளைப்பாறத் தங்கினார்.

இந்நிலையை அரத்துறைநாதர் திருவுளஞ் செய்தார். சம்பந்தப் பிள்ளையார் ஏறியருளச் சிவிகை, பிடிக்கக் குடை, ஊதச்சின்னம் இவற்றை முத்தினாற் பொலியச் செய்து தரத் திருவுளம் பற்றினார். திருநெல்வாயில் அரத்துறை அந்தணர் தம் கனவில் தோன்றி ''ஞானசம்பந்தன் நம்பால் அணை கின்றான். முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் இவற்றை நம்பால் பெற்று அவர்க்குச் சேர்ப்பியுங்கள்' என்று சொன்னார்.

மறையவர் வைகறையில் திருக்கோயில் சென்று திருக்கடைக்காப்பு நீக்கிய அளவில் இறைவன் திருவரு ளால் முத்தால் ஆகிய பல்லக்கு, குடை, சின்னம் ஆகியவற்றைக் கண்டனர். அவற்றைச் சுமந்து கொண்டு சம்பந்தரை வரவேற்கப் புறப்பட்டனர்.

இறைவன் சம்பந்தர்க்கும் தாம் தந்தனவற்றை ஏற்கும் படி அருளிச் செய்து அதுகேட்டு தந்தையார்க்கும் அன்பர்கட்கும் தெரிவித்து வணங்கினார் பிள்ளையார்.

காலை மலர்ந்தவுடன் அஞ்செழுத்தோதி மாறன்பாடி யிலிருந்து புறப்பட்டார். சூரியோதயம் ஆயிற்று. அரத்துறை வேதியர் சம்பந்தர் முன்தோன்றி இறைவன் அருளிய இவற்றை ஏற்றுக் கொள்க என வேண்டினார்.

அதுகேட்ட ஞானசம்பந்தப் பெருமான் 'மன்றுள் ஆடும் மாநடராசப் பெருமான் திருவருள் இது' என்று சொல்லி வணங்கினார்.

''எந்தை ஈசன்'' எனத்தொடங்கும் திருப்பதிகம் பாடித் திருவருளைப் போற்றிப் பரவி ''அரத்துறை அடிகள்தம் அருள்'' என்று வாழ்த்தினார்.

ஒளிபடைத்த முத்துக்களால் ஆகிய பல்லக்கைச் சுற்றி வந்து நிலத்திடை விழுந்து வணங்கி எழுந்து திரு நீற்றொளியைப் போற்றி நின்று, சிவபெருமான் திருவருளால் வந்தது ஆதலின் திருவைந்தெழுத்தை ஓதி இந்த உலகெலாம் உய்யும் வண்ணம் ஞானசம்பந்தப் பெருமான் முத்துச் சிவிகையின் மேல் ஏறியருளினார்.

என்பது இப்பகுதியின் வரலாற்றுச் சுருக்கம்

மேல் திருஞானசம்பந்தர் புராணம் 217-ஆம் பாடல் அடுத்த பகுதியில் தொடர்கிறது. செய்யுள் தொடர் எண் 2119.



# கி.வா.ஜ. நூற்றாண்டு வெளியீடுகள்

1. நவக்கிரகங்கள்
2. கி.வா.ஜ. பதில்கள் - 3 பாகங்கள்
3. பெரிய புராண விளக்கம் - 10 பகுதிகள்
4. எல்லாம் தமிழ்
5. இலங்கைக் காட்சிகள்
6. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
7. முந்நீர் விழா
8. தமிழ் நூல் அறிமுகம்
9. நல்ல சேனாதிபதி
10. கரிகால் வளவன்
11. கற்பக மலர்
12. காவியமும் ஓவியமும்
13. குமரியின் மூக்குத்தி
14. பயப்படாதீர்கள்
15. அன்பு மாலை
16. திரு அம்மானை
17. பவள மல்லிகை
18. சுதந்திரமா!
19. சிலம்பு பிறந்த கதை
20. சகல கலா வல்லி
21. புகழ் மாலை
22. பேசாத பேச்சு
23. பெரும் பெயர் முருகன்
24. சங்க நூற் காட்சிகள் - 2 பாகங்கள்
25. அற்புதத் திருவந்தாதி
26. வளைச் செட்டி
27. வீரர் உலகம்
28. புது டைரி
29. திருவெம்பாவை
30. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - 7 பாகங்கள்
31. திருமுறை மலர்கள்–3 பாகங்கள்
32. விளையும் பயிர்
33. அழியா அழகு
34. நாடோடி இலக்கியம்
35. அப்பர் தேவார அமுது
36. பல்வகைப் பாடல்கள்
37. கதை சொல்கிறார் கி.வா.ஜ.
38. அதிசயப் பெண்
39. கந்தவேள் கதையமுதம்
40. கதிர்காம யாத்திரை
41. ஏற்றப் பாடல்களும் தொழிற் பாடல்களும்
42. முருகன் பெருமை
43. புது மெருகு
44. வாழும் தமிழ்
45. தமிழ்க் காப்பியங்கள்
46. கண்டறியாதன கண்டேன்
47. நல்ல பிள்ளையார்
48. கஞ்சியிலும் இன்பம்
49. முல்லை மணம்
50. மச்சு வீடு
51. குழந்தை உலகம்
52. கலைஞன் தியாகம்
53. ஞான மாலை
54. வாழ்க்கை சூழல்
55. வழிகாட்டி
56. கி.வா.ஜ. பேசுகிறார்
57. மனிதப் பறவை
58. மருமகள் (அ) மன்மதன் காதலி
59. சித்திர மேகலை
60. கலைச் செல்வி
61. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும்
62. அறுந்த தந்தி
63. திருமுருகாற்றுப் படை விளக்கம்
64. அபிராமி அந்தாதி (மூலமும் உரையும்)
65. அபிராமி அந்தாதி - 4 தொகுதிகள்
66. வாருங்கள் பார்க்கலாம்
67. நாம் அறிந்த கி.வா.ஜ. (அனந்தன்)
68. கிராமியப் பாடல்கள்
69. கன்னித் தமிழ்
70. கோவூர்க் கிழார்
71. தமிழின் வெற்றி
72. பாரிவேள்
73. அதிகமான் நெடுமான் அஞ்சி
74. தமிழ் வையை
75. ஆலைக் கரும்பு
76. தமிழ்ப் பழமொழிகள் - 4 பாகங்கள்
77. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
78. அநுபூதி விளக்கம் - 2 பகுதிகள்

கலா நிலையம், மயிலாப்பூர் சென்னை 4